சுபகிருது, ஆனி மீ 10உ

கல்கி

ஜூன், 24, 1962

# பொருளடக்கம்



''கல்கி''யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.



மலர் 21

தமிழ்த்திரு நாடுதன்னைப் — பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்

இதழ் 49

# வெந்த புண்ணிலே வேல்

"நாட்டின் பொருளாதார நிலை சிறப்புற வேண்டுமானால் மக்கள் இன்னும் அதிகமாகச் சேமிக்க வேண்டும்" என்று நிதிமந்திரி ஸ்ரீ மொரார்ஜி தேசாய் அவர்கள் 'அறைகூவல்' விடுத்திருக்கிறார். வாஸ்தவம்தான். மக்களின் சேமிப்பிலிருந்துதான் மூலதனம் உண்டாகிறது. அதைக் கொண்டுதான் முதலீடுகள் செய்து நாட்டில் உழவையோ தொழிலையோ வளர்த்துப் பொருளாதாரத்தில் மேம்பாடு காண முடியும்.

ஆனால் இவ்வாறு மக்களின் சேமிப்புப் பெருகுவதற்குக் கனம் மந்திரி அவர்கள் சிறிதேனும் வழி வகைகள் செய்திருக்கிறாரோ? 'நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக' வரிகளை விதித்து மக்களின் வருமானத்தில் பெரும் பகுதியைச் சர்க்கார் கஜானாவில் கொட்டச் செய்து வருகிறார் அவர். அதன்மூலம் மக்களின் சேமிக்கக் கூடிய வாய்ப்பை மேலும் குறைத்து வருகிறார்.

பொதுவாக மக்களுடைய வருமானம் குறையக் குறைய அவர்கள் பண்டங்களைக் குறைவாக உபயோகப்படுத்தத் தொடங்குவார்கள். இந்தியா போல வாழ்க்கைத் தரம் மிகவும் தாழ் நிலையிலுள்ள நாடுகளில் மக்கள் நீத்துவிடக்கூடிய பண்டங்கள் மிகச் சிலவே. எனவே அவர்கள் எப்பாடுபட்டேனும் வாழ்க்கைக்கு அத்தியாவசியமான பொருட்களை வாங்கித்தான் தீரவேண்டும். இதனால் அவர்கள் சேமிக்கக்கூடிய தொகை சிறுத்துக் கொண்டே வரும். வரிகளின் காரணமாக மக்கள் கைவசமுள்ள திரவியத்தைக் குறைப்பதோடு, பணவீக்கத்தின் மூலம் அவர்கள் வாங்கும் பொருட்களின் விலையையும் ஏகத்தாறாக உயர்த்தி யிருக்கிறது காங்கிரஸ் அரசாங்கம். இந்தக் கொடிய நிலையில் அவர்களுடைய சேமிப்பை உயர்த்தும்படி சொல்ல நிதிமந்திரிக்கு ஏது வாய்?

'வரிகள் மூலம் சர்க்கார் தமது வருமானத்தைப் பெருக்கிக் கொள்வதால் என்ன தவறு? மக்களுக்குப் பதில் சர்க்காரே முதலீடுகள் செய்து தொழிலை வளர்க்க அது உதவுமல்லவா? அதோடு ஒரு சில தனி மனிதர்கள் செல்வந்தராகாமல் பொதுத் தொழில்துறை விருத்தி அடைந்து 'சோஷலிஸ சொர்க்கம்' உருவாகவும் அதுவே உபாய மல்லவா?' என்று சிலர் எண்ணலாம். ஆனால் உண்மையில் சர்க்கார் வருமானத்தில் மிகப் பெரும் பகுதி எவ்விதத்திலும் லாபம் காட்டாத செலவினங்களில்தான் கரைகிறது. வரி போட்டெடுக்கும் சர்க்கார் வருமானத்தில் தொழில்துறை முதலீடுகள் மிகவும் குறைந்த ஒரு பகுதியே ஆகும். சென்ற பத்தாண்டுகளில் மத்திய சர்க்கார், ராஜ்ய அரசாங்கங்கள் இவற்றின் மொத்த வருமானம் 3729 கோடி ரூபாய் உயர்ந்திருக்கிறது. இதில் 652 கோடி ரூபாய் தான் - அதாவது நூற்றுக்குப் பதினேழு ரூபாய்தான் - தொழிலில் ஈடுபடுத்தப்பட்டிருக்கிறது. அதிக வரிகள் விதிக்காதிருந்தால் இந்த மூவாயிரம் கோடி ரூபாய்களையும் மக்கள் சேமித்திருப்பார்கள்; நிச்சயமாக அந்தத் தொகையை அவர்கள் உபயோகமான முறையில்தான் முதலீடு செய்திருப்பார்கள்.

மக்களுக்குப் பயன்படாத முறையில் அதிகார வர்க்கத்தைப் பெருக்கவும், மக்களுக்குத் தேவைப்படாத மூலதன, கனரகப் பொருட்களைத் தயாரிப்பதிலும் இந்தத் தொகையைச் சர்க்கார் செலவிட்டிருக்கிறது. இதில் போதிய கவனமில்லாமலும், பொறுப்பில்லாமலும் வீணடித்தது எவ்வளவோ கோடி. இவற்றையெல்லாம் தனி மனிதர்கள் தொழில் நடத்தினால் தவிர்த்திருப்பார்கள் அல்லவா? பொதுத் துறைப் பணத்தை

விரயம் செய்வதையும், நிர்வாக ஊழலை யும் பெரும் குற்றமாக்கிக் கடுமையான தண்டனை விதித்தால்தான் தற்போது சர்க்கார் செய்யும் தொழில் முதலீடுகள் பயன் தரும். இந்தத் தண்டச் செலவு களுக்காக வயிற்றையும் வாயையும் மேலும் கட்டவேண்டும் என்று மக்களைக் கேட்பது அக்கிரமமாகும்.

'பின்தங்கிய நாடுகளில் வரி விகிதம் மிகவும் குறைவாக இருக்க வேண்டும். மக்களின் சேமிப்புப் பெருக வசதி அளிக்க வேண்டும்' என்பது தான் பொருளாதார சாஸ்திரத்தின் விதி. 'மலரிலிருந்து வண்டு தேன் எடுப்பது போல, மக்களுக்கு நோகாமல் இதமாக வரிகள் ஈட்ட வேண்டும்' என்று புரா தனமான அர்த்த சாஸ்திரம் கூறுகிறது. இந்த நல்லுரைகள் நம் காங்கிரஸைப் பொறுத்த மட்டும் செவிடன் காதில் ஊதிய சங்குதான்.

வரி விதிப்புக் கொள்கை இழைக்கும் உற்பாதம் போதாதென்று பண வீக்க மும் சேர்ந்துகொண்டு, உபயோகமான இனங்களில் மக்களின் சேமிப்பு முதலீடா காமல் தடை செய்கிறது. 'பணமாக வைத்துக் கொண்டிருந்தால் அதன் மதிப்பு தினத்துக்குத் தினம் இறங்கிக் கொண்டே வரும். அதைத் தொழிலில் போடலாமென்றாலோ எந்தத் தொழி லுக்கு எப்படியெல்லாம் வரிகள் உய ருமோ?' என்ற பயத்தினால் பணக் காரர்கள் தங்கள் சேமிப்பை, நகரப் புறங்களில் வீடுகள் கட்டுவதிலும், தங்க மாக வாங்கி வைத்துக் கொள்வதிலும், வெளி நாடுகளுக்கு அனுப்புவதிலும் செலவிடுகிறார்கள். இவற்றால் நாட்டின் தொழில் துறையோ, பொருளாதார நிலைமையோ எப்படி முன்னேறும்?

யுத்த காலத்துக்கு முன்பு ரூபாய் பெற்றிருந்த மதிப்பை அளவுகோலாகக் கொண்டு கணக்கிட்டால் இன்று 53 ரூபாய்க்கு மேல் வருமானம் உள்ளவர் கள் யாவரும் வருமான வரி செலுத்து கிறார்கள் என்று பொருளாதார வல்லுநர் ஒருவர் கூறுகிறார். என்னே சோஷலிஸம்! ஏழை மக்களுக்கு எவ்வளவு ஏற்றம் அளித்திருக்கிறார்கள், பார்த்தீர்களா?

மறைமுக வரிகளை உயர்த்திக் கொண்டே வரும் வரையில் ஏழை களின் வாழ்நிலையை உயர்த்துவது பற் றிப் பேசுவது கபட வேஷம்தான். இந்த வேஷம் போடும் வேலையை ஆட்சியா ளர்கள் கைவிடுவார்களாக! மக்கள் நாட் டுக்கு உகந்த வழியில் தொழில் செய்ய மாட்டார்கள் என்பது அவர்கள் கருத்தா னால் தைரியமாகக் கம்யூனிஸ நாடுகள் போலத் தாங்களே எல்லாத் தொழில் களையும் நடத்தட்டும். மக்களின் சேமிப்பையெல்லாம் தடுக்கட்டும். மனத்தில் ஒன்றும் வாயில் ஒன்றுமாக நாடகம் நடிக்க வேண்டாம். 'சேமிப் பைப் பெருக்குங்கள்' என்று கோஷ மிடவும் வேண்டாம். பிற்காலத்துக்கு எதுவும் சேமித்து வைத்துக் கொள்ள இயலவில்லையே என்று ஏங்கும் மக்களின் நொந்த இதயத்தில் கோலை விட்டுக் கிளற வேண்டாம்.

## அயல்நாட்டு உதவி

அயல் நாடுகள் நமக்கு எந்தச் சுய நலக் கருத்தைக் கொண்டும் உதவி அளிக்கவில்லை, நாம் எவ்விதத்திலும் பந்தங்களில் சிக்கவில்லை என்று எவ்வளவு தான் நமது அரசாங்கமும் அமைச்சர் களும் மார் தட்டிப் பேசிக் கொண் டாலும், உண்மையில் வல்லரசுகளுக் கிடையே நிலவும் அரசியல் வேற்றுமை களும், சச்சரவுகளும் சந்தேகங்களுமே உதவித் திட்டங்களை உருவாக்குகின்றன. அமெரிக்க வெளிநாட்டு அமைச்சர் டீன் ரஸ்க் அவர்கள் சென்ற வாரம் அமெரிக்காவின் அயல் நாட்டு உதவி பற்றி விளக்கம் தரும்போது எந்த ஒரு நாடும் கம்யூனிஸ வலையில் விழாமல் தடுப்பதுதான் உதவியின் பிரதான நோக்கமென்று சொன்னார்.

ஆகவே அமெரிக்க உதவி, நாம் நினைப் பது போல, உட்கருத்து சிறிதும் இல்லா தது அல்ல. இதனை நமது அரசாங்கமும் அறியாதிருக்க முடியாது. வல்லரசு களுக்கு இடையே நிலவும் பகைமைச் சூழ்நிலையைப் பயன்படுத்திக் கொண்டு நாம் நமது திட்டங்களைத் தயாரித்து வருகிறோம் என்று ராஜாஜி சொல்வதன் கருத்து இதுதான்.

ருஷ்யாவிடமிருந்து எம். ஐ. ஜீ. விமா னங்கள் வாங்குவதையும் அத்தகைய விமானங்களை ருஷ்ய உதவி கொண்டே நம் நாட்டில் உற்பத்தி செய்வதையும் அமெரிக்கா விரும்பவில்லை என்பதில் ஆச்சரியம் என்ன இருக்கிறது? இதைக் காரணமாகக் காட்டியோ, அல்லது கருத்தில் கொண்டோ, இந்தியாவுக்கு அளிக்கவிருந்த உதவியை அது குறைத் தாலும் ஆச்சரியமில்லை.

நம்முடைய திட்டங்களை நிறைவேற்றி வைப்பது அந்நியர்கள் கடமை போல




சென்னையில் ஒரு பொதுக்கூட்டத்தில் பேசும் போது, ஓவர்லோட் ஏற்றி வரும் லாரிகளைத் தடுத்து நிறுத்தும் டிராபிக் போலீஸ்காரராகத் தம்மை வருணித்துக் கொண்டார் ராஜாஜி.

---

வும், அதை அவர்கள் செய்யாமல் நமக்கு நம்பிக்கைத் துரோகம் செய்து விட்டது போலவும் கருதுகிறோமே அதைக் குறித்துத்தான் உண்மையில்! நாம் ஆச்சரியப் பட வேண்டும்.

நமது திட்டங்களை வகுக்கும் போதே, அந்நியர்களிடமிருந்து இத்தனை பிரும்மாண்டமான தொகையை எதிர்பார்த்தோமே, அந்த அறியாமையைக் குறித்துத்தான் ஆச்சரியப்பட வேண்டும்.

# அவசியமற்ற ஆர்ப்பாட்டம்

தேசிய ஒருமைப்பாட்டுக் குழுவினர் தி. மு. க.வைச் சட்ட விரோதமானதெனப் பிரகடனப் படுத்தாததன் மூலம் தமது 'தாராள மனப்பான்மை'யைக் காட்டினர் அல்லவா? ஒருமைப்பாட்டுக் குழுக் கூட்டம் முடிந்து சில நாட்களுக்குள்ளேயே மத்திய சர்க்கார் மீண்டும் தி. மு. க.வுக்குப் பூச்சாண்டி காட்டத் தொடங்கி விட்டது.

'கழகம் சட்ட விரோதமானது என்று நாங்கள் கருதவில்லை; எனினும் அது தேசப் பிரிவினைக் கொள்கையை வலுவாகப் பிரசாரம் செய்யுமானால் கடுமையான நடவடிக்கை எடுப்போம்' என்று உள் துறை மந்திரி ஸ்ரீ லால்பகதூர் சாஸ்திரியும் பிரதமர் அவர்களும் இரு விதமாகப் பேசிக் குழப்பியிருக்கிறார்கள்.

ஆட்சி மொழியாகவும், போதனை மொழியாகவும் ஹிந்தி திணிக்கப் படுமோ என்ற அச்சமும் திட்ட வேலைகளில் தமிழ்நாடு போதிய அளவு கவனிக்கப் பெறவில்லையோ என்ற ஐயமும்தான் கழகத்தின் கரங்களை வலுப்படுத்தி வருகின்றன. இந்த அச்சத்தையும் ஐயத்தையும் அடியோடு நீக்கி, நியாயமாகச் செயலாற்ற வேண்டியதே இன்று மத்திய சர்க்காரின் கடமை. அவ்வாறு செய்தால் இன்று பிரிவினையை விரும்பும் பலர் தேச ஐக்கியத்துக்காக உழைக்க முன்வருவார்கள். அதை விட்டுப் பயமுறுத்தும் நடவடிக்கைகளைச் சர்க்கார் மேற்கொள்ளுவது அவிவேகமாகும்.

சீனாவினால் நமக்கு நேரவிருக்கும் ஆபத்து மிகப் பெரியது; அதற்கடுத்த படியாகப் பாகிஸ்தானாலும் நமக்கு அபாயம் விளைய விருக்கிறது. இவ்விரண்டையும் விட்டுவிட்டு, தி. மு. க.வின் எதிர்ப்புத்தான் இன்று தலை போகிற விஷயம் எனக் கருதிப் பெரிதுபடுத்துகிறார்கள் காங்கிரஸ் ஆட்சியாளர்கள். உண்மையிலேயே அவர்களுக்கு ராஜதந்திரம் வேரோடு அற்றுப் போய் விட்டதா அல்லது மக்களின் கவனத்தை வேறு புறம் திருப்பி விடுவதே அவர்களின் ராஜதந்திரமா என்பது புரியவில்லை.

# என்ன சேதி?

## வரி எதிர்ப்பு வாரம்

வரிக் கொடுமையை எதிர்த்துச் சுதந்திரக் கட்சியினர் பல இடங்களில் கூட்டங்கள் போட்டுப் பொதுஜன அபிப்பிராயத்தை உருவாக்கி வருகின்றனர். சென்ற வாரத்தை வரி எதிர்ப்பு வாரமாகவே கருதி வரிச் சுமையினல் மக்கள் படும் கஷ்டங்களைக் குறிப்பாகச் சுட்டிக் காட்டியுள்ளனர். வரிக் கொடுமைகளிலிருந்து நிவாரணம் கோரும் வகையில் ஐந்து விதங்களில் இப்போதுள்ள முறைகளில் மாறுதல் வேண்டும் என்று அவர்கள் எடுத்துக் காட்டியுள்ளனர்.

முதலாவது, நில வரி ரத்துச் செய்யப்பட வேண்டும். இரண்டாவது, ஏழைகளின் வாழ்க்கைக்கு இன்றியமையாதவை என்று கருதப்படும் பொருள்கள் மீது மறைமுக வரிகள் போட்டு விலைவாசிகள் ஏறச் செய்வதை நிறுத்த வேண்டும்; தொழில் நடைபெறுவதற்கு அவசியமான கச்சாப் பொருள்கள் மீது இப்போதுள்ள கடுமையான 'எக்ஸைஸ்' வரிகளைக் கணிசமாகக் குறைக்க வேண்டும். மூன்ருவது, கம்பெனி வரிகள் குறைக்கப்பட வேண்டும். நான்காவது, நிதிப் பற்ருக்குறையைச் சமாளிக்க நோட்டு அச்சடிப்பதையும் பண வீக்கத்தைப் பெருக்கக் கூடிய நடவடிக்கைகளையும் அறவே தவிர்க்க வேண்டும். ஐந்தாவது, நிர்வாகச் செலவுகளைத் தாட்சண்யமின்றிக் குறைத்துக் கொள்வதுடன் சர்க்கார் சிப்பந்திகளின் எண்ணிக்கை வரம்பின்றிப் பெருகுவதைத் தடை செய்ய வேண்டும்.

கடைசியாகக் கூறப்பட்ட சிக்கன நிர்வாக நடைமுறையை மேற்கொண்டாலே இப்போதுள்ளது போன்ற வரிகளுக்கு அவசியம் இருக்காது. திட்டங்களில் அவசியமில்லாத இனங்களைத் தவிர்த்தாலும் பல வரிகளைக் கணிசமாகக் குறைக்க முடியும். சர்க்காரின் செவிகளில் இம்மாதிரி அறிவுரைகளும் ஆலோசனைகளும் ஏறுமா?

## மொரார்ஜி தேசாயின் சலுகை!

திரு மொரார்ஜி தேசாய் சில வரிச் சலுகைகளை அறிவித்திருக்கிருர்.

பட்ஜெட்டில் அறிவிக்கப்பட்ட புது வரிகளைக் கேட்டு மக்கள் கூக்குரலிட்டபோது ''விவாதத்தின்போது சலுகைகள் விஷயம் கவனிக்கப்படும்'' என்று தள்ளிப் போட்டார். உண்மையிலேயே ஏதோ சலுகைகள் கிடைக்கப் போகின்றன வென்று மக்கள் நம்பினர். இப்போது இங்குமங்குமாக ஜவுளி வகைகளிலும் இதர சில்லறை இனங்களிலும் சில சலுகைகள் அளித்து விட்டு, அவற்றின் மூலம் துண்டுவிழும் வருமானத்தை வேறு சில இனங்கள் மீது வரியை உயர்த்தி முக்கால் பாகம் ஈடு செய்து விட்டார். 71·7 கோடி வருமானம் கிடைக்க வேண்டும் என்ற திட்டத்தில் 70·93 கோடி கிடைக்க வகை செய்துகொண்டு விட்டார் ஸ்ரீ மொரார்ஜி தேசாய். ஒரு கோடி ரூபாயை விட்டுக் கொடுத்திருக்கிறோம் என்று சொல்லிக் கண் துடைக்கிருர்! முதலில் பட்ஜெட் தயாராகும்போதே பிறகு கொஞ்சம் குறைப்பதற்காக வழி வைத்துத் தயாரிப்பது நிதி இலாகாவின் தந்திரம்.

## சென்னை நகரசபையில் குழப்பம்

மதிப்புக்குரிய சட்டசபை அங்கத்தினர்களும் மேன்மை தங்கிய நகரசபை அங்கத்தினர்களும் ஒருவரையொருவர் அடித்துக் கொள்வதும் நாற்காலிகளை வீசி எறிவதும், மேற்கு வங்காள அரங்கங்களில் சில சமயங்களில் காணப்படும் சம்பவங்கள். சென்னை நகரசபை அங்கத்தினர்கள், ''நாங்கள் மட்டும் சாமானியமா?'' என்பது போல் சென்ற வாரம் நடந்து கொண்டனர். மூன்று ஹரிஜன 'ஒத்துழைப்பு அங்கத்தினர்களை'த் தேர்ந்தெடுப்பதற்காகச் சென்னை நகராண்மைக் கழகத்தின் விசேஷக் கூட்டம் சென்ற வாரம் கூட்டப்பட்டது. கூட்டம் கூடியதும், முனிசிபல் சட்டத்தின் எந்த ஷரத்தின்படி தேர்தல் நடக்கவிருந்ததோ, அதற்கும் மற்ருெரு ஷரத்துக்கும் முரண்பாடு இருப்பதாகக் கூட்டத்தில் சுட்டிக் காட்டப்பட்டது. இவ்விஷயத்தைச் சர்க்காருடைய கவனத்துக்குக் கொண்டு வந்து, அவர்களிடமிருந்து விவரம் கிடைக்கும்வரையில் தேர்தலைத் தள்ளிப் போட வேண்டும் என்று மேயர் தீர்மானித்து அன்றைய கூட்டத்தை ஒத்திப் போட்டு விட்டார். தமது முடிவைத் தெரிவித்ததுடன் கூட்டத்தைக் கலைத்து விட்டு வெளியேறி விட்டார். இந்தத் தீர்ப்பு காங்கிரஸ் கட்சி அங்கத்தினர்களுக்குப் பிடிக்கவில்லை போலும்! இதன்விளைவாகப் போலீஸின் உதவியை நாட வேண்டிய ஓர் அமளி ஏற்பட்டது. நமது நகரசபையின் நற்பெயரைக் குலைத்த இச் சம்பவத்துக்காக வருந்துகிறோம்.

## நந்தாவின் பிரலாபம்

மூன்ருவது திட்ட முதல் ஆண்டில் அநேகமாக எந்தப் பண்டங்களிலுமே







காந்திஜி சமாதான ஸ்தாபனத்தின் ஆதரவில் நடக்கும் அணு ஆயுத எதிர்ப்பு மகாநாடு ஒரு காலங்கடந்த நடவடிக்கை என்று ராஜாஜி கருதுகிறார்.



ஸ்டாண்டர்ட் மோட்டார் கம்பெனி அதிபர் திரு கே. கோபாலகிருஷ்ண அவர்களின் தௌஹித்ரியும் யூனியன் கம்பெனி டைரக்டர் திரு கே. வி. சீனிவாசன் அவர்களின் புதல்வியுமான சௌபாக்கியவதி உமாவுக்கும் திரு கார்திக் நாராயணனுக்கும் சென்னை லஸ் சர்ச் ரோட் லக்ஷ்மி விலாஸில் அதிவிமரிசையாக விவாகம் நடைபெற்றது. மணமகன் டாக்டர் சி.பி. ராமசாமி அய்யர் அவர்களின் பேரனும் பெங்களூர் திரு சி. ஆர். வி. சுப்பன் அவர்களின் புதல்வருமாவார். திருமணத்துக்குச் சென்னை நகரப் பிரமுகர்கள் பலரும் விஜயம் செய்து சிறப்பித்தனர்.

எதிர்பார்த்த உற்பத்தி ஏற்படவில்லையாம். சிறிய பாசனத் திட்டங்கள், உர உற்பத்தி, மின்சார அபிவிருத்தி ஆகிய துறைகளில் எதிர்பார்த்ததைவிட அநுகூலங்கள் குறைவாக இருக்கின்றனவாம். தொழில் துறையில் சிமெண்டு, உருக்கு ஆலை முதலியவற்றில் உற்பத்தி குறைவாக உள்ளதாம். ரயில்வே போக்குவரத்தும் பின்தங்கியிருக்கிறதாம். இப்படித் திட்ட மந்திரி ஸ்ரீ குல்ஜாரிலால் நந்தா பிரலாபிக்கிறார்.

உற்பத்தி பெருகாததற்குக் காரணம் யாவருக்கும் தெரியும். போதிய நிலக்கரி கிடைப்பதில்லை. மின்சார சக்தியும் தேவையான அளவுக்குக் கிடைப்பதில்லை. இந்நாட்டில் உற்பத்தியாகாத, அத்தியாவசியமான கச்சாப் பொருள்களை இறக்குமதி செய்யப் போதிய சௌகரியங்கள் அளிக்கப்படவில்லை. பல தொழிற்சாலைகளில் யந்திர சாதனங்கள் முழு அளவுக்கு வேலை செய்வதில்லை. ஒன்றையொன்று மிஞ்சும்படியான அளவில் திட்டங்கள் போட்டுக்கொண்டே போவதால் உண்டாகும் விளைவுகளே இவையனைத்தும். காரணத்தை ஆராயாமல் காரியத்தைக் குறித்துப் பிரலாபிப்பதில் பொருளேதும் இல்லை.

## அடக்கம் வேண்டும்

ஸ்ரீ கியானி கர்தார் சிங் என்ற பஞ்சாப் மந்திரி, மாஜிஸ்திரேட் ஒருவர் சரியாக நடந்து கொள்ளவில்லையென்று தாம் கருதியதால் அவரைக் கூட்டம் ஒன்றின் முன் ஒரு மணி நேரம் நிற்குமாறு தாமே தண்டனை விதித்தாராம். மந்திரிக்குத் தண்டப் பிரயோகம் செய்ய அதிகாரம் இருப்பதாக நமக்குத் தெரியவில்லை. இதுவரை எந்த மந்திரியும் அவ்விதம் செய்ததுமில்லை. ஸ்ரீ சிங் அவர்களோ விசாரணையில்லாமலே மதிப்புக்குரிய ஓர் அரசாங்க ஊழியரை அவமதித்திருக்கிறார். இந்த அநீதிக்குப் பிராயச்சித்தமாகப் பிரஸ்தாப மந்திரியின் சார்பில் சர்க்கார் மன்னிப்புக் கேட்டு விட்டதாம்! தவறு செய்த மந்திரியின் மீது ஒரு நடவடிக்கையும் கிடையாது. மேலிடத்தின் சலுகையைப் பெற்றோ, கோஷ்டிப் பூசல்களைத் 'திறம்பட' நிர்வகித்தோ கூட மந்திரிப் பதவியைப் பெற்று விடலாம். படிப்பு முதலிய தகுதிகள் பெற்று அநுபவத்தின் மீது பணி புரியும் அரசாங்க ஊழியர்களைக் கிள்ளுக்கீரையாகக் கருத இந்த மந்திரிகளுக்கு ஏது உரிமை? சர்க்கார் ஊழியர்கள் தேச சேவகர்களாகத் தங்களைக் கருத வேண்டும் என்று அவர்களுக்கு மந்திரோபதேசம் செய்யும் மந்திரிமார்கள் அவர்களை எப்படி நடத்தவேண்டும் என்பதை முதலில் அறியவேண்டும்.

# ஜய ஜய சங்கர



ரா. கணபதி

சதாசிவனைத் தொடக்கமாகவும் ஸ்ரீ சங்கராசாரியரை மையமாகவும் கொண்டு இன்று நம் கண்முன் காணும் குரவர் வரை தழைத்துள்ள ஆசாரிய பரம்பரையை வணங்குவோம்.—ஸ்மார்த்தர்களின் குருவந்தனை

## 7. வாழையடி வாழையென வந்த திருக்கூட்டம்

**பா**ரத நாட்டில் தெற்கு வடக்காகவும், கிழக்கு மேற்காகவும் செல்லும் யாத்திரிகர்களில் பெரும்பாலோர் கடக்க வேண்டிய நர்மதை நதியின் மத்தியப் பிரதேசம். எனவே சாப விமோசனம் பெறுவதற்காகப் பதஞ்சலி வினவச் சொல்லியிருந்த கேள்வியைக் கேட்க கௌடப் பிரம்ம ரட்சஸனுக்கு எத்தனையோ பேர் கிடைத்தனர். கிடைத்து என்ன புண்ணியம்? யாருக்குமே அந்தக் கேள்விக்குச் சரியான விடை என்னவோ தெரியவில்லை. சுய உருவம் பெறுவதற்கில்லையே என்று கௌடரது உள்ளம் ஏங்கும்; அதே போதில் பிரம்ம ராட்சஸ மனம் கொண்டாட்டம் போடும். கேள்விக்கு விடை சொல்ல முடியாத அந்தண உடல் — வேதம் சொல்லி இனித்துப் போன உடல்—தனக்கு இரையாகுமே என்பதில்தான் கொண்டாட்டம்.

இரு வேறு இயற்கைகளை இசைக்க முடியாமல் போராடிக் களைத்துப் போனார் கௌடர். சாத்துவிகமான வாழ்வு நடத்திய தாம் இன்று நர மாமிச பட்சிணியாகி விட்டோமே, அதனின்று தம்மை விடுவித்துக் கொள்ளவும் ஆற்றல் இழந்து விட்டோமே என்று எண்ணி யெண்ணி உள்ளம் வெதும்பினார் அவர்.

ஒரு நாள் சர்வ லட்சணமான ஓர் அந்தணச் சிறுவன் அந்த வழியே சென்றான். அவனைத் தின்றால் எவ்

வளவு நன்ருக இருக்கும் என்று சப்புக் கொட்டியது பிரம்ம ராட்சஸ உள்ளம். அவனுக்கு மகாபாஷ்யம் கற்பிக்கக்கூடு மாஞல் எவ்வளவு நன்ருக இருக்கும் என்று விழைந்து குழைந்தது, கௌட ரின் மனம்.

வழக்கமான அந்தக் கேள்வியை அவ னிடமும் கேட்டாயிற்று! அதுவரை யாரும் விடை பகர்ந்திராத அந்த நெருடலான கேள்வி என்ன என்றுதான் பார்ப்போமே!

வடமொழி வியாகரணத்தில் பிரத்தி யயம் என்பது ஒரு சொல்லின் விகுதி. சொல்லின் பகுதி அல்லது தாதுவுடன் 'நிஷ்டா' பிரத்தியயம் என்ற விகுதி யைச் சேர்த்தால் அது செயப்பாட்டு வினையாகும். 'புஜ்' என்ற தாதுவுக்குச் 'சாப்பிடு' என்று அர்த்தம். அத் துடன் நிஷ்டாப் பிரத்தியயத்தைக் கூட்டிஞல் 'புக்தம்' (சாப்பிடப்பட் டது) என்று ஆகும். இதே விதியை யொட்டி 'ரக்தம்' (சிவப்பாக்கப் பட்டது), 'ஸிக்தம்' (நனைக்கப்பட்டது) முதலிய பதங்கள் கிடைக்கின்றன.

'பச்' என்ற தாதுவுக்குச் 'சமை' என்று பொருள். இத்துடன் மட்டும் நிஷ்டாப் பிரத்தியயத்தைக் கூட்டிஞல் 'பக்தம்' என்று ஆகாது; 'பக்வம்' (பக்குவம் — சமைக்கப்பட்டது) என்றே மாறும். இதற்காக ஒரு தனி சூத்திரமே உள்ளது.

ரட்சஸ் தான் காணும் வழிப்போக் கர்களை '''பச்' தாதுவின் நிஷ்டா ரூபத்தைச் சொல்லுங்கள்'' என்று கேட் கும். அது சாதாரணமாகவே யாருக் கும் தெரியாது. இதுவோ முதலில் 'புஜ்' முதலிய தாதுக்களின் நிஷ்டா ரூபத் தைக் கேட்டு விட்டுக் கடைசியில் இதை யும் வினவிக் குழப்பி அடிக்கும்.

எனவே விஷயம் தெரிந்த வழிப்போக் கர்களும் உச்சாரணம் குளறி 'பச்'சின் நிஷ்டாரூபம் 'பக்தம்' என்று சொல்லி விடுவார்கள்.

''இல்லை, பக்வம்தான் சரி; நீயும் நான் சாப்பிடுவதற்குப் பக்குவமே'' என்று கூறி அவர்களைப் புசித்து விடும் பிரம்ம ராட்ஸஸம்.

அதே போலத்தான் இன்றும் அந்த வேதிய யுவனை ஒரே அடியாகக் குழப்பி விட்டு 'பச்'சின் செயப்பாட்டு வினை யைக் கேட்டது ரட்சஸ். ஆச்சரியம்! அந்தப் பிள்ளை சிறிதும் தயக்கமின்றி ''பக்வம்'' என்ருன்.

கௌட உள்ளத்துக்கு இவ்வளவு அவ் வளவு என்றில்லாத மகிழ்ச்சி. 'தக்க பாத்திரம் கிடைத்து விட்டது! இந்த இளைஞனுக்கு மகாபாஷ்யம் போதிக்க வேண்டியது தான்! உபதேசித்துத் தானும் இயற்கை உருப் பெற வேண்டி யதுதான்!'

''அப்பனே, நீ எங்கே போகிருய்?'' என்று வினவியது ரட்சஸ்.

''சிதம்பரத்துக்கு, அங்கே வியா கரண பாஷ்யத்தைப் போதிக்கிரு ராம் பதஞ்சலி. கற்கப் போகிறேன்'' என்ருன் வாலிபன்.

நெஞ்சு நொந்து சிரித்தது ரட்சஸ். ''சிதம்பர சமாசாரமெல்லாம் பழங் கதையாகி விட்டது. பாடம் சொன்ன பதஞ்சலி என்ன ஆஞரோ, எங்கு போஞரோ தெரியாது. மாணவர்க ளெல்லாம் போயே ஆகி விட்டது. பாடம் மிஞ்சியிருக்கிறது. அதை அறிந்த நான் ஒருவன் மிஞ்சி யிருக்கிறேன். வா! இங்கேயே உனக்கு அதைக் கற் பித்து விடுகிறேன்'' என்றது.

சரியென்று பிரம்ம ராட்சதத்திடம் பாடம் கற்றுக் கொள்ள ஆரம்பித்தான் அந்தப் பிள்ளையாண்டான். அத்தனை துணிச்சல் வாய்ந்த அந்த யுவன் யார்? யாருக்கும் தெரிந்திராத வியாகரண நுணுக்கத்தை அறிந்திருந்த அவன்யார்?

''பதஞ்சலி என்ன ஆஞரோ, எங்கு போஞரோ?'' என்று கௌடர் கூறிஞ ரல்லவா? அந்தப் பதஞ்சலி என்னவோ ஆகி எங்கேயோ போய் விடவில்லை. நர்மதைக் கரை ஆல மரத்தடிக்குக் கௌடரைத் தேடிக்கொண்டு இன்று வந்திருந்த இளைஞன் வேறு யாருமில்லை; சாட்சாத் அந்தப் பதஞ்சலியேதான். அவர் கவலை அவருக்கு. கௌடரின் கேள்விக்கு விடை சொல்ல இந்தப் புவி யில் யாருமே பிறந்திருப்பதாகத் தெரியவில்லை. 'தாமோ அப்படி விடை சொன்னவருக்குத் தான் மகாபாஷ்யம் போதிக்க வேண்டும்' என்று கௌட ருக்கு ஆக்ஞை இட்டாயிற்று. அப்படி யாஞல் அம்பலவாணன் உத்தரவின் கீழ் தாம் இயற்றிய அந்த வியாகரண பாஷ்யம் எப்படித்தான் உலகில் பிரபல மாவது? பார்த்தார் பதஞ்சலி. தாமே மீண்டும் பிறந்து கௌடரின் வினவுக்கு விடை இறுத்தால்தான் வியாகரண உரைக்கு விமோசனம் கிடைக்கும் — சாது மாணவரான கௌடருக்கும் சாப விமோசனம் கிடைக்கும் — என்று உறுதி கொண்டார்.

அப்புறம் என்ன? வேதியர் குலத்தில் பிறந்து சந்திரகுப்தன் என்று பெயர் பெற்ருர் பதஞ்சலி. இன்று தமது சீட னிடமே பாடம் கேட்க வந்து சேர்ந்தார்.

வேதாந்தத்துக்குப் பூர்வ ஆசாரியன் நாராயண மூர்த்தியே. அவனிட மிருந்து அயன் வழியாக வசிஷ்டருக்குச் சென்றது சநாதன தத்துவம். ஆகவே வசிஷ்டருக்கு வைகுண்ட நாதன் பரம குருவாக வேணும். எனினும் அவன் ஸ்ரீ ராமனுகப் பிறந்து வசிஷ்டரிடமே சீடனுனன் அல்லவா? இந்த வேதாந்த சம்பிரதாயத்துக்கே இப்படி ஒரு விநோத வழக்கம் போலும்; முதல் குரு தட்சிணு மூர்த்தியும் இந்தச் சிஷ்ய வம்சத்தில் தோன்றி நர்மதா தீர சந்நியாசியிடம் மாணுக்கனுக வந்திருக்கிருனே!

சந்திரகுப்த சர்மா பிரம்ம ராட்சஸத்திடம் பாடம் கேட்க ஆரம்பித்தாயிற்று. பிசாசைக் குருவாகக் கட்டி அழுவது இலேசான காரியமா? அது எத்தனையோ நிபந்தனைகள் போட்டது.

''நீயும் இந்த மரத்தில் ஏறி உட்கார்ந்துதான் பாடம் கேட்க வேண்டும். 'கேட்பது' என்று உபசாரத்துக்குத்தான் சொல்கிறேன். பாடத்தை நீ கேட்டு, அதன் பின் உன்னை நான் கேள்விகள் கேட்டு அதை நீ புரிந்து கொண்டாயா என்று பார்க்க எனக்கு அவகாசமில்லை. ஆகவே, நான் சொல்லச் சொல்ல நீ வியாகரண உரை முழுவதையும் விறுவிறுவென்று எழுதிக் கொள்ள வேண்டும். நடுவில் மரத்தை விட்டு இறங்கக் கூடாது, சாப்பிடக் கூடாது, தூங்கக் கூடாது. அதிவிரைவாக வேலையை முடிக்க வேண்டும்'' என்றது.

வித்தையிலுள்ள ஆர்வத்தால் அத்தனைக்கும் ஒப்புதல் அளித்தார், சந்திர சர்மா. மரத்தின்மேல் ஏறி உட்கார்ந்தார். பிரம்ம ரட்சஸ் ஆரம்பித்து விட்டது. ராட்சத பாடம்தான்!

'அட கஷ்டமே! பாடத்தை எழுதிக் கொள்ள வேண்டும் என்றதே அது? எதில் எதனுல் எழுதுவது? ஓலையா, எழுத்தாணியா ஒன்றுமே இல்லையே. ரட்சஸானுல் சொல்லிக் கொண்டே போகிறதே! இறங்கக் கூடாதென்றும் கட்டளையாயிற்றே!'

தயங்கவேயில்லை சந்திர சர்மா! ஆலிலையில் துயிலும் ஆயர் தம் கொழுந்தைத் தியானித்தார். ஆல் இலைகளையே பறித்தார். தொடையை நகத்தால் கீறினுர். இலைக் காம்பில் அந்த ரத்தத்தைத் தோய்த்து இலைகளிலேயே மகா பாஷ்யத்தை எழுதத் தொடங்கினுர். உண்மையிலேயே ரத்தத்தைச் சிந்திக் கல்வி கற்றுக் கொண்டார்!

அமாநுஷிகமான வேகத்தில் எழுதிக் கொண்டே போனுர். இவ்வாறு ஓய்வு, ஒழிவு, உறக்கம், உணவு, உடல் உணர்வு எதுவுமே இல்லாமல் பல நாட்கள் அலுக்காமல் சலிக்காமல் எழுதி வந்தார்.

அப்படி அவர் ஆகாரமும், தூக்கமும் இன்றிக் கருமமே கண்ணுக இருந்ததில் என்ன அதிசயம்? இப்போது சந்திர சர்மாவாக வந்துள்ள இதே ஆதிசேஷன் முன்பு இளைய பெருமாளாகிய இலக்குமண சுவாமியாக அவதரித்தவர் அல்லவா? அப்போது பதினுன்கு வருஷங்கள் அன்னத்தையும், நித்திரையையும் நீத்துச் சேவையிலேயே ஈடுபட்டுப் பெருமை கொண்டவர் அல்லவா?

பாஷ்யம் முழுவதும் எழுதிக் கொண்டாயிற்று. கௌடரும் சாபம் நீங்கி சுய ரூபத்தை அடைந்தார். பிரம்ம ராட்சஸ வாழ்வு தீர்ந்தது; இனி பிரம்ம ஞானத்தை ரட்சித்து உலகுக்குத் தர வேண்டும் என்று கௌடர் விருப்பம் கொண்டார். இமாலயச் சரிவுக்குச் சென்று, பிறவியிலேயே ஜீவன் முக்தராகிய சுகப்பிரம்மத்தை அடைந்தார். சந்நியாசமும், வேதாந்த போதனையும் பெற்ருர். இறைவனின் இணையடிகளிலே லயித்திருந்ததால் கௌட பாதாசாரியர்கள் என்று திருநாமமும் பெற்ருர்.

மரத்திலிருந்து இறங்கிய சந்திர சர்மாவைக் களைப்பு பற்றிக் கொண்டது. துவாபர யுகத்தில் சௌமித்திரியாக இருந்த போது பெற்றிருந்த தெம்பு கலியில் மிக மிகக் குறைந்து விட்டது. மகாபாஷ்யம் எழுதியுள்ள இலை மூட்டையை அப்படியே கீழே போட்டு விட்டு ஆயாச மேலிட்டால் கண் அயர்ந்து விட்டார்.

ஆடு ஒன்று அந்தப் பக்கம் வந்தது. கழுதைக்குக் கற்பூர வாசனை தெரியுமோ தெரியாதோ, இந்த ஆட்டுக்கு வியாகரண மணம் தெரியவே யில்லை. சாக பட்சிணியான அதற்கு மானுட ரத்தத்தின் வாடை கூடத் தெரியவில்லை. இலக்கண உரையைக் கட்டி வைத்திருந்ததே, அந்த இலை மூட்டையை உற்சாகத்துடன் தின்ன ஆரம்பித்தது. சர்மா விழித்தெழுந்த போது இலை மூட்டையில் ஒரு பகுதியே எஞ்சியிருந்தது. தம் இதயத்தின் ஒரு பகுதியே அரிந்துப் போய் விட்டாற் போல் தவித்துப் போனுர் அவர். எஞ்சிய இலைகளை எடுத்துக் கொண்டு சோகமே உருவாக உஜ்ஜயினிக்கு வந்து சேர்ந்தார்.

தூக்கத்துக்கும் துக்கத்துக்கும் நெருங்கிய உறவோ என்னவோ? உஜ்ஜயினியிலுள்ள ஒரு வணிகர் வீட்டுத் திண்ணையில் படுத்துக் கொண்ட சர்மா ஆழ்ந்து

---

* இன்றைக்கும் மகாபாஷ்யத்தில் காணுமல் போன பகுதி 'அஜ பட்சித பாஷ்யம்' (ஆடு தின்ற உரை) என்றே வழங்குகிறது.

உறங்கிப் போனார். தூக்கம் மட்டும் அல்ல அது. பிரக்ஞை இழந்தாற் போன்ற ஒரு மயக்க நிலையிலேயே ஆழ்ந்து விட்டார். அவரை அந்நிலையில் கண்ட வணிகர் மகள் பரிதாபம் கொண்டாள். அவர் உடலில் சத்து ஊட்டுவதற்காகத் தயிர் சாதத்தைப் பிசைந்து வந்து அவர் வயிற்றில் தேய்த்தாள். மயிர்க்கால் வழியாக சாரம் உள்ளே இறங்கியது.

சர்மா விழித்தெழுந்தார். "வியாபாரிக்கு நன்றி கூறிவிட்டுக் கிளம்ப உத்தேசித்தார். மிஞ்சிய மகாபாஷ்யத்தைப் போதிப்பதிலேயே வாழ்நாளைச்





செலவிட வேண்டும் என்பதே
அவர் அபிலாஷை. ஆனால் வியா
பாரி அவர் தலையில் ஒரு பெரிய
கல்லைத் தூக்கிப் போட்டார். அவ
ரது உடலைத் தேற்றிய தமது மகள் அவ
ரிடம் தம் உள்ளத்தைப் பறிகொடுத்துவிட்ட
தாகக் கூறினார். தம் பெண்ணை மணக்குமாறு
சந்திரசர்மாவிடம் வேண்டினார். இவருக்கோ

இல்லறத்தில் விருப்பமில்லை. மறுத்தார். வியாபாரி விடவில்லை. ''உன் உயிர் என் மகள் அளித்த பிச்சை. நீ எங்கள் சொத்து'' என்றார். அரச சபையில் வழக்குத் தொடுத்தார்.

சந்திர சர்மாவின் அழகில் அரசனும் மயங்கினான். தன்குமாரியையே அவருக்கு மண முடிக்கலாமே என்று கருதினான். ''இவர் சரியான வரனா என்று பார்க்க வேண்டும். ஆலோசனைக்கு மந்திரியை அழைத்து வருக'' என்று உத்தர விட்டான். மந்திரி வந்தார். அந்தண குலத்தைச் சேர்ந்த அவருக்கும் ஒரு புத்திரியிருந்தாள். அவளுக்காகவே அரசன் இந்தப் பிள்ளையைத் தேர்ந்தெடுத்திருக்கிறான் என்று மந்திரி எண்ணினார். அப்புறம் என்ன? விவாகமே வேண்டாமென்ற சந்திர சர்மாவுக்கு மூன்று பேரும் போட்டியிட்டுக் கொண்டு பெண் தர முன் வந்தனர். அந்த நாளில் அநுலோம விவாகங்கள் செல்லுபடியாக வேண்டுமானால் வேதியர் வகுப்பைச் சேர்ந்த வரன் ஒரே முகூர்த்தத்தில் நாலு வர்ணத்தைச் சேர்ந்த நாலு கன்னிகைகளை மணக்க வேண்டுமென விதி. இதற்கு இசைவாக, மூன்றோடு நான்காகப் பத்தினிகளை அடைந்தார் சந்திர சர்மா. மணம் புரிந்து கொண்ட மங்கையருக்கும் தம் கடமையைச் செய்ய வேண்டும் என்ற நல்லுணர்ச்சி காரணமாக அவர்கள் ஒவ்வொருவருக்கும் ஒரு புத்திரன் பிறக்கும் வரை இல்லறம்நடத்தினார். நான்கு சத்புத்திரர்களை உலகுக்குத் தந்தார். அவர்களே வல்லபரிஷி அல்லது வரருசி, விக்கிரமாதித்தன், பட்டி, பர்த்ருஹரி ஆகியோர் என்பர். பின்னர் மகாபாஷ்யத்தைப் பிரசாரம் செய்துவிட்டு, கடமையை ஆற்றிய பெருமையுடன் உலகத்தார் கூறும் வீட்டைத் துறந்து, உலகுக்கு மேம்பட்ட வீட்டின்பம் ஈட்டுவதற்கான சாதனைகளைப் புரிய இமாலயம் சென்றார் சந்திரசர்மா.

முன்பு பாஷை இலட்சணம் சொல்லிக் கொடுத்த கௌடரை பதரிகாசிரமத்தில் கண்டு ஆத்ம இலட்சணத்தை அறிந்தார். அவரிடமே சந்நியாசமும் பெற்றார்; கோவிந்த பகவத் பாதரானார்.

அத்வைதம் என்னும் பிரம்ம வித்தையின் பேசாத முதல் குரு தட்சிணாமூர்த்தி. பேசும் முதல் குரு நாராயணன். சிஷ்ய பரம்பரையும் பிள்ளை பிள்ளை வழியாக பிரமன், வசிஷ்டர், சக்தி, பராசரர், வியாசர், சுகர் என்று உருவாயிற்று. சுகர் மணம் செய்து கொள்ளாதவர். எனவே, அதன்பின் சிஷ்ய பரம்பரை உண்மையாகவே சிஷ்ய பரம்பரை ஆயிற்று. சுகாசாரியரின் சிஷ்யர் கௌட பாதர்கள். அவருடைய சிஷ்யர் கோவிந்த முனி. என்றும் அழியா அமரச் செல்வத்தை நமக்கு அன்புடன் வழங்கும் இந்தக் குரு பரம் பரையைவிட நமக்கு உற்றவர் யாருண்டு?

வியாசர், சுகர், கௌடர், கோவிந்தர் முதலிய மகனீயர்கள் ஒரு முறை பதரியில் ஒன்று கூடினார்கள். அப்போது வியாசர் கூறினார்: ''கலிமலிந்த பாரதத்தைப் பாவனப்படுத்தப் பரமேசுவரனே அவதரிக்கப் போகிறான். துறவியாக வாழ்ந்து அறத்தை நிலைநாட்டப் போகிறான். பெயரளவுக்கு அவனுக்குச் சந்நியாச ஆசிரமம் அளிப்பதற்காகக் கோவிந்தன் நர்மதைக் கரையை அடைந்து காத்திருக்க வேண்டும். பிரானே அவனைத் தேடி வருவான்'' என்று. கோவிந்தர் பதஞ்சலியாக இருந்த போது அவருக்குத் தந்தையாக விருந்த அத்திரி மகரிஷி, சிவமாகிய அந்தச் சிடனைப் புரிந்து கொள்ள ஓர் உபாயம் சொன்னார். நர்மதை வெள்ளத்தை யார் தனது கமண்டலத்தில் அடக்குகிறானோ அவனே ஈசுவரன் என்று அவர் குறிப்புக் காட்டினார்.

பேரானந்தத்துடன், தமக்குப் பழக்கமான நர்மதா தீரத்தில், தாம் பாடம் படித்த அதே ஆலமரத்தின் அருகிலுள்ள குகைக்கு வந்து சேர்ந்தார், கோவிந்த பாதர் — வட வாலின் கீழிருந்து மறையோதும் பரமனுக்கு தீட்சை அளிப்பதற்காக. ஆல்போலத் தழைத்து ஆயிரமாயிரம் ஆண்டுகளுக்குப் பர தத்துவத்தைப் பராமரிக்கப் போகும் ஆசாரிய வம்சத்தைத் தோற்றுவிப்பதற்காகப் பிறந்த சங்கரர் காலடியிலிருந்து பற்பல காதம் நடந்து வந்து கோவிந்த பகவத் பாதரைச் சந்தித்தும் விட்டார்.

ஹரிக்குப் படுக்கையாகவும், ஹரனுக்குப் பாதசரமாகவும், 'சுற்றைக் குழல் பார்வதிக்குக் கங்கணமாக'வும் இலட்சுமணராகவும், பலராமராகவும், பதஞ்சலி மகரிஷியாகவும், கோவிந்த பகவத்பாதரைக் கண்டு தம்மைச் சாமானியச் சிறுவனாகவே பாவித்து அவரைப் பணிந்தார் சங்கரர். சங்கரரை ஹரியாகவும், ஹரனாகவும், தேவியாகவும், ராமனாகவும், கிருஷ்ணனாகவுமே கண்ட கோவிந்த குரு பழைய தொடர்புகளை ஒருவாறு மறந்து புதிதாகக் குரு சிஷ்ய பாவத்தை மனத்தில் வாங்கிக் கொண்டார்.

''குழந்தாய், உனக்காகத்தான் காத்திருக்கிறேன். வா, வா!'' என்றார் அன்பு கனிய. (தொடரும்)

# 'தரத்தின் சின்னம்'

## இதைப் பாருங்கள்



## உங்களுடைய கூடுதலான பாதுகாப்பிற்கு உத்திரவாதம்

புதிய டயர்கள் வாங்க வேண்டும்போது பயர்ஸ்டோனைத் தேர்ந்தெடுங்கள் உங்கள் பணத்திற்கு இந்தச் சிறந்த மதிப்புகளைப் பெறுங்கள்

- **கூடுதலான பாதுகாப்பு மற்றும் நம்பகத்தன்மை**

  இன்னமும் பிரத்தியேகமான, வழுக்குவதைத் தடுக்கக்கூடிய டிரெட் அமைப்பு - உங்கள் தேவைக்கும் கூடுதலான, வலுவான, பாதுகாப்பிற்காக முறுக்கப்பட்ட பசை தோய்க்கப்பட்ட 'கார்டு பாடி'

- **நீடித்த உழைப்பு மற்றும் சிக்கனம்**

  ஒவ்வொரு ரூபாய் டயர் செலவுக்கும் கூடுதலான கிலோ மீட்டர்கள் ஓட்டம். இந்திய உழைப்புச் சூழ்நிலைக்கென பிரத்தியேகக் கலவை செய்த டிரெட் ரப்பர்

# Firestone

## பயர்ஸ்டோன்



நியூ டீலக்ஸ் சாம்பியன் கார் டயர்கள்

இன்று சிறந்தவை — நாளை மேலும் சிறந்தவை



"என்ன!
வீட்டில்

# அமிர்தாஞ்சனம்

இல்லையா?

**என் மூட்டுவலிக்கு இப்போது என்ன செய்வேன்?"**




எந்த சமயத்திலும் அமிர்தாஞ்சனம் தேவைப்படலாம். ஆகவே, எப்போதும் ஒரு டின் வைத்திருப்பது நலம். அமிர்தாஞ்சனம் வீட்டில் இருந்தால் கவலைக்கு இடமேயில்லை.

அமிர்தாஞ்சன் லிமிடெட்

14/15 லஸ் சர்ச் ரோடு, மதராஸ்-4
பம்பாய்-1, கல்கத்தா-1, புதுடில்லி-1

JWT/AM/1877



பிரின்சிபால்
அட்மிஷன் அமர்க்களம்
நான் தான் பிரின்சிபால். முதலில் எனக்கு உள்ளே அட்மிஷன் கொடுங்கோ...!
"நிறைய மாம்பழங்களை வாங்கி எடுத்துக் கொண்டு எங்கே கிளம்பினீர்?"
"பிரின்சிபாலைப் பார்க்கலாம்னுதான்!"
"அதுக்கு நிறைய மார்க் அல்லவா வாங்கிக் கொண்டு போகணும்!"
மனைவி:- என் தம்பிக்கு உங்க காலேஜில் அட்மிஷன் தருவீரா, மாட்டீரா?
பிரின்சிபால்:- சிபாரிசுக்கு யாரையேனும் அழைத்துக் கொண்டு நாளைக்கு சாயங்காலத்தில் வந்து பாரு.
"பிரின்சிபால் பெண்ணுக்குக் கலியாணமாச்சே. பையனுக்கு என்ன கொடுத்தார்?"
"என்ஜினீரிங் கல்லூரியில் அட்மிஷன் கொடுத்தார்!"
சாமா
அடெ! நீங்கதானா! பிரின்சிபால் தான் குடையில் ஒளிஞ்சிண்டு நிற்கிறாரோன்னு பார்த்தேன்!
?
அதோ அவர் தான் பிரின்சிபாலா!
உம்..ம்..
..ம். ஆமாம்! சாட்சாத் அவரேதான்!

அட்டைப்படக் கதை

# திரைக் குப் பின்னுல்...

## கர்ணன்

சீமட்டிப் பெருக்கியது போல் சுத்தமாக, அமைதி யாக இருந்தது வீடு.

நேற்றுக் கல்யாணத்துக்குப் போய் விட்டு வந்து கொடியில் அவிழ்த்துப் போட்ட பட்டுப் புடவையை மடித்துப் பீரோவில் வைப்பதற்காக அறையை நோக்கி வந்தாள் பார்வதி. ஹாலில் குழந்தைகள் அமரிக்கையாக உட்கார்ந்து விளையாடிக் கொண் டிருந்தார்கள். ஒரு கணம் நின்று அந்தக் காட்சியைப் பார்த்தாள். எல்லோரையும் விட்டு விட்டுப் பிரேமா விடமே அவள் பார்வை லயித்தது. "பிரேமா தனி அழகு தான்." தாயுள்ளம் பெருமிதத்தாலும் இறுமாப்பாலும் நிறைந்தது.

ஹூம்... தன் வீட்டுச் சரக்கென்றால் உயர்த்திதான். எதிர்த்த வீட்டு ரமேஷுக்கு என்ன? பயல் கொழு கொழு வென்று மாவுப் பொம்மை மாதிரி இருக்கான்! அடுத்த வீட்டுப் பெண் காமுதான் என்ன குறைந்து விட்டாள்? தாயைப் போல் செதுக்கிச் செதுக்கி அழகு கண்ட சிலை அவள்!

கோடி வீட்டிலிருந்து இங்கு விளையாடுவதற்காக வந்திருக்காளே பர்வதம், அவள் ஓவியமேதான்!

எல்லாம் ஒரேவயதுக் குழந்தைகள். ஒவ்வொன்றும் ஒரு தாய் வயிற்றில் பிறந்த குழந்தைகள்.

குழந்தைகள்!

அம்மாமா! ...... இந்தக் குழந்தைகள் அழகில்லை என்று குருடிகூடச் சொல்ல மாட்டாளே! ஒவ்வொன்றும் ஒரு வார்ப்பு. என்னவோ என் கண்களுக்குப் பிரேமா மட்டும் தனிச் சோபையுடன் தெரிகிருள். அது என் குற்றமா

பார்வதி, அரும்பும் புன்னகையுடன் அலுங்காமல் தன் அறைக்கு வந்தாள். அறையின் வாசலில், கதவுக்கு முன்னுல் ஒரு திரை தொங்கியது. அந்தத் திரையில், பல வண்ணத்தில் சின்னதும் பெரியதுமாகப் பெண் குழந்தையும் பிள்ளைக் குழந்தையும் விளையாடுவது போல அச்சிடப்பட் டிருந்தது. கவின் அழகும் காவியப் பொருளும் நிறைந்த குழந்தைகள். முன்பெல்லாம் அந்தத் திரையண்டை வந்ததும் அந்தத் திரைக் குழந்தைகளை ஏக்கத்துடன் வைத்த கண் வாங்காமல் பார்த்துக்கொண்டு நின்றுவிடுவாள். இப்போதெல்லாம் அதை லட்சியமே பண்ணுவதில்லை. பிரேமா இருக்கும்போது அதை ஏன் அவள் ஏறிட்டுப் பார்க்கிருள். திரையை விலக்கிக் கொண்டு கதவைத் திறந்து உள்ளே சென்ருள்.

பீரோவில் புடவையை வைத்து விட்டுத் திரும்பியவள் யதேச்சையாகத் தன்னைக் கண்ணுடியில் பார்த்தாள். பார்த்தவள் அப்படியே பிரமித்து நின்று விட்டாள். மங்கிக்கொண்டு வந்த அழகும் உடலும் கூப்பென்று புது மலர்ச்சி பெற்று விட்டனவா? ஒரு மாதத்துக்குள் எப்படி மாறிவிட்டாள். அகத்தில் நிறைந்திருக்கும் தாய்மை புறத்திலும் மணம் வீசுகிறதோ? அவள் இதமான சுகத்தில் ஆழ்ந்து போய்க் கட்டிலில் அமர்ந்தாள்.

தான் ஒரு "தாய்" என்ற ஆனந்தத்தில் இளைக்கும் இந்தப் பார்வதி ஒரு மாதத்துக்கு முன்னுல் மலடி! அவள் கணவர் சுந்தரமூர்த்தியும் மலடுதான். நல்ல பொருத்தம். குழந்தைச் செல்வம்



இந்த ஜென்மத்தில் அவர்களுக்கு இல்லே. இதெல்லாம் ஒரு மாதத்துக்கு முன்புதான். இப்போது அவர்களே யாரும் அப்படிச் சொல்ல முடியுமா? ''அம்மா! அப்பா!'' என்று தேனொழுகக் கூப்பிட இப்போது பிரேமா இருக்கிறளே. பிரேமாவின் பெற்றோர்கள் அவர்கள். ஒரு கணம் நினைத்துப் பார்க்கும் போது எல்லாமே ஆச்சரியமாகத்தான் இருக்கிறது. விதியின் சுழல் இருக்கிறதே அது மிகப் பெரியது.

ஒரே நாளில், ஒரே மணவறையில் திருஷ்டிப் படும்படியாகப் பார்வதிக்கும் அவள் அண்ணனுக்கும் கல்யாணம் நடந்தது. கல்யாணமான இரண்டு வருடங்களில் அண்ணனுக்கு ஆண் குழந்தை பிறந்தது. சிறு வயதிலேயே குழந்தை என்றால் உயிரை விடும் பார்வதியின் வயிறு திறக்கவே யில்லே. முகம் தொங்கிப் போன மனைவியைப் பார்த்து, ''சுத்தப் பைத்தியமாக இருக்கிறயே! உனக்கென்ன வயதா ஆகி விட்டது? இந்த வருஷமில்லேயென்றல் அடுத்த வருடம்'' என்று சிரித்தார் சுந்தரமூர்த்தி.

அப்படிச் சிரித்த சுந்தரமூர்த்தியும் ஐந்து வருடங்களுக்குப் பின்னல் நம்பிக்கையின்றி வாயடைத்துப் போய் விட்டார். ஊர் ஊராக க்ஷேத்திராடனம் போய், தோஷம் கழித்து, பிரபல ஆஸ்பத்திரி, லேடி டாக்டர் என்று படையெடுத்து முடிவில் கிடைத்த பலன் இருவரும் மலடு என்பதுதான். மேலும் ஐந்து வருடங்கள் ஓடி மறைந்தன. அப்போதும் அவள் பூக்காத மரமாகத்தான் இருந்தாள். குழந்தையே வேண்டாம் என்னும் அவள் அண்ணன் வீட்டிலோ ஆணும் பெண்ணுமாக எட்டுக் குழந்தைகள் வளேய வளேய வந்து கொண்டிருக்கிறார்கள்.

இருவரும் ஒரே வயிற்றில் பிறந்தவர்கள் தாம். அண்ணன் பூவும் பிஞ்சும் காயுமாகப் பூத்துக் குலுங்கி நிற்கிறன். அவனுடன் பிறந்த தங்கை பட்ட மரம்போல் நிற்கிறள். இன்னும் சில வருடங்களில் பட்டே போய் விடுவாளோ! இயற்கையின் ஒர வஞ்சனேதான் என்னே!

அருள் சுரக்கும் வயிற்றில், இரக்கம் சுரக்கும் வயிற்றில், தாய்மை பொங்கிப் பொங்கி எழும் வயிற்றில் ஒரு பிள்ளேப் பூச்சி ஜனிக்க இடமில்லாமலா, வழி யில்லாமலா போய் விட்டது. உலகத்தில் பறவையாய்ப் பூச்சியாய்ப் புழுவாய்க் கோடி கோடியாய் ஜனிக்கும் உயிர் அணுக்களில் ஒன்று இந்த வயிற்றில் உதிக்கட்டுமே.

''ஹூம்...நான் செய்த தவக்குறை. நான் செய்த பூஜா பலன் அவ்வளவுதான்.''— எப்போதும் இதே ஸ்மரணேதான் பார்வதிக்கு.



பித்துற்றுப் பேதலித்துப் பைத்தியமாய்க் குழந்தையாய் ஏங்கி ஏங்கி நாளுக்கு நாள் நலிந்து கொண்டு வரும் பார்வதியைக் கண்டு மனமுடைந்து போனார் சுந்தரமூர்த்தி. அவர் தான் என்ன செய்வார்? வெறிச்சோடிக் கிடக்கும் வீடும், கேட்பாரற்றுக் கிடக்கும் செல்வமும் அவருக்குச் சலித்துத்தான் போய் விட்டன. வாழ்க்கை அர்த்தமுள்ளதாகப் படுவது குழந்தையால் தானே. ஒவ்வொரு நேரம் இந்த ஜென்மமே வீண் என்று விரக்தி வந்து விடும். இதற்கு யாரை நோகலாம்?

''மலடு!'' பத்து வருடங்களாகக் காய்ப்புத் தட்டிப் போன முடிவு ஒரு நாள் அவளை என்ன பாடுபடுத்தி விட்டது. நினைத்தாலே மெய் சிலிர்க்கிறது. 'இந்தப் பிறவியில் மகப்பேறு இல்லை. 'நான் பெண்ணாக இருந்து என்ன பயன்?' என்று முழுக்கயிற்றை நாடி விட்டாள். யாரைப் பிடித்த நல்ல காலமோ! அன்றைக்கு அவர் ஆபீஸிலிருந்து சீக்கிரம் வரவில்லையென்றால் விபரீதமாகி விட்டிருக்கும். வர வர அவளைத் தனிமையில் விட்டுச் செல்லவே பயமாக இருந்தது அவருக்கு.

அவளுக்கு எந்த விதத்திலும் குழந்தை வேண்டும். கணவரைப் பார்த்து, ''நீங்கள் வேறு கலியாணம் செய்து கொள்ளுங்கள்'' என்று சொல்லக் கூடிய அளவுக்கு ஒரு பெண் பைத்தியமாகி விட்டாள் என்றால் பாருங்களேன். 'இவளுக்குப் பிறக்காத குழந்தை இன்னொருத்திக்கு மட்டும் பிறந்து விடும் என்பது என்ன உறுதி? அப்படியே பிறந்தாலும் இவளுக்குக் கிடைத்த மலடி என்ற வார்த்தையை, வசையைக் கொன்று விட முடியுமா? கிறுக்கு. என்னவோ உளறு கிறாள். அது மட்டும் நடக்க நான் சம்மதிக்க மாட்டேன். கடைசி வரைக்கும் எனக்கு அவள் குழந்தை. அவளுக்கு நான் குழந்தை என்று இருந்து விட்டுப் போகிறோம்' என்ற உறுதியோடிருந்தார் சுந்தரமூர்த்தி.

திக்குத் தெரியாத காட்டில் திசை தெரியாமல் தவித்துக் கொண்டிருந்தபோதுதான் மகாமகம் வந்தது. லட்சக்கணக்கில் கூடும் ஜனங்களைப் பார்த்தால் பாபம் தொலையும் என்பார்களே. அப்படியாவது போய்விட்டு வருவோம் என்று பிடிவாதமாகப் பார் வதியை அழைத்துக் கொண்டு கும்பகோணத் துக்குப் போனார். அன்றைக்கு முழுதும் தங்கள் கவலைகளை மறந்து, நீராடுவதிலும், ஜனக் கும்பலைப் பார்ப்பதிலும் பொழுதைக் கழித்தனர். இரவு வெகு நேரத்துக்குப்பின் தங்கியிருக்கும் வீட்டை நோக்கி இருவரும் வந்து கொண்டிருந்த போது, எதிரே ஒரு சாமியாருடன் நின்று கொண்டிருந்த அந்தச் சிறுமி ஓடிவந்து, ''அம்மா!'' என்று பார் வதியின் கால்களைக் கட்டிக் கொண்டாள்.

இருவரும் பிரமித்து நின்று விட்டார்கள்.

எண்ணி மாய்ந்து மாய்ந்து புகலில்லாமல் ஒடுங்கிப் போன தாய்மை உணர்ச்சி இமைக் கும் நேரத்தில் மூர்க்கமாக உடம்பெல்லாம் சிலிர்த்துக் கொண்டு பொங்கியது.

ரத்த ஓட்டம் 'ஜொய்' என்று காதில் ஒலித்தது.

''அம்மா! அம்மா!''

ஆமாம்; பார்வதியும் ஒரு தாய்!

**''அள்ளி அணைத்திடவே என் முன்னே**
**ஆடி வருந் தேனே......''**

பெற்ற குழந்தையைக் காணமல் பரி தவித்த தாய்போல் 'லபக்'கென்று குனிந்து குழந்தையை வாரியெடுத்து மார்போடு அணைத்துக் கொண்டாள். குழந்தையின் பூங் கரங்கள் அவள் கழுத்தைச் சுற்றி வளைத்துக் கொண்டன. கண்ணீரும் எச்சிலும் குழம்பி அவள் கன்னத்தில் பட்டு வழவழத்தன.

பார்வதியின் மார்பில், அடிவயிற்றில், முகத்தில், கழுத்தில், ரத்தத்தில் ஓர் உணர்ச்சி இலேசு இலேசாகக் குதித்துக் குதித் துக் கும்மாளி போட்டுப் பாய்ந்தது. ஹிருத யத்திலிருந்து பீறிட்ட வேகம் கண்களில் நீராகத் துளிர்த்தது.

குழந்தை பொருமலுக்கிடையே, ''என்னை விட்டுட்டு எங்கேம்மா போயிருந்தே ?'' என்று கேட்டாள்.

''நான் உன்னைத் தேடிக்கிட்டுத்தான் அலைந்தேன் கண்ணு.''

அந்தச் சாமியார் இடைமறித்தார். ''உங் களைக் காணுமே குழந்தை ரொம்பப் பரிதவிச் சுப் போச்சு. நானும் ரெண்டு நாளா குழந் தையைத் தூக்கிக் கொண்டு நிற்காமல் அலைந்து விட்டேன். உங்களைக் கண்டுபிடிக்க முடியவில்லை. தெய்வம்தான் இன்றைக்கு நம்மைச் சந்திக்க வைத்திருக்கிறது.''

ஒரே சமயத்தில் இது எங்கள் குழந்தை இல்லை என்று சொல்லத் தம்பதிகள் இரு வருக்கும் மனமில்லை. சாமியார் கடமை முடிந்த திருப்தியில் தம் வழியே போய் விட்டார். அவர் போன பிறகுதான் உண்மை யைச் சொல்லவில்லையே என்ற உதைப்பு சுந்தரமூர்த்திக்கு ஏற்பட்டது. பார்வதி எதைப் பற்றியுமே நினைக்கவில்லை. தாயின் மடியிலிருந்து விலகித் துள்ளித் திரியும் இள மதி போல் பூரிப்பும் குதூகலமும் பூத்துக் குலுங்கி நின்றது அவள் நெஞ்சில். குழந் தையை மாறி மாறிக் கொஞ்சினாள்.

குழந்தைக்கு ஐந்து வயது இருக்கும். ரோஜா நிறம். செலுலாயிட் பொம்மை மாதிரி ஆகிருதி. உடம்புக்குப் பாந்தமான பச்சைப் பட்டுக் கவுன். பின்னச் சடை ரிப்பன் இல்லாமல் தொங்கியது. உடம்பில் நகை என்று ஏதும் இல்லை. பேச்சு அட்சரம் தவறாமல் மணி மணியாக வருகிறது.

''யார் சொத்தோ?''

உதடு நெளியாமல் முனகினார் சுந்தர மூர்த்தி. அதைக் கேட்ட பார்வதி ஒருகணம் அவரை எரித்து விடுவது போல் பார்த்தாள்.

மனைவியின் பார்வைக்கு அஞ்சித் தலை குனிந்து கொண்டார் அவர். பத்து வருடங்க ளாக ஏங்கிய ஏக்கம் அந்தப் பார்வையின் அர்த்தம் என்பது அவருக்குத் தெரியாதா ?

''சரி வா, போகலாம்'' என்றார்.

''எங்கே?''

''வீட்டுக்கு.''

அவள் மௌனமாக அவர் பின்னே நடந் தாள். வீடு வந்து சேர்வதற்குள் விளையாட்டுச் சாமான்களும், தின்பண்டங்களுமாக வாங்கிக் குவித்துக் கொண்டு வந்து விட்டாள். எல்லாம் அந்தக் குழந்தைக்குத்தான். அன்றிரவு முழுதும் அவள் தூங்கவில்லை. குழந்தை


"எனது தொழிற்சாலைக்காக
அவசரமாக எனக்கு கடன்
தேவையாயிருக்கிறது.
நான் என்ன செய்வேன்?"
"நீங்கள் ஸ்டேட் பாங்கில்
முயற்சி செய்தீர்களா?
சிறிய கைத்தொழில் நடத்து
பவர்களுக்கு பண உதவி செய்
வதற்காகவே அவர்களிடம்
ஒரு திட்டம் இருக்கிறது"

யைக் கொஞ்சுவதிலும் தூங்கப் பண்ணுவதிலும் பொழுது கழிந்து விட்டது. காலையில் ஊருக்குப் போவதாக இருந்தவர்கள் சுந்தரமூர்த்தியின் பிடிவாதத்தால் இரண்டு நாட்கள் தங்கி விட்டார்கள். அந்த இரண்டு நாட்களிலும் குழந்தையை அதன் பெற்றோரிடம் சேர்த்துவிடப் பிரயத்தனப் பட்டார்கள். அந்த ஜனப் பிரளயத்தில் யாரையும் கண்டு பிடிக்க முடியாமல் போய் விட்டது.

குழந்தைக்கு அவர்கள் வித்தியாசமாகப் படவில்லை. பார்வதிக்கும் அவள் தாய்க்கும் ஓர் இம்மிகூட. உடையில்கூட வேற்றுமை இல்லை. ஒரே வார்ப்படம் மாதிரித்தான் இருந்தார்கள். குழந்தை பரிபூரணமாக அவர்கள்தான் பெற்றோர் என்று நம்பி விட்டாள். குழந்தைப் பருவத்தில் ஏற்படும் நம்பிக்கையை யாராலும் மாற்ற முடியாது. திடமான முடிவோடு அன்றைக்கு ஊருக்குக் கிளம்பி விட்டார்கள். ரயில் புறப்பட்ட போது பார்வதியின் நெஞ்சில் ஒரு விநாடி அந்த எண்ணம் தோன்றியது. ரயில் போகும் வேகத்திலேயே அந்த எண்ணமும் மறைந்து விட்டது.

சுந்தரமூர்த்திக்கு, 'திருட்டுச் சொத்து. அபகரித்துக் கொண்டு போகிறோம்' என்கிற வேதனை ஊர் வந்து சேரும் வரை இருந்தது.

வாதனையும் வேதனையும் மனச் சலனமும் அந்த நேரம் வரைதான் போலிருக்கிறது. பின்னால் சர்வ சாதாரணமாகி விடுகிறது. தம்பதிகள் இருவரும் எவ்விதமான சலனமும் இல்லாமல் தங்கள் குழந்தை என்ற திருப்தியுடன் வீடு வந்து சேர்ந்தார்கள்.

வீட்டுக்கு வந்தவுடன் குழந்தை வீட்டைச் சுற்றிச் சுற்றி மிரள மிரள விழித்தாள். அவர்கள் வீடு சின்ன ஓட்டு வீடு. இந்தப் பங்களாவைப் பார்த்ததும் அவளுக்குப் புதுமையாகத் தோன்றியது.

''என்னடி கண்ணு, அப்படிப் பார்க்கிறே?'' என்றாள் பார்வதி.

''என்னம்மா, கண்ணுங்கிறே? 'பிரேம்'னு தானே நீ வழக்கமாக் கூப்பிடுவே?''

இதைக் கேட்டுப் பார்வதி துணுக்குற்றாள். சமாளித்துக் கொண்டு ''சும்மா, செல்லமா அப்படிக் கூப்பிட்டேன்'' என்றாள்.

குழந்தை பிரேமா அவள் அன்புப் பிடியை விலக்கிக் கொண்டு தோட்டத்துக்குள் குடுகுடுவென்று ஓடினாள். அவள் பின்னாலேயே பார்வதியும் போனாள். தோட்டத்தில் சுந்தரமூர்த்தி நின்று கொண்டிருந்தார். ஓடி வந்த குழந்தை ஏமாற்றத்துடன், ''எங்கேயம்மா லட்சுமி?'' என்றாள். கணவனும் மனைவியும் ஒரு வரை யொருவர் புரியாமல் பார்த்தனர். அவர்களின் பார்வையில் லட்சுமி என்பது யார் என்ற சந்தேகம் தேங்கி நின்றது.

''எங்கேம்மான்னு?''

''வந்து...... வந்து...... லட்சுமின்னு.... மின்னு.....'' பார்வதி தடுமாறினாள். இந்தக் குழந்தையின் கேள்விக்கு என்ன பதில் சொல்வேன்? ஒவ்வொரு கணமும் சோதனை போல் இருக்கிறதே. ஒரு வேளை நம்மை யாரென்று புரிந்து கொள்வாளோ? குழந்தையின் மனத்தில் சந்தேகம் விழுந்து விடக் கூடாதே.

''அம்மா மறந்துட்டா. ஏம்ப்பா நம்ம பசுமாடு லட்சுமி எங்கேப்பா?'' தாய் பேச்சு வராமல் திகைத்து நிற்பதைக் கண்டு தந்தையிடம் கேட்டாள் பிரேமா.

இருவருக்கும் உயிர் வந்த மாதிரி யிருந்தது. ஒரு நிமிஷத்துக்குள் சின்னக் கேள்வி என்ன பாடுபடுத்தி விட்டது! சுந்தரமூர்த்தி குழந்தையைத் தூக்கிக் கொண்டு, ''அதுவா, நம்ம ஊருக்குப் போயிருந்தோமில்லே. அது மாதிரி அதுவும் ஊருக்குப் போயிருக்கு. நாளைக்கு வந்துவிடும்'' என்று தட்டிக் கொடுத்தார்.

அன்றிரவு பிரேமா தூங்கிப் போன பிறகு கணவரிடம் ரகசியமாகச் சொன்னாள் பார்வதி. ''அவர்கள் வீட்டில் லட்சுமிங்கிற பசு இருக்கும் போல் இருக்கு. நீங்க நாளைக்கே ஒரு பசு வாங்கிடணும். குழந்தை மனத்தில் எந்த வித்தியாசமும் படக்கூடாது'' என்றாள்.

சுந்தரமூர்த்தி மறுநாளே தோட்டத்தில் ஒரு பசுவைக் கொண்டுவந்து கட்டிவிட்டார்.

காலைக்காப்பி குடிப்பது அவர்கள் பழக்கம். காலையில் படுக்கையில் தூங்கிக் கொண்டிருந்த பிரேமாவை எழுப்பிக் காப்பி கொடுத்தாள் பார்வதி.

பிரேமா அவளை முறைத்துப் பார்த்துக் கொண்டே, ''நீதான் பல்லு விளக்காமே எதையும் சாப்பிடக் கூடாதுன்னு அடிச்சே. இப்போ நீயே காப்பி குடுங்கிறியே'' என்றாள்.

பார்வதி விக்கித்துப் போய் விட்டாள். இவளை இலகுவில் புரிந்து கொள்ள முடியாது போலிருக்கே. இந்த வயதில் இவளுக்குத் தான் என்ன அறிவு. இந்தப் பெண்ணை எப்படிச் சமாளிப்பேன்?

''இன்னிக்கு மட்டும்தான். நாளைக்கெல்லாம் பல்லு விளக்கிட்டுத்தான் குடிக்கணும். எங்கே குடி பார்க்கலாம். என் செல்லப் பிரேமில்லே'' என்று தாஜா பண்ணிக் குடிக்க வைத்தாள் பார்வதி.

சுந்தரமூர்த்தி ரகசியமாக மனைவியிடம் சொன்னார். ''அவங்க வீட்டிலே பெட் காப்பி பழக்கம் இல்லே போல் இருக்கு. நாளையிலிருந்து பெட்காப்பியை நிறுத்திவிடு.''

புருஷனும் மனைவியும் போட்டி போட்டுக் கொண்டு குழந்தையின் இஷ்டத்துக்குப் பணிந்து போனார்கள். மறு நாளிலிருந்து அவர்கள் வீட்டில் பெட்காப்பி கிடையாது.

இப்போதெல்லாம் சுந்தரமூர்த்தி பாண்ட் போடுவதில்லை. வேட்டிதான் கட்டுகிறார். அது மட்டுமில்லை. கண்ணுக்குக் கண்ணாடி வேறு போட்டுக் கொள்கிறார். எல்லாம் பிரேமாவின் கேள்விகளின் பலன்தான். வீட்டின் பழக்கவழக்கமே சுத்தமாக மாறிவிட்டது அவள் வரவால். எல்லாம் அவள் ஆட்டி வைக்கும் கூத்துப்படிதான் நடக்கிறது. அவள் விருப்பத்தை அவர்கள் புறக்கணிப்பதில்லை. அவள் கேள்விகளில் பழைய வாசனையின் உயிர் இருக்கிறது. அதை அலட்சியப்படுத்தி விட்டால் குழந்தையின் வெள்ளை உள்ளத்தில் விகற்பம் என்னும் கரும்புள்ளி விழுந்து விடுமே என்று பயந்தார்கள் அவர்கள்.

அன்றைக்குத் தாயைப் பார்க்கவே பிரேமாவுக்குப் பயமாக இருந்தது. பொழுதெல்லாம் அவளிடம் ஒண்டாமல் மிரண்டு விலகி விலகியே இருந்தாள். உண்மை எந்த நேரத்

தில் வெளிப்படுமோ என்ற அச்சம் அவளை ஆட்டிப் படைத்தது. அவள் செய்த காரியம் மட்டும் அப்பாவுக்குத் தெரிந்து விட்டால் அவ்வளவுதான். முன்பு ஒரு நாள் செய்த அதே தவறுக்குக் கிடைத்த தண்டனை இருக்கிறதே அப்பப்பா! அதை நினைக்கும்போதே உடல் புல்லரிக்கிறது.

குழந்தை புறங்கையைத் திருப்பிப் பார்த்தாள். சூடு விழுந்த தழும்பு மல்லாந்து கிடக்கும் பல்லி போல் இன்னும் இருக்கிறது. முன்பு ஏதோ கோபத்தில் ஜாடியைத் தள்ளி விட்டு உடைத்ததற்கு, 'இனிமேல் இப்படிச் செய்வியா?...' என்று அம்மா கொடுத்த தண்டனை அது. இன்றைக்குப் பிரேமாவுக்கு அப்படி ஏதும் கோபமில்லை. விளையாட்டு மும்முரத்தில் ஓடி வரும்போது கைபட்டு அந்தப் பூந்தொட்டி கீழே விழுந்து உடைந்து விட்டது. பூந்தொட்டி உடைந்த அந்தக் கணத்திலேயே இன்றைக்கும் அம்மா சூடு போட்டு விடுவாளோ என்ற கிலி பிடித்துக் கொண்டது. இன்னும் இந்த விஷயம் அம்மாவுக்குத் தெரியாது. தெரிந்தால்? குழந்தையின் பயம் நிறைந்த கண்களுக்குத் தாய் நரசிம்மாவதாரமாகத் தெரிந்தாள்.

எதற்கு அஞ்சிப் பதுங்கிக் கொண்டிருந்தாளோ, அது நடந்து விட்டது. சிறிது நேரத்தில் பார்வதி தொட்டி உடைந்து கிடப்பதைப் பார்த்து விட்டாள். ''இதை யார் உடைத்தது?''' என்று கேட்குமுன்பே 'கோ' வென்று அழுது விட்டாள் பிரேமா. குழந்தை இருந்தாற் போலிருந்து அழுவது அவளுக்குப் புரியவில்லை. ''என்ன பிரேம், என்ன... என்ன?'' குழந்தையை அணைத்துக் கொண்டு பதறினாள். விக்கலும் பொருமலும் தொண்டையை அடைக்க, ''நா....நா... உடைச்சுப்புட்டேன் சூடு போட்டுடாதே அம்மா!'' என்றாள்.

பார்வதியின் உடல் ஒரு விநாடி ஆடியது. ''என்ன நான் சூடு போட்டேனு? நா...நா... எப்போ சூடு போட்டேன்...?'' குழறினாள்.

முன்பு சூடு போட்டதை அம்மா மறந்து விட்டாள் என்று கையை அவளிடம் காட்டி அன்றைக்கு நடந்ததைக் குழந்தை சொல்லி விட்டாள். தாய் நெஞ்சம் உருகியது. 'அந்தப் பாவிக்கு இந்தப் பட்டுத் தளிர் மேனியில் சூடு போட எப்படித்தான் மனம் வந்ததோ?' என்று நினைத்துக் கொண்டு, ''இனிமேல் நான் சூடு போட மாட்டேன்'' என்று சமாதானம் பண்ணித் தேற்றினாள். குழந்தைக்குத் தாயின் செய்கை ஆச்சரியமாக இருந்தது. விளையாட ஓடிப் போய் விட்டாள்.

குழந்தை, இசையின் லயிதம் போல் அசைந்து அசைந்து நடந்து செல்வதைச் சஞ்சலத்துடன் பார்த்துக் கொண்டு நின்று விட்டாள் பார்வதி.

எந்த ஓர் இரகசியமும் புதைந்து விடுவதில்லை. ஒரு நாள் வெளிப்பட்டே தீரும் என்பது உண்மையாகி விடுமோ? அந்தச் சின்னஞ்சிறு உள்ளத்தில், நினைவில் இன்னும் என்னவெல்லாம் புதைந்திருக்கிறதோ? கோடானு கோடி ஒளி வெள்ளத்துக்கும் தப்பி எங்கோ சிறு நிழல் துணுக்கு இருக்கத்தான் செய்கிறது. எங்கோ பிறந்து வளர்ந்த பாசமும், பந்தமும் நினைவில் படிந்து போன ஆசையும் அன்பும் ரத்தத்தோடு வந்துவிட்ட பழக்க வழக்கங்கள் 'குபுக் குபுக்'கென்று முன்னுக்கு வந்து விடுகின்றன. பெற்றவர்களாக இருந்தால் அதைப் புரிந்து கொள்வார்கள். நான்...நான்....எனக்கும் அவளுக்கும் என்ன உறவு? என் உறவு....பொய்யாயிற்றே?

மனத்தின் கர்ப்பத்தில் இலை மறைவாக இருந்துகொண் டிருக்கும் அந்த எண்ணம் ஒரு நாள் பிரித்து விடுமோ?

இதயத்தினுள் ஓவியமாக வைத்து வளர்ப்பதை யெல்லாம் என்றைக்காவது பொய்யாக்கி விடுவாளோ?

உயிரோடு கலந்து விட்டாள் என்று புளகாங்கிதம் அடையும்போதெல்லாம், இப்படி ஏதாவது நடந்து விடுகிறது. சந்தர்ப்பமும் சூழ்நிலையும் எங்களைத் தாய் தந்தையாக்கி இருக்கின்றன. இதுதானு அவளுக்கும் எங்களுக்கும் உள்ள பந்தம்? அப்படித்தான் என்பது போல் ஒவ்வொரு கணமும் நிரூபிக்கிறாள். அன்றைக்குத் திடுதிப்பென்று, ''பாட்டி எப்போது ஊரிலிருந்து வருவாள்?'' என்று கேட்டு விட்டாள்.

மனக அப்போதெல்லாம் எப்படிப் பீதி அடைகிறது! அவள் பாட்டி என்பது யார்? அவள் எந்த ஊருக்குப் போயிருக்கிறாள் என்பது இவர்களுக்கு எப்படித் தெரியும்? கேள்விக்குப் பதில் சொல்லியாக வேண்டும். என்ன சொல்வது? ''பாட்டி சீக்கிரம் ஊரிலிருந்து வந்து விடுவாள்'' என்று குழந்தையைச் சமாதானம் பண்ணுவதற்குள் எப்படி எப்படியோ மனம் தவித்து விட்டது.

இரவில் தூங்கப் போகும்போது பிரேமா சொன்னபடி பார்வதி தட்டிக் கொடுத்துக் கொண்டே குயில் கதை சொல்கிறாள். இரட்டைச் சடைதான் பிடிக்குமாம். பச்சைப் பட்டுக் கவுன்தான் வேண்டுமாம். அடுத்த மாதத்திலிருந்து பர்வதத்தோடு பள்ளிக்கூடம் போகப் போகிறாளாம். அந்த வீட்டில் எல்லாம் அவள் ஆட்சிதான். தம்பதிகள் இருவரும் அவளைத் தன் வயிற்றில் பிறந்த குழந்தையாகவே ஆக்கி விட்டார்கள். கும்பகோணத்து நிகழ்ச்சி ஒரு பழைய கனவாகவே ஆகிவிட்டது.

• • •

கூட்டிலில் உட்கார்ந்து நினைவுகளில் ஆழ்ந்துவிட்ட பார்வதி நெடுமூச்செறிந்தாள். ''கடவுள் கண் திறந்து கொடுத்த செல்வம்'' என்று முனகிக் கொண்டே எழுந்து நின்றாள்.

ஹாலில் விளையாடிக் கொண்டிருந்த குழந்தைகள் கும்மாளி போட்டு ஒரேயடியாகச் சிரித்தன. சிரிப்பு ஓய்ந்ததும், பர்வதம் ரகசியமாகப் பிரேமாவின் காதில் அந்த இனிப்புச் செய்தியைச் சொன்னாள். ''எங்க வீட்டிலே ஒரு தங்கச்சி பிறந்திருக்கு.'' வக்கணையுடன் பர்வதம் சொன்னதைக் கேட்ட பிரேமாவுக்கு அந்த ஞாபகம் சட்டென்று வந்தது. அன்று ஒரு நாள் பாட்டி சொன்னாளே, ''உனக்கு ஒரு பாப்பா பிறக்கப் போகுது''ன்னு. பாப்பா எப்போ பிறக்கும்? அவளுக்கும் பர்வதத்துக்கு மாதிரி தனக்கு ஒரு தங்கச்சி இருந்தால் எப்படி இருக்கும்

என்று தோன்றியது. அந்த ஆவல் உள்ளத்தில் கரந்து கொண்டு வந்தது.

தங்கச்சிக்கு ஜோராய் மிட்டாய் கொடுக்கலாம். கையைப் பிடித்து அழைத்துக் கொண்டு பள்ளிக்கூடத்துக்குப் போகலாம். காழு இல்லாமல் கண்ணாமூச்சி விளையாடலாம். ரமேசப் பயல் சண்டைக்கு வந்தால் இரண்டு பேரும் சேர்ந்து சண்டை போட்டு அவனை விரட்டியடித்துவிடலாம்.

பிரேமாவால் உள்ளத்தின் துடிப்பை அடக்க முடியவில்லை. குழந்தை மனம் ஆனந்தத்தில் துள்ளியது. பார்வதத்திடம், ''இரு எங்கம்மாகிட்டே போய்க் கேட்டுட்டு வந்துடறேன்'' என்று சொல்லிக் கொண்டே பார்வதி இருக்கும்அறையை நோக்கிஓடினாள். அந்த நேரத்தில் பார்வதி திரையைக் கையில் தள்ளிக் கொண்டு வெளி வரப் பார்த்தாள். ஓடி வந்த குழந்தை அவள் கால்களைக் கட்டிக் கொண்டு, அண்ணாந்து தாய் முகத்தை வாத்ஸல்யத்துடன் பார்த்தாள். ''ஏம்மா, உனக்கு இன்னொரு பாப்பா பிறக்குமின்னு பாட்டி சொன்னாளே, எப்பம்மா பிறக்கும்?'' என்று கிணு கிணு என்று மணி அடிப்பது போல் கேட்டாள்.

பார்வதிக்கு அந்தக் கணத்தில் உலகம் தலை கீழாகச் சுழல்வது போலிருந்தது. கண்கள் இருண்டு கொண்டு வந்தன. உடல் கிடுகிடுவென்று நடுங்கியது. நாக்கு மேலண்ணத்தில் ஒட்டிக் கொண்டது. அடி வயிற்றிலிருந்து பீறிட்ட அந்த உணர்வு அழுகையாக வெடித்தது. கண்களில் தாரை தாரையாகக் கண்ணீர் பெருகியது. கேவிக் கேவி அழுதாள். ''என் வயிற்றில் குழந்தை பிறக்கப் போகிறது. இந்த மலடிக்கு அந்தப் பாக்கியம் தான் இல்லையே. குழந்தை நம்பிக் கொண்டிருக்கிறாளே? எல்லாவற்றையும் சமாளித்த நான் இந்தக் கேள்விக்கு எப்படிப் பதில் சொல்வேன்? என்ன பதில் சொல்வேன்?''

உண்மையை இம்முறை மறைக்க முடியாதோ....?

அவளுக்கு எல்லாவற்றையும் நினைக்க நினைக்க உடல் தீப்பற்றி எரிவது போல் இருந்தது. தாய் அழுவதைக் கண்டு குழந்தை மிரண்டுபோய்ப் பிடியை விட்டு ஓரடி பின் வாங்கியது. அந்தக் கணத்தில் பார்வதியின் பிடியிலிருந்த திரை நழுவி விழுந்து இருவருக்கும் நடுவில் ஒரு சுவர் போல் தொங்கியது.

பிரேமா என்ன நினைத்தாளோ? அவளுக்கு எப்படித் தோன்றியதோ? எதற்கோ ஏங்கி அழுதாள்.

குழந்தை அழுவதைக் கேட்டுத் திடுக்கிட்டுப் போய்ப் பார்வதி பெற்ற பாசத்துடன் நிமிர்ந்து பார்த்தாள். கதவுபோல் அந்தத் திரை குழந்தையை மறைத்துக் கொண்டு தொங்கியது. அந்தத் திரையை ஊடுருவிக் கொண்டு அவளால் பார்க்க முடியவில்லை.

பிரேமா அந்த விநாடியில் தவிப்புடன் தாயைத் திரும்பிப் பார்த்தாள். திரை மறைத்துக் கொண்டு தொங்கியது. அவளால் அம்மாவைப் பார்க்க முடியவில்லை.

அந்தத் திரை அவர்கள் இருவருக்கும் நடுவில் ஏதோ ஓர் உண்மையைச் சொல்வது போலத் தொங்கியது.


சிக்கனமாகவே
அவள் குடித்தனம்
நடத்தினுள்...
செலவினங்களைக் கட்டுப்படுத்தி, கணவனுக்கு
அனுசரணையாக இருந்தாள் அவள். ஆயினும்
ஒரு விஷயத்தில் சற்று கவனக்குறைவாக இருந்து
விட்டாள். தான் வாங்கிய பருத்தித் துணியில்
'ஸான்போரைஸ்ட்' முத்திரை இருக்கிறதா என்பதைக்
கவனிக்கவில்லை. முடிவு? ஒரேயொரு
சலவைக்குப்பிறகு அவளுடைய புதுச் சேலை
சுருங்கிப் போய்விட்டது.
யார் கூறுவதையும் நம்பிவிடாதீர்கள்.
நீங்கள் வாங்கும் பொருள்கள் முழுப்பயனளிக்குமா
என்பதை உறுதிசெய்து கொள்ளுங்கள்—
லேபில மேல்
·SANFORIZED·
என்ற முத்திரையுள்ளதா
உடைகள் உடம்புக்குப் என்று பாருங்கள். உங்கள்
பொருந்தாதபடி சுருங்காது.
விவரங்களுக்கு: 'ஸான்போரைஸ்ட்' ஸர்வீஸ்,
95, மெரீன் டிரைவ, பம்பாய்-2
SAN.277A TA



# வென்றவர் தோற்றார்!

தாமரை மணாளன்

சிங்கனூர் மிராசுதார் சிதம்பரம் பிள்ளைக்கும் அவருடைய காரியஸ்தர் மாணிக்கவாசகத்துக்குமிடையே ஏற்பட்டிருக்கும் தொடர்பு அந்த ஊருக்கே ஒரு புதிர். சிதம்பரம்பிள்ளை அந்த ஊரிலேயே 'பெருங் கை'; மாணிக்கவாசகத்துக்கோ 'நீளக் கை'. இந்த இரண்டு கைகளும் நான்கு வருட காலமாக எப்படி உதறிக் கொள்ளாமல் கோத்திருந்தே செயலாற்ற முடிகிறது என்று ஊரார் திகைத்தால் அதில் நியாயம் உண்டு. ஆனால் விஷயங்கள் நியாய அநியாய எல்லைக் கோடுகளைக் கடந்த நிலையிலேயே இயங்கி வந்தன.

அட்டை என்ற வார்த்தைக்கு அகராதியில் எந்தப் பொருளும் இருக்கலாம். ஆனால் அந்த வார்த்தைக்குச் சிங்கனூரைப் பொறுத்த அளவில் ஒரே பொருள்தான் இருந்தது. அது 'திரு மாணிக்க வாசகம்' என்பதுதான். மாணிக்கவாசகத்துக்கும் பூர்வீகம் சிங்கனூர்தான். ஆனால் அவ்வூர்வாசிகளுக்கு இல்லாத சில விசேஷ அனுபவங்கள் அவரிடம் இருந்தன. இளமையிலேயே ஊரை விட்டுப் பிழைப்புக்காக வெளியேறிய 'பொடியன்' மாணிக்கவாசகம் கிட்டத்தட்ட முப்பதுவருட காலம் அங்கே இங்கே சுற்றிவிட்டு 'நாலும் தெரிந்த' அனுபவத்தோடும், ஒரு மனைவி, ஒரு மகன் என்ற குடும்ப சகிதம் மீண்டும் சொந்த ஊரில் வந்து விழுந்தார். ஊர் திரும்பும் போது அவர் கொண்டு வந்த ஆஸ்தி 'நாலும் தெரிந்த' அனுபவம்தான். அந்த அனுபவத்தை வைத்துத்தான் அவர் சொச்ச காலத்தையும் தள்ள வேண்டியவராக இருந்தார். ஆனால் அது வரை வாழ்க்கையில் நடந்து பழகிய பாதையின் கோளாறோ என்னவோ அவருக்குத் தெரிந்த 'நான்கு' விஷயங்களில் மூன்று அவ்வளவு பெருமைக்குரிய சமாசாரங்கள் அல்ல.

எப்போதும் வெளியூர்களில் சுற்றி விட்டு வரும் ஆசாமிகள் பேரில் கிராமத்தார்களுக்கு ஒரு கவர்ச்சி உண்டு. தங்களுக்குத் தெரியாததெல்லாம் அவர்களுக்குத் தெரியும் என்பதாக ஒரு நினைப்பு. ஆனால் தங்களிடம் உள்ளவற்றில் பல அந்தப் பேர்வழிகளில் அநேகருக்கு இருக்காது என்ற சங்கதி அவர்களுக்குத் தெரிந்திருக்காது. அப்படியோர் உபசாரம் மாணிக்கவாசகத்துக்கும் ஊர் திரும்பிய புதிதில் கிடைத்தது. அதை வெகு சூரத்தனமாகப் பயன்படுத்திக் கொண்டார் அவர். தம் 'வெளிப் பிரதேசக் கவர்ச்சி' ரசம் குறையுமுன்னரே ஊர் நிலையைக் கவனித்துச் சிதம்பரம் பிள்ளையிடம் ஒட்டிக் கொண்டார்.

சிலருக்குச் செல்வம் சொத்தில் இருக்கும்; சிலருக்குப் பாங்கில் இருக்கும். ஆனால் மாணிக்கவாசகத்துக்கு அவர் நாக்கில் இருந்தது. வந்த ஒரு வாரத்துக்குள்ளேயே சிதம்பரம் பிள்ளையை அண்டி உறவாட அவருடைய திரண்ட சொத்துக்களை நிர்வகிக்கும் காரியஸ்தராகி விட்டார்.

வசதியான இடத்தில் வசதியாக உட்கார்ந்து கொண்டதும்தாம் தம் 'பரந்த' அனுபவத்தில் தெரிந்து கொண்டிருந்த சித்து விளையாட்டுக்களை யெல்லாம் சோதனை செய்து பார்க்கத் தொடங்கி விட்டார் மாணிக்கவாசகம். சிதம்பரம் பிள்ளையின் காரியங்கள் நிர்வகிக்கப் பட்டனவோ என்னவோ, மாணிக்கவாசகத்தின் காரியங்கள் அற்புதமாக நடந்தேறின.

'வேலை செய்தோம, சம்பளம் வாங்கினோம்' என்ற அப்பாவித்தனமான வாழ்க்கையில் அவருக்குச் சுவாரசியம் இல்லை. நிர்ணயிக்கப்பட்ட சம்பளம்தான் வருகிறபடி வருமே, அதில் என்ன சாமர்த்தியம்? மாமூல் ஊதியத்துக்கு உபரியாக முதலாளியின் வருமானங்களிலும் பலாபலன்களின்மீதும் ஒரு பங்கை அனுபவிப்பதில் தான் ஆரம்ப முதலே அவருக்குத் திருப்தி. களத்திலிருந்து பத்துக் கோட்டை நெல் முதலாளி வீட்டுக்குப் போனால் அதில் அரைக் கோட்டையாவது ரகசியமாகத் தம் வீட்டில் சேர்த்து விட்டால் தான் அவருக்கு நிம்மதி ஏற்படும். மாலையில் இரண்டு வண்டி விறகுக் கட்டை காட்டிலிருந்து வந்து முதலாளி வீட்டில் இறங்கினால், கருக்கல் ஆனபிறகு தலைச்சுமையில் நாலு எடை விறகாவது குறுக்குப் பாதை வழியாக வந்து மாணிக்கவாசகம் வீட்டுப் பரணுக்கு வரவாகி விடும். புளியந்தோப்பு குத்தகைதாரர் சிதம்பரம் பிள்ளையிடம் இரண்டாயிரம் ரூபாய் பாட்டப் பணத்தைக் கொடுத்து விட்டு, ஊர் எல்லையைக் கடந்து போய்க் கொண்டிருக்கும் போது மாணிக்கவாசகம் அவர்கள் வீட்டிலும் அவர் சகதர்மிணி குறைந்த பட்சம் நூறு ரூபாயையாவது எண்ணி அரிசிக் குதிருக்குள் திணித்துக் கொண்டிருப்பாள்.

இத்தனை நடக்குமே, முதலாளி சிதம்பரம் பிள்ளையிடம் இவரைப் பற்றிக் கேட்டுப் பார்க்க வேண்டும். 'தங்கமான மனிதர்' என்று வாய் நிறையச் சொல்வார். ஆனால் ஊர் முழுவதும், 'அப்பாவிச் சிதம்பரம் பிள்ளையை உறிஞ்சுகிறான் மனுசன்' என்று தான் வாய்க்கு வாய் விமரிசனம் எழுந்தது. இதைப் பற்றிச் சிதம்பரம் பிள்ளையின் காதுகளில் தான் எவனும் ஓதியிருக்க மாட்டானா, அல்லது அவருடைய சம்சாரத்திடம் ஓசிக்குக் கடுகு வாங்க வரும் பெண் எவளும் சொல்லியிருக்கத்தான் மாட்டாளா? எல்லாம் இருக்கும். ஆனால் மாணிக்கவாசகத்தின் சாமர்த்தியத்தைத் தான் குறிப்பிட வேண்டும்; எப்படிச் சமாளிக்கிறாரோ, எப்படி



நடிக்கிறாரா, அன்று போலவே நாலு வருட காலமாகச் சிதம்பரம்பிள்ளையின் நம்பிக்கைக் குப் பாத்திரமாகவே நடமாடிக் கொண்டிருக் கிறார். சிதம்பரம் பிள்ளையின் நம்பிக்கையும் அன்பும் அவரிடம் அதிகப் பட்டிருக்கிறது என்றே சொல்ல வேண்டும். இல்லாவிட்டால் தன் மகன் நடேசனைக் கல்லூரிக்கு அனுப்பும் போது மாணிக்கவாசகத்தின் மகன் மூர்த்தி யையும் தம் செலவில் கல்லூரிக்கு அனுப்பு வாரா சிதம்பரம் பிள்ளை?

ஆமாம்; சிதம்பரம் பிள்ளை செலவிலேயே அவருடைய மகனைப் போல் மாணிக்கவாசகத் தின் மகனும் கல்லூரி படித்து முடித்து விட்டான். அந்தச் சமயத்தில் தான் யதேச் சையாக அந்தச் சம்பவம் நடந்தது.

பட்டணத்திலிருந்து யாரோ ஒரு பிரமுகர் குடும்பத்துடன் காரில் யாத்திரையாக வந்து சிங்கனூர் அருகே வந்ததும் கார் 'ரிப்பேர்' ஆகி விடவே, பெண்டு பிள்ளைகளுடன் சந்தி யில் நின்றார். அந்தச் சமயம் அவரைக் கண்ட சிதம்பரம் பிள்ளை அவரை உபசரித்துத் தம் வீட்டில் தங்க வசதி செய்து கொடுத்தார். ஒரு மணி நேரத்துக்குப் பின், கார் சரி செய் தானதும், அவர்கள் பிரயாணத்தைத் தொடர்ந்து கிளம்பினர்.

இந்தச் சம்பவத்தைச் சிதம்பரம் பிள்ளை கிட்டத்தட்ட மறந்தே போயிருந்தார். ஒரு சமயம் பட்டணத்துப் பிரமுகர் தம் இருப் பிடத்திலிருந்து அவருக்கு நன்றி தெரிவித்து ஒருகடிதம் எழுதியிருந்தார். அதில், சிதம்பரம் பிள்ளை தம் மகனைச் சென்னைக்கு அனுப்பி னால் தமக்குத் தெரிந்த ஒரு கம்பெனியில் வேலை பார்த்துக் கொடுப்பதாகவும் குறிப்பிட் டிருந்தார். தம் மகன் படித்து விட்டு வீட்டி லிருப்பதாகச் சிதம்பரம் பிள்ளை இலேசாகச் சொல்லியிருந்தார். அதை நினைவுபடுத்தித் தான் பட்டணத்துக்காரர் அப்படி எழுதி யிருந்தார்.

எவ்வளவு வசதி யிருந்தாலென்ன, தம் மகன் வேலை பார்க்க வேண்டுமென்று எந்தத் தந்தை விரும்ப மாட்டார்? அதுவும் ஒரு பெரியவர் அப்படி வலிய எழுதும்போது தம் மகன் நடேசனைச் சென்னைக்கு அனுப்ப ஏற்பாடு செய்தார் சிதம்பரம் பிள்ளை. அவ னுடன் சென்று அந்தப் பிரமுகரையும் கண்டு பேசிச் சகல காரியங்களையும் கவனித்து விட்டு வரும் பொறுப்பைக் காரியஸ்தர் மாணிக்க வாசகத்தினிடம் ஒப்படைத்தார் பிள்ளை.

சென்னைக்குப் புறப்படவென்று நிச்சயித் திருந்ததற்கு முந்திய நாள், "எனக்குப் பட்ட ணத்துக்குப் போகத் தோது படாது போலிருக் குங்களே!" என்று சிதம்பரம் பிள்ளையிடம் வந்து கையைப் பிசைந்து கொண்டு நின்றார் மாணிக்கவாசகம்.

"ஏன்?" என்று திகைப்புடன் கேட்டார் சிதம்பரம் பிள்ளை.

"எல்லாம் என் கர்மம். இப்படியொரு பிள்ளையைப் பெறணும்னு என் தலையில் எழுதி யிருக்கான்!" என்று ஏகக் குமுறலுடன் பதி லளித்தார் மாணிக்கவாசகம்.

திடீரென்று அவர் தலையில் 'எழுதியவனை' அலுத்துக் கொண்டதற்குக் காரணம் புரியா மல் திகைத்தார் சிதம்பரம் பிள்ளை. ஒரு முறைக்கு நான்கு முறை அவர் வற்புறுத்திக் கேட்ட பின்தான் மாணிக்கவாசகம் மூட் டையை அவிழ்த்தார். "அறிவு கெட்ட பய! சவத்தைத் தள்ளுங்க! நான் மெட் ராஸுக்குப் போகிறதாச் சொன்னதும் அவனும் கூட வரணும்னு அடம் பிடிக் கிறான். சிநேகிதர்களைப் பார்க்கணுமாம். பெரிய குபேரன் மகன், சிநேகிதங்களைப் பார்க்க அம்பது நூறுன்னு செலவளிச் சுப் போகணும்! வெறும் பய! அவன் பேச்சை விடுங்க! நல்ல காரியமாத் தம்பி நடேசனை அழைச்சுக்கிட்டுப் போறப்போ இந்தப் பய அபசகுனமா முரண்டுகிறானேன்னு பார்த் தேன்" என்றார்.

"நீங்க ஒண்ணு. மூர்த்தி சிறிக தானே, ஆசைப்பட்டான் என்றால் அழைச்சுட்டுப் போங்களேன். இதுக்காகவா யோசிக்கி றீங்க? கைச் செலவுக்குக் கூட ஐம்பது ரூபாய் வாங்கிக் கொண்டு போங்க" என்றார் சிதம் பரம் பிள்ளை.

இரண்டு பையன்களையும் அழைத்துக் கொண்டு சென்னைக்குப் பயணமானார், மாணிக்கவாசகம். அங்கே தமக்குத் தெரிந் தவர் ஒருவர் வீட்டிலேயே தங்க ஏற்பாடு செய்து கொண்டார் மாணிக்கவாசகம்.

சென்னையில் போய் இறங்கியதும் நடேச னிடம், "தம்பி, இரவு முழுவதும் ரயிலில் வந்தது களைப்பாக இருக்கும். நீ கொஞ்சம் படுத்திரு. அப்புறமா 'அவுகளை'ப் போய்ப் பார்க்கலாம். நான் வெளியே போயிட்டு வர்றேன்" என்று அவனை வீட்டில் விட்டு விட்டுத் தம் மகனை, "டேய்! உன் சிநேகிதர்க ளைப் பார்க்கணும்னுசொன்னியே, வாயேன்" என்று நாசூக்காகத் தம்முடன் அழைத்துக் கொண்டு வெளியேறினார் மாணிக்கவாசகம்.

அடுத்த அரை மணி நேரத்தில் தந்தையும் மகனும் அந்தப் பிரமுகர் வீட்டு வாசலில் படியேறினார்கள். அச்சமயம் மாணிக்கவாச

கத்தின் மனத்திலிருந்த திட்டம் இதுதான். அந்தப் பிரமுகரிடம் தம் மகன் மூர்த்தியைச் சிதம்பரம் பிள்ளையின் மகனாக அறிமுகப்படுத்தி அவன் பெயருக்குச் சிபாரிசுக் கடிதத்தைப் பெற வேண்டியது. அந்தப் பெரியவர் சிதம்பரம் பிள்ளை வீட்டில் தங்கியிருந்தபோது நடேசன் ஊரிலில்லை. அதனால் நடேசன் யார் என்று அவருக்குத் தெரியாது என்ற விவரம் மாணிக்கவாசகத்துக்குத் தெரியும்.

அந்தப் பெரியவரை இருவரும் சந்தித்தார்கள். தம் திட்டப்படியே எல்லா விஷயங்களையும் அவரிடம் ஜோடித்தார் மாணிக்கவாசகம்.

சிபாரிசுக் கடிதத்தில் 'மா. மூர்த்தி' என்ற குறிப்பிட வேண்டிய இடத்தில் அப் பெரியவர் சிறிது தயங்கினார். அவருடைய தயக்கத்தைப் புரிந்து கொண்ட மாணிக்கவாசகம், ''அவாளை எல்லாரும் சிதம்பரம் என்று குறிப்பிட்டாலும் அவாளுடைய பட்டாப் பெயர் மாணிக்கவாசகம்தான்'' என்று ஒரு கணம் தானே சிதம்பரம் பிள்ளையாக அவதாரம் செய்தார்.

காரியம் முடிந்து விட்டது. சிபாரிசு செய்த பிரமுகர் உண்மையிலேயே பெரியவர். அவருடைய சிபாரிசுக் கடிதத்துக்கு உயிர் இருந்தது. தபாலில் உத்தரவு வரும் என்று சொல்லி அனுப்பினார்கள்.

ஜாகைக்குத் திரும்பியதும் நடேசனிடம், ''தம்பி, நாம் வந்த காரியம் முடிந்து விட்டது. தற்செயலாக 'அவுஹளை'ப் பார்த்தேன். உடனே அவாள் போனில் வேலைக்கு ஏற்பாடு செய்து விட்டார்கள். உத்தரவு தபாலில் அனுப்புவார்களாம்'' என்றார் மாணிக்கவாசகம்.

''நான் வந்த மட்டும் அவங்களைச் சந்திக்க வேண்டாமா?'' என்று கேட்டான் நடேசன்.

உடனே தேள் கொட்டியது போல் பெரிதாகக் கையை உதறிக் கொண்டு, ''த்சொ த்சொ! நீ அவாளைப் பார்க்க முடியாமல் போச்சே!! அவுஹ இந் நேரம் பம்பாய்க்குப் பிளேனில் போயிருப்பாஹளே, நான் வரும் போது புறப்பட்டுக் கொண்டிருந்தார்கள். திரும்ப ஒரு மாசமாகும்'' என்று சறுக்குக் கட்டை கொடுத்து அவன் வாயை அடைத்தார் மாணிக்கவாசகம்.

மறுநாளே எல்லாரும் ஊருக்குத் திரும்பி விட்டனர். நடேசனிடம் அளந்ததையே சற்று விரிவாகச் சிதம்பரம் பிள்ளையிடமும் அளந்தார் மாணிக்கவாசகம். அத்துடன் பேச்சோடு பேச்சாக ''இந்தக் காலத்தில் வேலை விஷயம் மட்டும் ஒன்றும் உறுதி சொல்ல முடியாதுங்க. பெரிய பெரிய சிபாரிசெல்லாம் பிரயோசனமில்லாமல் போயிடும். எதற்கும் அதிர்ஷ்டம் வேணும். ஆனால் நடேசனுக்குச் சிபாரிசு செய்தவங்க ரொம்பப் பெயரான ஆள். அநேகமாகக் கிடைச்சுடும்'' என்று அந்தப் பக்கம் ஒரு நம்பிக்கை மடை திறந்து பேசி வைத்தார்.

ஒரு வாரத்தில் மூர்த்திக்கு உத்தியோக நியமன உத்தரவு வந்து விட்டது. ஒரு மூச்சு 'பார்த்தாயாடி என் சாமர்த்தியத்தை!' என்று தம் மனைவியிடம் வெற்றி கொண்டாடித் தீர்த்தார் மாணிக்கவாசகம்.

''ஆமாம், தம் மகனுக்குக் கிடைக்காமல், மூர்த்திக்கு மட்டும் வேலை கிடைத்ததைப் பற்றி உங்க முதலாளி சந்தேகப்பட மாட்டாரா?'' என்று கேட்டாள் அவர் மனைவி.

''முதலாளியைப் பற்றியா கவலைப்படறே! 'ரொம்ப நாளைக்கு முன்னாலேயே மூர்த்தி ஒரு வேலைக்கு எழுதிப் போட்டிருந்தான். அது தான் வந்திருக்கு' என்பேன். நம்பி விடுவார். இப்போது பார், மூர்த்தி வேலைக்குப் போக வழிச் செலவுக்குக் கூட அவரிடமே பணம் வாங்கிக் கொண்டு வருகிறேன்'' என்று மார்தட்டி விட்டுப் புறப்பட்டார் மாணிக்கவாசகம்.

அவர் சிதம்பரம் பிள்ளையின் வீட்டை நெருங்கும் போது உள்ளே சூடான பேச்சு வார்த்தைகள் நடந்துகொண்டிருப்பது அவர் காதில் விழுந்தது. நின்று கவனித்தார்.

''அப்பா! மூர்த்திக்கு வேலைக்கு உத்தரவு வந்திருக்கிறதாம். எனக்குச் சந்தேகமாக இருக்கிறது. அன்றைக்குப் பட்டணத்தில் என்னைத் தனியே விட்டு விட்டு மூர்த்தியுடன் அவன் அப்பாவும் போய் ஏதோ செய்து வேலை வாங்கி விட்டார்கள் என்று எனக்குத் தோணுது'' என்றான் நடேசன் குமுறலுடன்.

''அந்த மனிதர் செய்தாலும் செய்வார்'' என்று ஆத்திரத்துடன் கூறினாள் சிதம்பரம் பிள்ளையின் மனைவி.

ஆனால் சிதம்பரம் பிள்ளை நிதானமாக, ''எல்லாம் எனக்குத் தெரியும். பட்டணத்திலிருந்து நாலு நாளைக்கு முன் அவங்க எனக்குக் கடிதம் எழுதியிருக்காங்க. அதுலே 'உங்கள் மகன் என்னைச் சந்தித்தான்' அப்படின்னு ஒரு வரி சொல்லியிருக்காங்க. நடேசன் அவாளைப் பார்க்கவில்லை என்று சொன்னான். அதுக்கு மேல் எனக்கு எல்லாம் புரிந்து விட்டது'' என்று கூறிப் பலமாகச் சிரித்தார்.



''என்ன சிரிப்பு வேண்டியிருக்கு! அந்த மனுஷன் நம்மகிட்டே வேலைக்கு வந்ததிலிருந்தே எல்லாரும் ஒரு மாதிரியாகச் சொன்னார்கள். நான்கூட எத்தனையோ தடவை சொல்லியிருக்கேன். உங்கள் காதில்தான் ஏறவில்லை. கடைசியில் பார்த்தீர்களா?'' என்று கொதித்தாள் அவர் மனைவி.

சிதம்பரம் பிள்ளை மீண்டும் சிரிப்புடன், ''நீங்களெல்லாம் சொல்வதற்கு முன்னே அவரைப் பற்றி எனக்குத் தெரியும்'' என்றார்.

''தெரிந்துமா அவரை வேலையில் வைத்திருந்தீர்கள்?'' என்று திகைப்புடன் கேட்டார்கள் தாயும் மகனும்.

''ஆத்திரப்படாமல் கேளுங்கள். அந்த மனிதர் இப்படியெல்லாம் செய்வதற்குக் காரணம் என்ன? நீங்கள் என்ன நினைக்கிறீர்களோ, நான் இப்படித்தான் நினைக்கிறேன். எல்லாவற்றுக்கும் காரணம் அவருடைய இல்லாமை தான். நாளைக்கே அவர் மகன் மூர்த்தி வேலையில் சேர்ந்து, குடும்பம் நல்ல வழியாகி விட்டால், அதற்கப்புறம் அவர் இப்படிச் செய்வாரா? நிச்சயம் செய்ய மாட்டார். நாளைக்கே இருந்தி விடப் போகிற ஒரு மனிதரை இன்று குற்றவாளிப் பட்டம் கட்டி அவமானப்படுத்தி அவரைத் திருந்தவிடாமல் செய்து விடவா? அதனால்தான் இவ்வளவு காலமும் எதையும் கண்டு கொள்ளாமல் இருந்தேன். நடேசா, புதுசா வேலைக்குப் போகிற பையன் வழிச் செலவுக்குப் பணமில்லாமல் இருப்பான். இப்படிச் செய்து விட்டு எப்படிப் போய்க் கண்ணில் விழிக்கிறது என்று ஒரு வேளை மாணிக்கவாசகம் வெட்கப்பட்டுக் கொண்டிருப்பார். நீ நூறு ரூபாய் எடுத்துக் கொடுத்து விட்டு வா'' என்றார்.

நியாயமோ அநியாயமோ எதைச் செய்தாலும் நெஞ்சை நிமிர்த்தியே செய்து பழக்கப்பட்டிருந்த மாணிக்கவாசகம் அன்றுதான் முதன் முறையாக நெஞ்சம் கூசிக்குறுகத் தலை குனிந்து தோளில் போட்டிருந்த துண்டைத் தலையில் போட்டுக்கொண்டு வீட்டை நோக்கித் திரும்பினார். அவர் மனம் திணறியது. முழுக்க முழுக்க வஞ்சனையுடன் அவர் செய்த காரியங்களுக்கெல்லாம் அனுதாபத்துடன் வித்தியாசமானதொரு காரணம் கற்பித்து மன்னித்ததுடன், என்றாவது ஒருநாள் தம்மிடமிருந்து மனிதத் தன்மை வெளிப்படும் என்று இத்தனை காலமாகத் தம்மையும் கட்டுப்படுத்தித் தம் பொருளைக்கூட இழந்து, நம்பிக்கையுடன் காத்திருக்கிறாரா அந்த உத்தமர்? அவர் இந்த நான்கு வருட காலமும் ஒவ்வொரு நிமிஷமும் தமக்காக நம்பிக்கையுடன் காத்திருக்கும் போது, தாம் அவருக்கு ஏமாற்றத்தைக் கொடுத்ததுடன் தம்மையும் அவமானப்படுத்திக் கொண்டிருந்ததை நினைக்க நினைக்க அவர் மனம் சுருண்டது.

இரண்டு மூன்று மாதங்களாகி விட்டன. இப்பொழுது மாணிக்கவாசகத்தின் மகன் மூர்த்தி பட்டணத்தில் வேலை பார்க்கிறான். அவன் புறப்படும் போது சிதம்பரம் பிள்ளை அவனை வீட்டுக்கு அழைத்து விருந்து வைத்து ஆசீர்வாதத்துடன் வழியனுப்பி வைத்திருந்தார். சுவாமிக்குப் பூவால் அர்ச்சனை செய்வது போல் இதற்குள் நாலைந்து கடிதங்கள் வரையில் அவன் பட்டணத்திலிருந்து சிதம்பரம் பிள்ளைக்கு எழுதி விட்டான்.

இங்கே கிராமத்தில் சிதம்பரம் பிள்ளையின் காடு கழனிகளிலும் கணக்கு அறையிலும் என்றும் போல் இன்றும் மாணிக்கவாசகத்தின் குரல்தான் கேட்கிறது. இப்பொழுது அந்தக் குரலில் முன்னிருந்த பிசிறு இல்லை; நேர்மைக்கே இலக்கணம் செய்வது போல் அது கணீர் கணீரென்று ஒலிக்கிறது.



அத்தியாயம் 21

## திருமணப் பேச்சு

ஆரம்ப விழாவை அடக்கமான முறையில் நடத்த வேண்டும் என்ற தாராவின் அவாவை யாருமே ஏற்றுக் கொள்ளவில்லை. அமர்க்களப்படுத்தி விடுவதிலேயே அனைவரும் முனைந்திருந்தார்கள். மேளத்துக்குச் சொல்லி வைத்துக் கூட்டத்துக்கு வருகிற பெரியோர்களுக்குத் தாம்பூலமும் சந்தனமும் சிறுவர் சிறுமியர்க்குக் கல்கண்டும் கொடுப்பதென்று ஏற்பாடு. வெளியூர்ப் பிரமுகர்களைக்கூட வருந்தி அழைத்தார்கள். தாசில்தார் விழாவுக்குத் தலைமை வகிக்கச் சம்மதித்தார்.

இப்படிக் கனஜோராராக மறுநாள் நடைபெறவிருந்தது பள்ளித் திறப்பு விழா. ஆகவேதான் இரவோடு இரவாகப் பள்ளியை எவ்வளவு தூரம் முடியுமோ அந்த அளவுக்கு அலங்கரித்து விட வேண்டும் என்பதில் துடியாக இருந்தாள் தாரா. கணப் பொழுதைக் கூட வீணாக்காமல் கிடுகிடுவென்று காரியங்களைக் கவனித்தாள். அதற்கு ஒத்துழைப்பதற்கு வந்த வடிவேலு, குழப்பத்தில் தன்னை ஆழ்த்தி வருவதாகத் தாரா மீது குற்றம் சாட்டிய பொழுது அவள், ''பேச்சுத் துணையாக இருந்தால் பரவாயில்லை. புதுப்புதுப் பிரச்னைகளைக் கிளப்புகிறீர்களே?'' என்று கூறிவிட்டு இலேசாகச் சிரித்தாள். ''என்ன குழப்பம் உண்டாகி விட்டது உங்களுக்கு?''

மென்மையான அவள் உள்ளத்தைக் கீறிப் பார்க்கத்தான் நினைத்தான் வடிவேலு. ஆனால் துணிவு பிறக்கவில்லை அவனுக்கு. தான் கேட்க வந்ததைக் கூறாமல் மென்று விழுங்கி விட்டு, ''பள்ளியை ஆரம்பிப்பது என்று நிச்சயித்ததும் நீங்கள் ஏன் முதலில் எங்களிடம் அதைச் சொல்லவில்லை? பொன்னம்பலத்திடம் போய் நிற்கலாமா?'' என்றான்.

''பூ! இவ்வளவுதானே? நான் என்னவோ ஏதோ என்று பயந்து விட்டேன்!'' தாரா நிம்மதியுற்றுப் பெருமூச்செறிந்தாள். ''எதிர்ப்பு உருவாவதென்றால் அது அவரிடமிருந்து தான் கிளம்ப வேண்டும். எதிரியாக மாறக் கூடியவரை முதலில் சமாளித்து விட்டால் மற்றவர்களைப் பற்றிக் கவலை இல்லை அல்லவா? பாவம்! அவர் என்னை சுபாஷ்போஸின் பிரதிநிதி என்றே தீர்மானித்து விட்டார். இல்லை என்று அவரை நம்பவைப்பது நடக்காத காரியமாகத் தோன்றுகிறது. கிராம மக்கள்தான் எவ்வளவு வெகுளிகளாக இருக்கிறார்கள்.....?''

''பொன்னம்பலத்தை நீங்கள் என்னவென்று நினைத்தீர்கள்? எல்லாம் காரியார்த்தமாகத்தான் நடந்துகொண்டிருப்பார் அவர்.''

''அதுவும் ஒருவிதத்தில் உண்மை தான்! உள்ளூற அவருக்கிருக்கும் ஆசை என்ன தெரியுமா, தம் பெண்ணை உங்களுக்குக் கல்யாணம் செய்து கொடுத்து விட வேண்டும் என்று. இந்த விஷயத்தை என்னிடம் இதற்குள் பல தடவைகளில் சொல்லி விட்டார் அவர்! என்னை உத்தேசித்து உங்கள் எல்லாரையுமே விருந்துக்கு அழைத்தது போல் சமரசம் செய்துகொண்டு விட்டாரே!''

''அப்படியானால் இன்னுமொரு பெரிய சண்டை இரு குடும்பங்களுக்கிடையில் பாக்கி யிருக்கிறது என்று சொல்லுங்கள்! இன்றைக்குச் சமாதானத்துக்கு அடி போடுகிறவர் நானேக்குக் கல்யாணம் இல்லை என்றதும் மறுபடியும் சச்சரவைக் கிளப்பத்தானே போகிறார்?''

''ஏனாம்? செல்லத்துக்கு என்ன? மூக்கும் முழியுமாக நன்றாகத்தானே இருக்கிறாள்?''

''அப்படிக் கேளுங்க!'' என்று ஆமோதிக்கிற குரல் கேட்டு இருவரும் வாசலை நோக்கினார்கள். மகள் செல்லம் பின்தொடரப் பொன்னம்பலம் வந்து கொண்டிருந்தார். ''சரியான கேள்வியாய்ப் போட்டீங்க. தம்பி பதில் சொல்லட்டும். சந்தேகத்துக்குச் செல்லத்தை ஒரு தடவை நல்லா பார்த்துக்கிட்டு வேணுமானாலும் பேசட்டும்!'' புகையிலையை வாயில் அடக்கியதால் காவியேறிய பற்கள் புலனாகிற மாதிரி சிரித்தார் பொன்னம்பலம். தாராவும் உற்சாகமாக அந்த நகைப்பொலியில் கலந்து கொள்ள, செல்லம் நாணிக் கோணித் தகப்பனாரைத் தனக்குத் திரையாக்கிக் கொண்டு ஒளிய, வடிவேலுவுக்கு எரிச்சலாக இருந்தது.

''வருந்தி வருந்தி விருந்துக்கு அழைத்த போதே நினைத்தேன், சோழியன் குடுமி சும்மா ஆடாது என்று!''

பயந்தே போய் விட்டாள் தாரா. பொன்னம்பலம் பதறி எழுமுன்னர் அவள் முன் யோசனையுடன் முந்திக் கொண்டாள். ''நீங்கள் மரியாதைக் குறைவாகப் பேசக் கூடாது'' என்றாள் வடிவேலுவை நோக்கி. ''பொன்னம்பலம் எவ்வளவோ பெருந்தன்மையுடன் நடந்து கொண்டிருக்கிறார்.''

'தம்பிக்கு என் பேரிலே கோபம் குறையவில்லை போலிருக்கு'' என்றபோது பொன்னம்பலத்தின் குரலில் சினத்தின் வேகத்தைக் காட்டிலும் வருத்தம்தான் அதிகமாய்த் தொனித்தது. ''நீங்கள்தான் அவனுக்கு எடுத்துச் சொல்லணும்'' என்று தாராவைக் கேட்டுக் கொண்டார் அவர்.

''பார்த்தீர்களா? அவர் மனத்தை நோக அடித்து விட்டீர்களே?'' என்று சற்றுக் கடுமையாகவே வடிவேலுவின் தவற்றைச் சுட்டிக் காட்டினாள் தாரா.

''அவருக்குத்தான் மனம் என்று ஒன்று இருக்கிறதா? நாங்களெல்லாம் மனிதர்களே இல்லை, மரக்கட்டைகள்! அப்படித்தானே?''

''அடடா! என்னாலே உங்களுக்குள்ளே சண்டை வேண்டாம்!'' என்றார் பொன்னம்பலம். பின்னர், ''இதோ பாருங்க, எனக்கு மனசிலே எதையுமே மறைச்சு வைச்சுக்கிடத் தெரியாது'' என்ற பூர்வபீடிகையுடன் தொடங்கிக் கூறினார்: ''எதுவானாலும் பட்டுன்னு சொல்லிப் போடுவேன். இதனாலேதான் ஊரிலே கொஞ்சம் கெட்ட பெயர் கூடச் சம்பாதிச்சுக்கிட்டிருக்கேன். ஆனால் என்னை மாதிரி பெரிய மனுஷன்னு மதிக்கப்பட்டவங்க இதுக்கெல்லாம் பயந்து, நடப்பது நடக்கட்டுமேன்னு வாயை மூடிக்கிட்டு இருக்கவும் முடியாது. ஏன், நம்ப வடிவேலுவையே எடுத்துக்கிடுங்க. எப்போதுமே அவன் கிட்டே எனக்குப் பிரியம் இல்லாமல் போகலே. என் பெண்ணை அவனுக்குக் கட்டிக் கொடுக்கலாம்னு அவன் சிறு பிள்ளையாய் இருந்த போதிலிருந்தே நெனச்சுக்கிட்டிருக்கேன். என் மவ வயத்திலே பிறக்கிற பிள்ளை இரண்டு குடும்பத்துச் சொத்தையும் ராஜா மாதிரி ஆளணும்கிற ஆசை அன்னைக்கும் இருந்திச்சு; இன்னைக்கும் இல்லாமெ போகலே. ஆனால் அதுக்காக அவன் போகிற போக்கு தப்புன்னு தோணிச்சின்னு தட்டிக் கேட்க ஆள் வேணுமா? அதை நான் செய்தேன்.



அதே காரணத்தால் முத்தையா கூட என்கிட்டே மனஸ்தாபப் பட்டுக்கிட்டிருந்தான். ஆனால் எனக்கு அதெல்லாம் லட்சியமில்லே...இந்த ஊரோட மானம்தான் முக்கியம். ஆமா, நீங்க என்ன நினைக்கிறீங்க?''

''பழைய கதையைக் கிளறுவானேன்?'' என்றாள் தாரா.

''தப்புத்தான்! நான் அடியோடு மறந்து விட்டேன்; தணிஞ்சு நடந்துக்கிடறேன். ஆனால் தம்பி இன்னமும் தகராறு பண்ணிக்கிட்டே யிருக்கே, அது நியாயமா?''

''விட்டுப் பிடியுங்கள். கொஞ்ச நாட்களானால் தன்னால் எல்லாம் சரியாகிவிடும்.''

''ஓ! தாராளமா, நிதானமா யோசிக்கட்டுமே; இப்பொ என்ன அவசரம்? கிணத்துத்தண்ணியை வெள்ளமா கொண்டு போயிடப் போவுது?''

''வந்து இவ்வளவு நேரமாகிறது. நின்று கொண்டே யிருக்கிங்களே, இப்படி உட்காருங்கள்!''

தாரா நகர்த்திப்போட்ட நாற்காலியில் அமர்ந்து கொண்டார் பொன்னம்பலம். 'பள்ளிக்கூடம் ரொம்ப நல்லா இருக்கு, வந்து பாரு'ன்னு செல்லம் சும்மா தொந்தரவு பண்ணிக்கிட்டே இருந்திச்சு. நான் நம்பலே. ஆனாலும் நச்சரிப்புக்குச் சம்மதிச்சுக் கிளம்பி வந்தேன். இங்கே என்னடான்னா என்னைப் பிரமிக்க வைச்சுட்டீங்க! நம்மோட மாட்டுக் கொட்டகை இவ்வளவு அழகா மாறி யிருக்கும்னு எதிர்பார்க்கவே யில்லே நான்!''

''எல்லாவற்றுக்கும் ஆதி காரணம் நீங்கள்தானே? உங்களுக்குப் பிடித்தால் எனக்குச் சந்தோஷம்.''

''அதெல்லாம் சரிதான்; ஆனால்...'' புருவங்களை உயர்த்தி, உச்சந்தலையை ஆள்காட்டி விரலால் சொறிந்து கொண்டே, ''ஒரு சந்தேகம்'' என்றார் பொன்னம்பலம். பிறகு, ''போயும் போயும் ஒரு பள்ளிக்கூடத்தை நடத்தவா சுபாஷ் போஸ் உங்களை அனுப்பி வைத்தார்?'' என்று கேட்டார்.

அவருடைய ஏமாற்றத்தைக் காண 'ஐயோ பாவம்!' என்றிருந்தது தாராவுக்கு. ''சுபாஷ் பாபுவை நீங்கள் இலேசில் விட்டுவிட மாட்டீர்கள் போல் இருக்கிறதே! டீச்சர் வேலையை மேற்கொண்டு பாடம் கற்றுக் கொடுக்குமாறு அவர் எனக்குக் கட்டளை இடவில்லைதான். ஆனால் அந்தப் புனித கைங்கரியத்தை நான் செய்தேன் என்று அவர் அறிந்தால் கண்டிப்பாக ஆட்சேபிக்க மாட்டார். சந்தோஷம்தான் அடைவார்; போதுமா?''

இந்தப் பதில் பொன்னம்பலத்துக்குத் திருப்தியளித்ததாய்த் தெரியவில்லை. சற்று நேரம் கைத்தடியைத் தயிர் கடையும் மத்துப் போல் உருட்டியவாறே யோசித்த பிறகும் அவருக்குச் சமாதானம் ஏற்படவில்லை.

''உம்! 'சமயம் வரச்சே கவனிச்சுக்கிடலாம்; இப்பவே நம்ம தலைவரோட எண்ணங்களையெல்லாம் அம்பலப்படுத்திக்கிட்டு இருப்பானேன்' அப்படின்னு நெனைச்சிருப்பீங்க, இல்லையா?'' என்று கேட்டு விட்டு அவர் வீடு திரும்ப எழுந்தார். வாசல் பக்கம் நடந்தபடி கதவருகே நின்ற தமது மகளைப் பார்த்துக் கூறினார்: ''செல்லம்! நான் இப்பொ சொல்றேன்; எழுதி வேணுமானாலும் வைச்சிக்கிடு! திடீருன்னு ஒரு நாளைக்குச் சுபாஷ் போஷ் இந்தத் தேனூருக்கு வரப் போறாரு! என் ஒருத்தனைத்தவிர பாக்கிப் பேரெல்லாம் அதிசயத்தோட, வாயைப் பிளந்துக்கிட்டு நிற்கப் போறாங்க! விளையாட்டில்லே!''

புன்னகையுடன் அவரை வழியனுப்பி வைத்து விட்டு இருளில் அவர் தலை மறைந்ததும் மீண்டும் கூடத்தின் மையத்துக்கு வந்தாள் தாரா.

''நல்ல மனிதர்!'' என்று சிரிப்பும் வார்த்தையுமாய்க் கலந்துகொட்டியவள் அவர் வந்ததால் தடைப்பட்டு நின்ற வேலையைத் தொடரத் தரையில் அமர்ந்தாள். ''என்னைச் சரியாகப் புரிந்து கொள்ள முடியாமல் குழம்புகிற மனிதர் நீங்கள் ஒருவர் மட்டுமல்ல என்பது தெரிந்ததா? பொன்னம்பலமும் உங்களுடன் கூட்டுச் சேர்ந்து கொண்டு மண்டையைக் குடைந்து கொள்கிறார். மாப்பிள்ளைக்கு ஏற்ற மாமனார்தான்!''

''ஐயோ போதுமே! நான் இங்கிருப்பது உங்களுக்கு வெறுப்பாயிருந்தால் சொல்லுங்கள், போய்விடுகிறேன்..ஆனால் தயவுசெய்து மறுபடியும் கலியாணப் பேச்சை மட்டும் எடுக்காதீர்கள்!''

''கோபித்துக் கொள்ள வேண்டாம்! நிஜத்தை சொல்கிறேனே; நானே உங்களைக் கேட்டுக் கொள்வதாய் இருந்தேன். சுற்றிலும் உள்ளவர்களின் வற்புறுத்தலுக்கு இணங்கி, செல்லத்தைக் கல்யாணம் செய்து கொள்வதாய் நீங்கள் சம்மதித்து விடக் கூடாது!''

வடிவேலுவின் இருதயம் ஒரு துடிப்பைத் துறந்து அடுத்ததற்குத் தாவியது. ''அடியேனிடம் இத்தனை இரக்கம் காட்டுகிறீர்களே, ரொம்ப சந்தோஷம்!''

''உங்களுக்காக நான் எதற்குப் பச்சாத்தாபப்பட வேண்டும்? எந்த ஒரு பெண்ணிடமும் சாதாரணமாக எனக்கு ஏற்பட வேண்டிய அனுதாபம் செல்லத்



PHILLIPS பிலிப்ஸ் ஸைக்கிள்

## உங்களுக்காகவே தயாரிக்கப்படுகிறது

எழிலும், நாகரீகத் தோற்றமும் கொண்ட பளபளக்கும் பிலிப்ஸ் ஸைக்கிள்கள், உங்களைப்போன்ற இன்றைய சுறுசுறுப்புள்ள இளைஞர்களுக்காக பிரத்தியேகமாகத் தயாரிக்கப்படுகின்றன. உயர்ந்த ரக எஃகினாலான இந்த ஸைக்கிள்கள், உறுதியும், எவ்வித கடினமான பணிகளை சமாளிக்க வல்ல சக்தியும் வாய்ந்தவை.

70 வருட காலமாய் உலகெங்கும் புகழ்பெற்ற பிலிப்ஸ் ஸைக்கிள்கள், டி. ஐ. ஸைக்கிள்ஸாரின் மிக்க நவீன வசதிகள் படைத்த தொழிற்சாலையில், நுட்பமான முறையில் இப்பொழுது தயாரிக்கப்படுகின்றன.

டி. ஐ ஸைக்கிள்ஸ் ஆப் இந்தியா, அம்பத்தூர், மதராஸ்

TIC PH 1603a



தின் பேரிலும் உண்டாகியிருக்கிறது; அவ்வளவுதான்.''

வடிவேலு கோபத்தோடு எழுந்தான். ''தாரா! நீங்கள்தானா பேசுகிறீர்கள்?'' என்று கூறிவிட்டு வெறுப்புடன் கைகளைப் பிசைந்து கொண்டே திரும்பினான், அவ்விடத்தை விட்டு வெளியேறிச் செல்லும் நினைப்புடன். செல்லத்தைத் தான் கல்யாணம் செய்துகொள்ள வேண்டும் என்ற நினைப்பே கசந்து வழிந்தபோதிலும் அவளுக்குத் தான் தகுதியற்றவன் என்ற வகையில் தாரா பேசியதைத் தகாத செயலாகக் கருதினான் அவன். தனக்கு வாழ்க்கைப்படப் போகிறவளிடம் அவள் இரக்கம் காட்டுகிறான் என்றால் அதற்கு வேறு என்ன அர்த்தம்? 'என்ன குற்றத்தைக் கண்டுவிட்டான் இவன் என்னிடம்? ஒரு வேளை என்னுடைய பூர்வ ஜன்ம வாழ்க்கையை நினைவூட்டி இடித்துக் காட்டுகிறானோ? சக்குபாயிடம் நான் கொண்டிருந்த நட்பைப் பற்றித்தான் மறைமுகமாகக் கூறி ஏசுகிறானோ? சே! கிராமத்தில் உள்ள சில மூடர்கள்தான் அப்படியெல்லாம் குத்திக் காட்டுகிறார்கள் என்றால் தாராவுமா இம்மாதிரி நடந்து கொள்ள வேண்டும்?'

அவன் எண்ணம் தவறு என்பதை நிரூபித்தான் தாரா, ஒரே எட்டில் அவனுக்கு முன்னால் வந்து நின்று வழிமறித்ததன் மூலம். ''நீங்கள் என்னைத் தவறாக எடுத்துக்கொண்டு விட்டீர்கள். செல்லத்துக்கு நீங்கள் அருகதையற்றவர் என்ற முறையில் நான் பேசவில்லை. உங்களைக் கணவராக அடையும் பெண் ரொம்ப அதிர்ஷ்டக்காரி என்பதில் எனக்குச் சந்தேகமில்லை. ஆனால் ஒன்று, செல்லத்தைக் கல்யாணம் செய்து கொள்வதாக முடிவுக்கு வந்தால் நீங்கள் போர் முனைக்குப் போவதில்லை என்று என்னிடம் சத்தியம் செய்து கொடுக்க வேண்டும். எந்த ஒரு பெண்ணுடைய வாழ்வும் என்னுடையது போலாகி விடுவதை நான் விரும்பவில்லை!''

தாராவின் நெஞ்சின் ஆழத்திலிருந்து வெளிப்பட்ட விம்மல் ஒலி வடிவேலுவின் இதயத்தைத் தாக்கியது.



அத்தியாயம் 22

# நிலவில் ஒரு நங்கை

எவ்வளவோ முயன்று பார்த்தும் வடிவேலுவுக்குத் தூக்கம் வரவில்லை. படுக்கையைச் சுவரோரமாக உதைத்துத் தள்ளி விட்டுக் கேசத்தைக் கோதி விட்டபடியே அவன் முற்றத்துக்கு வந்தான். முத்தையாவுடைய சாய்வு நாற்காலி அதன் மையத்தில் இருந்தது. பூப்போன்ற தாராவின் உடலைத் தாங்கும் பேறு பெற்றிருந்தது அது. நட்ட நடுநிசியில் வட்ட நிலா அமுத தாரையாக நிலவைப் பொழிந்து அந்தப் பளிங்குச் சிலையை நீராட்டிக் கொண்டிருந்தது. சந்திரக் கிரணங்கள் அவனைத் தழுவியதால் அவன் மேனி மேலும், வெண்மையாகப் பொலிந்தது; மென்மையாகத் தோற்றமளித்



தது. கண்களின் கருமையை நிலவு அதிகரித்துக் காட்டியது. இதழ்களின் சிவப்பு நிறம் மிகுதியாகித் தென்பட்டது. கடைசல் பிடித்தது போன்ற அந்தக் கரங்களில் பச்சை நிறக் கோடுகளாக ஓடும் ரத்த நாளங்கள் முற்றிலும் தெளிவாய்க் கண்ணுடியினூடே காணப் படுபவை போல் அவனுக்குப் புலனுகின.

அவன் பார்த்துக் கொண்டேயிருக்கையில் அவள் நயனங்களில் நீர் படர்ந்தது. திரண்டது, பெரியதொரு நல்முத்தாக விழிக்கோணத்தில் நின்றது. மெல்ல மெல்லத் தன் கரத்தை நீட்டி ஒரே ஒரு விரலால் அந்தக் கண்ணீரைத் துடைத்தெறிய வேண்டும் என்று துடித்தான் வடிவேலு.

நெருங்கினுன்.

தன்னைத் தொடுவதற்கு அவனை அனுமதிக்கத் தாரா அங்கில்லை! அவ்வளவும் பிரமை!

சாய்வு நாற்காலியின் அகலமான கரத்தில் உட்கார்ந்து அதன் முதுகுப் புறத்தில் கரங்களை ஊன்றி முகத்தை அவற்றில் புதைத்துக் கொண்டு புழுங்கினுன் அவன்.

'எந்த ஒரு பெண்ணுடைய வாழ்வும் என்னுடையது போலாகி விடுவதை நான் விரும்பவில்லை.' — பிளந்து விட எண்ணும் இதயத்தைக் கட்டுப்படுத்த நினைப்பது போல் அவன் நெஞ்சை அழுத்திக் கசக்கிக் கொண்டான். ''தாரா! உங்கள் கணவர் சாவதற்குக் காரணமா யிருந்து உங்களை இந்த நிலைக்கு உள்ளாக்கி வைத்த சண்டாளன் இதோ இன்னமும் வாழ்ந்து கொண்டிருக்கிறேன். ஆண்டவனே! என் பிராணனைப் பறித்துக் கொண்டு உமாகாந்தை உயிர் வாழச் செய்திருக்கக் கூடாதா?''

சாய்வுநாற்காலியில் உருண்டு விழுந்து மல்லாந்து படுத்தவாறே அவன் நிலாவுடன் இப்போது ஒன்றி விட்டிருந்த தாராவின் முகத்தை நோக்கிக் கூறினுன்: ''தாரா! உமாகாந்தின் மரணத்துக்கு மனித உருவில் வந்த எமதூதனை என்னை உங்களால் மன்னித்துவிட முடியுமா? அதெல்லாம் விதியின் சதி என்று சமாதானமடைந்து என்மீது பழி சுமத்தாமல் இருந்து விடுவது உங்களுக்குச் சாத்தியமா? வாய் திறந்து நீங்கள் வசை மாரி பொழியமாட்டீர்கள். அன்பும் பண்பும் அறிவும் அணிகலன்களாக நீங்கள் பெற்றிருக்கிறீர்கள். ஆனுலும் சுபாஷ் பாபுவைப் பார்ப்பதற்காகவே பம்பாய்க்குப் பயணப்பட்டதாக அன்று நான் கூசாமல் கூறிய பொய்யை மெய்யாகவே உங்களால் மறந்துவிட முடியுமா? மறு நாளைக்கேனும் உங்கள் இருப்பிடம் தேடி நான் வராமல் இருந்திருந்தால் நீங்கள் உமாகாந்தைக் கப்பல் தளத்துக்குப் போகக்கூடாதென்று தடுத்திருப்பீர்கள். வாதாடி வெற்றி பெற்றிருப்பீர்கள். அதற்கும் நான் உதவாமல் தடையாகவே வந்து சேர்ந்தேன், குறித்த நேரத்துக்கு முன்னதாகவே. என்னைக் கண்டதும் உங்களுடைய முகம் போன போக்கு! கோபத்திலே வதனம் சிவக்க, வெறுப்பிலே அடி உதட்டை உள்ளுக்கு இழுத்து அழுத்திக் கடித்துக் கொண்டு, 'உங்களுக்கு வேறு வேலை இல்லை?' என்று கேட்பது போல் நீங்கள் என்னைப் பார்த்த பார்வை! கடைசி மூச்சு விடுகிற வரையில் உங்களுடைய அந்தத் தோற்றத்தை எந்த விஞடியில் வேண்டுமானுலும் நான் என் மனக் கண் எதிரே கொண்டு வந்து நிறுத்திக் காண முடியும்!

''ஆனுல் உமாகாந்த்? அவர் உங்களுக்கு நேர் எதிரிடையாக நடந்து கொண்டார். தமக்குப் பக்கபலமாக வந்து சேர்ந்த என்னைக் கரங்களை நீட்டி வரவேற்ருர். ஆலிங்கனம் செய்துகொண்டார். 'நேரமாகிவிட்டது போல் இருக்கிறதே, கிளம்பவில்லையா?' என்று நான் கேட்டேன்.

'''இவளிடத்தில் போடுங்கள், அந்தக் கேள்வியை!' என்று உமாகாந்த் நீங்கள் இருந்த பக்கமாகத் தலையை நொடித்தார். ''பாவி வடிவேல்! நேற்றைக்கு என்ன சொன்னுள் இவள்? துறைமுகத்துக்குப் போக ஒப்புக் கொண்டாளா, இல்லையா? இன்றைக்கு விடிந்தது முதல் மறுபடியும் முரண்டு பிடித்துக்கொண்டு இருக்கிருள்!' என்ருர்.

'''தாரா! இப்படி நீங்கள் சிறு பிள்ளைபோல் பிடிவாதம் செய்யலாமா?' என்று நான் உங்களை நோக்கிக் கேட்டேன். அப்போது உங்கள் முகத்தில் கொந்தளித்த குரோதம்!—அளவிட்டுச் சொல்ல முடியுமா அதை? எனக்கு அங்கே வேலை யில்லை, உங்களுடைய அந்தரங்கக் குடும்ப வாழ்க்கையில் தலையிட எனக்கு உரிமை இல்லை என்பதை உணர்த்துவது போல் நீங்கள் பளிச் சென்று ஏதோ பதில் சொன்னீர்கள்.''

'''அவரென்ன உங்களுக்கு வக்காலத்து எழுதிக் கொடுத்திருக்கிருரா?' என்று கேட்டேன், அவ்வளவுதான்!''

'குபுக்'கென்று நிமிர்ந்து உட்கார்ந்தான் வடிவேலு. அருகே தூணில் சாய்ந்தபடி நின்று கொண்டிருந்தது—

தாராதான்!

நிலாவை விட்டு நீங்கி நிலத்தை நாடினளா? அல்லது நித்திரையை நீடிக்காமல் இங்கு நடந்து வந்தாளா? பேசியது தாராவுடைய இந்த உருவம் தானு?.....

''தாரா! நிஜமாகவே நீங்கள்தானு?'' என்று கேட்டான் வடிவேலு.

''அன்றைக்கு என் தோற்றத்தைக் கண்டே நீங்கள் அரண்டு போயிருப் பீர்கள் இல்லையா?'' என்ருள் தாரா பழைய நினைவுகளில் லயித்தவளாக.

'நான் அறியாதவாறு எவ்வளவு நேரமாக இங்கு நின்று கொண்டிருக்கி ருள் இவள்? மனம் விட்டு நான் கூறி யவை எல்லாமே இவள் செவிகளில் விழுந்திருக்குமோ?' இப்படி யோசித்த படியே அவளுக்கு விடையளித்தான் வடிவேலு:

''பயப்படும்படியாக ஒன்றும் இல்லா விட்டாலும் உங்களைப் பார்க்கக் கொஞ் சம் விநோதமாகத்தான் இருந்தது அன் றைக்கு. கல்லூரி மாணவியாகக் காலத்தை ஓட்டிய நாட்களில் நீங்கள் கலகலப்பாகப் பேசிப் பழகுவீர்கள். பாருவின் சௌக்கியத்தை விசாரித்து விட்டுப் போக நான் அடிக்கடி சென் னைக்கு வருவேன். அப்போதெல்லாம் நாளைக்கு ஒரு புத்தாடை கூட இல்லை; வேளைக்கு ஒருவித கோலத்தில், விதம் விதமான வர்ணங்களில் நீங்கள் உங்கள் உடலை அலங்கரித்துக் கொண்டிருப் பீர்கள். சாயங்கால நேரத்தில் ஜிலு ஜிலுவென்று காற்று வீசி மனத்துக்கு ரம்மியமாக இருக்கின்ற சமயத்தில் பூவுக்குப் பூ பறந்து செல்லும் வண்ணத் திப் பூச்சி போல நீங்கள் வளைய வரு வீர்கள். இதன் பிறகு பம்பாய் 'மல பார் ஹில்'லில் முதன் முறையாக உங் களை உங்கள் கணவரோடு சேர்த்துப் பார்த்த போது நான் திகைத்துத்தான் போனேன். தூய கதராடை அணிந்து நகைநட்டென்றெல்லாம் அதிகமாக ஒன் றும் இல்லாமல் எளிமையும் அடக்க முமே உருவாக விளங்கினீர்கள். பட் டண வாழ்க்கையின் பகட்டும் படா டோபமும் இருந்த இடம் தெரியவில்லை. கணவரின் அனுமதிக்குக் காத்திருந்து அது கிடைத்த பின்னரும் அமைதியாக வும் அளவாகவும் பேசினீர்கள். திரு மணம் இத்தனை மாறுதல்களை ஒரு பெண் ணிடம் உண்டாக்கி விடும் சக்தி பெற் றிருக்கிறதா என்றெண்ணி நான் வியந் தேன். இதை யெல்லாம் தூக்கியடித்து விட்டது அடுத்த நாள் நான் பார்க்க நேர்ந்த அலங்கோலம். முன்னைவிட நூறு மடங்கு அதிகமாக அதிசயப்பட் டேன். உங்கள் கண்கள் இரண்டும் செக்கச் சிவந்து போயிருந்தன. இரவு முழுதும் தூக்கமின்றி அழுது அழுது உள்ளம் நைந்து போயிருக்கிறீர்கள் என் பதை உப்பிய கன்னங்களும் கண்களுக் குக் கீழே படிந்திருந்த கருக்கங்களும் எடுத்துக் காட்டின. தலை விரிகோல மாக நீங்கள் நின்றது, கணவன் மனைவிக் குள் பெரிய சச்சரவு ஏதோ நடந்திருக் கிறது என்பதை எனக்குப் புலப்படுத் தியது. உங்களுக்குள் ஒற்றுமையில்லை என்று ஊகித்த போது என் மனம் புண் பட்டது.''

''நீங்கள் நினைத்தது தவறு. ஒரு விஷயத்தில் எங்களுக்கிடையில் கருத்து வேற்றுமை இருந்தது வாஸ்தவம்தான். அதனுல் புருஷன் மனைவியிடையே நிலவ வேண்டிய அன்னியோன்னிய பாவம் குலைந்து விட்டதாய் அர்த்தம் இல்லை!''

''இருக்கலாம்'' என்ருன் வடிவேலு. ''ஆனுல் அடுத்தடுத்து நடைபெற்ற அதிர்ச்சி தரும் சம்பவங்கள் உங்க ளிடையே இருந்த பிளவைத்தான் எனக் குப் படம் பிடித்துக் காட்டின.''

தாராவின் உடல் நடுங்கியது. ''அவ ரிடம் அவ்வளவு இரக்கமற்றவளாகவா நடந்துகொண்டேன் நான்? அதுவும்அவர் இறந்து போக விருந்த அன்றைக்கு?'' நிற்கவும் திராணியற்றுச் சரிந்து விழுந் தாள் தாரா. தேம்பித் தேம்பி உடல் குலுங்க அழுதாள்.

''தாரா! என் பேரில்தான் தவ றெல்லாம்! அந்த நாளைப் பற்றி எனக்கு நானே பேசிக் கொள்ளவே ஆரம்பித் திருக்கக் கூடாது. நீங்கள் இங்கு வந்து நின்றதைக் கண்ட பிறகும் அந்தப் பேச்சை நான் தொடர்ந்தது அதைக் காட்டிலும் பெரிய பிசகு. மனத்தைத் தேற்றிக் கொள்ளுங்கள். உள்ளே போய்ப் படுத்துத் தூங்க முயலுங்கள்.''

''இல்லை, இல்லை!'' என்று அவசர மாகக் கண்களைத் துடைத்துக் கொண் டாள் தாரா. ''அன்றைக்கு அவர் கூறிய ஒவ்வொரு வார்த்தையையும் அவருடைய ஒவ்வொரு செய்கையையும் நினைவுபடுத்திக் கொள்ள வேண்டும் என்று எனக்கு ஆசையாக இருக்கிறது. அன்றைய தினத்தைப் பற்றி யாரிடமா வது மனம் விட்டு நிறையப் பேசுவதன் மூலம்தானே அது சாத்தியமாகக் கூடும்? அன்று முழுதும் நீங்கள் எங்களுட னேயே இருந்திருக்கிறீர்கள். தயவு செய்து என்னுடைய விருப்பத்தைப் பூர்த்தி செய்து வைக்க மாட்டீர்களா?'' என்று கெஞ்சினுள். (தொடரும்)




எழிலுக்கு மெருகிழைக்க... '''ஹேஸலின்' ஸ்னோ''''... சுருக்கம், பரு, மாசு யாவும் மறையும், மென்மை மிளிரும்.

மேனிக்கு மென்மையாக மெருகிடுவதிலே தன்னிகரற்று விளங்குவது '''ஹேஸலின்' ஸ்னோ" உன்னதமான மென்மை...எண்ணெய்ப்பசையின்மை...உல்லாசமூட்டும் தன்மை, உங்கள் சருமத்திற்குப் பட்டுப்போன்ற மழுமழுப்பு...தென்றல்போன்ற அணைப்பு...ஒளிதவழும் வனப்பு. காலையிலே...மாலையிலே...இரவினிலே...எவ்வேளையிலும் இனிதே பூசிக்கொள்ளலாம். '''ஹேஸலின்' ஸ்னோ" எழிலுக்குப் பாதுகாப்பான ஸ்னோ...கச்சிதமாகப் பவுடர் படிவதற்குவாகான ஸ்னோ...நெகிழ நெகிழ, மென்மை தவழ உங்கள் சருமத்தைப் பொலிவுடன் போற்றும் ஸ்னோ. '''ஹேஸலின்' ஸ்னோ"– அரம்பையர் குலத்தின் பரம்பரை அழகுசாதனம்.

'''ஹேஸலின்' ஸ்னோ'' 'பர்ரோஸ் வெல்கம்' தயாரிப்பு.

"இடை வேளை" வந்ததும் படம் முடிந்து விட்ட மாதிரி யிருக்கிறது. எத்தனை ஆறுதல்! ஆனால் அந்தோ! அதுவும் சில நிமிடங்களுக்குத்தான்.

லக்ஷ்மியாக வரும் சாவித்திரிக்கு இப்படத்தில் துளிச் சிரமமும் இல்லை. கொஞ்சம் சிரமப்பட்டு மாவரைக்கும் சந்தர்ப்பத்தைக் கூட ஜெமினி கணேசன் அவருக்கு விட்டு வைக்கவில்லை!

ஜெமினி கணேசனைப் பொறுத்த வரையில் வேலை நிறைய இருக்கிறது. தாமும் சாப்பிட்டுச் சாவித்திரிக்கும் போடச் சந்தர்ப்பம் கிட்டுகிறது. இதற்கிடையில் "கப்பக்கா, கப்பக்கா" என்று சுந்தரி பாயிடம் உறவு கொண்டாடித் தம் கலியாணத்தை முடித்துக் கொள்ளவும் வாய்ப்புக் கிடைக்கிறது.

நாகேசுவரராவுக்கு ஒரு நங்கையின் உள்ளத்தைத் திருடவும், அவள் பணத்தைக் களவாடவும், அவள் திமிரை அடக்கக் குடிகாரன் மாதிரி வேஷம் போட்டு ஆடவும் சந்தர்ப்பங்கள் நிறையக் கிடைக்கின்றன.



எல்லாப் படங்களிலும் சோக ரஸத்துக்காக யாரையாவது சாகடிப்பது வழக்கம். ஆனால் இதில் எல்லோரையும் சந்தோஷப்படுத்துவதற்கோ, என்னவோ மூன்று கல்யாணங்கள் நடத்துகிறார்கள்!

தொட்டால் சிணுங்கும் சிங்காரி சரோஜாவாக வருகிறார் ஜமுனா. ஆரம்பத்தில் இருந்த மிடுக்கும், துடுக்கும் விரைவில் சரிப்பட்டு

# மனிதன் மாறவில்லை

விடுகின்றன. அவர் பாத்திரமும் பழகிப் போன தண்ணீர்ப் பானை மாதிரி ஆகி விடுகிறது.

காப்பி ஹோட்டலில் சர்வராக வரும் நாகேஷ் சிறிது நேரமே வந்தாலும் மிகவும் இயற்கையாக நடித்திருக்கிறார். ஆனால் அந்தக் காட்சி கதையோடு ஒட்டாமல் தனித்து நின்று விடுகிறது. (எந்தக் காட்சிதான் கதையோடு ஒட்டுகிறது என்று கேட்டுவிடாதீர்கள்.)

சிரிப்பு நடிகர் சாரங்கபாணி இந்தப் படத்தில் எல்லாக் காட்சிகளிலும் வந்து சக்கைப் போடு போட்டும் படம் களை கட்டவில்லையென்றால் தவறு யாருடையது?

படத்தைப் பார்த்த பிறகும் அதிலுள்ள கதையோ, கருத்தோ, நீதியோ, சாரமோ ஒன்றும் புலனாக வில்லையென்றாலும், பாட்டுப் புத்தகத்தைப் பார்த்தால் சில விவரங்கள் தெரிய வரும்.

"கணவனை விட்டுப் பிரிந்த மனைவியின் வாழ்வு துடுப்பில்லாத் தோணி.

ஒரு பெண்ணுக்குப் புகுந்த வீடே சதம், பிறந்த வீடு அல்ல.



கணவன் மனைவியின் மன நிறைவு மனத்தினாலேயன்றிப் பணத்தினால் அல்ல. இவற்றையெல்லாம் தெள்ளிய முறையில் வெள்ளித் திரை




யில் விளக்கும் சமூகச் சித்திரம் இது..." என்று பாட்டுப் புத்தகம் விளக்குகிறது.

ரசிகர்களின் மூளைக்கு (மூளை இருப்பதாக எண்ணிக்கொண் டிருப்பதே நாம் செய்த பாக்கியம்) வேலை அதிகம் கொடுக்காத வெறும் பொழுதுபோக்குப் படமாகத் தயாரித்திருப்பதாக எண்ணிக்கொண்டு விஜயா புரொடக்‌ஷன்ஸார் தங்கள் பொழுதை மட்டு மின்றி நம்முடைய பொழுதையும் வீணாக்கியிருக்கிறார்கள்.

ஆயிரத்துத் தொள்ளாயிரத்து அறுபத்திரண்டாம் ஆண்டிலும் இம்மாதிரிப் படங்கள் வருகின்றனவென்றால், இன்னும் மனிதன் மாறவில்லையென்று நமது படத் தொழில் அதிபர்கள் எண்ணுவதாகவே தெரிகிறது.


பவழத்தீவு
கதை: வாண்டு மாமா
சித்திரம்: ரமணி
25
உள்ளே போக முடியாதபடி அரண்மனையின் வாயிலில் இடிபாடுகளாகக் குவிந்து கிடந்தது. ஆனந்தனைத் தொடர்ந்து வந்தன நந்திவர்மனின் படைகள்.
சேனாபதியாரே! நமது வீரர்களைக் கொண்டு விரைவில் இந்தக் கற்களை அப்புறப்படுத்தச் சொல்லுங்கள். உள்ளே கந்தனுக்கு ஏதோ ஆபத்து.
வீரர்கள் வேலை தொடங்கும் வரை கந்தனின் தோழர்கள் இங்கு சும்மா இருக்கவில்லை...
இதோ, இங்கு வாருங்கள். கந்தனின் தோழர்கள் இங்கு ஒரு வழியைக் கண்டு விட்டன.
ஜம்புவும் மணியும் மோப்பமறிந்து உள்ளே புக முயன்ற இடத்தில் வீரர்கள் கற்களைப் புரட்டுகின்றனர்.
கந்தன் இங்குதான் எங்கோ இருக்க வேண்டும்.
கந்தன் உயிரோடிருக்க வேண்டும் என்று ஒவ்வொருவரின் உள்ளமும் உடலும் துடித்தன.
அவைகளை முதலில் போக விடுங்கள். உங்கள் நண்பன் இருக்குமிடம் அவைகளுக்குத்தான் தெரியும்...
ஆனந்தன் கூறிய படியே அவைகள் கந்தனிருக்குமிடத்துக்கு விரைந்தன.
ஜம்பு, மணி! என் அருமைத் தோழர்களா, எப்படியும் நீங்கள் என்னைக் காண வந்து விடுவீர்கள் என்று எனக்குத் தெரியும்.
கந்தா, என் அருமை நண்பா! உன்னை உயிரோடு பார்க்க வேண்டுமே என்று தவித்துப் போய் விட்டேன்.
இடிபாடுகளிலிருந்து வெளிவந்த கந்தன் தாமகேதுவின் முடிவைப் பற்றிச் சொன்னான்.....
எந்தப் பொருளுக்காக இத்தனை அநியாயங்களைச் செய்தானோ அந்தப் பொருளின் மீதே அவன் விழுந்து புதைந்து போனான்.


சேனாபதியாரே! பாக்கியுள்ள இந்த அரண்மனையையும் இடித்துத் தள்ளுங்கள். அந்தப் புதையல் நமக்கு வேண்டாம். அது ஒரு சாபக்கேடு. அதை அடைய வேண்டும் என்ற பேராசை இத்தனை இன்னல்களை அனுபவித்தாயிற்று. அதை எடுத்துச் சென்றால் இன்னும் என்ன தீங்குகள் தொடருமோ? அது இரண்டு பேரைப் பலிகொண்டது போதும். ஆசையே அழிவிற்குக் காரணம். ஆகவே அது இங்கேயே புதைந்து கிடக்கட்டும். நாம் திரும்பலாம்.......
கந்தா, எங்கள் எல்லோருக்கும் வாழ்வளித்தவன் நீ. ஆனால் உன்னைப் பற்றி எங்களுக்கு ஒன்றுமே சொல்லவில்லையே.
சொல்லுகிறேன் ஏதுமில்லை அரசே! நான் இந்தக் கானகத்தின் குழந்தை. அவ்வளவுதான். நீங்கள் எல்லோரும் என் குடிலுக்கு வரவேண்டும்.
மறுபடி நாம் ஒன்று சேருவோம் என்றே நினைக்கவில்லை.
ஆனந்தப் பெருமை பொங்கும் வீர மகனைப் பெற்றிருக்கும் நமக்கு என்ன குறை மகாராணி!
கந்தனின் விருந்தாளியாக வந்தனர். மன்னரும் மற்றவரும்...
என் அரண்மனையில் கூட நான் இத்தனை அமைதியும் அழகும் கண்டதில்லை கந்தா. அது சரி உனக்கு உன் தாய் தந்தை யாரை நினைவிருக்கிறதா?
தாயைப் பற்றி எனக்குத் தெரியாது. தந்தையின் நினைவு கனவு போலிருக்கிறது. இதோ இந்த வாளை இன்னும் அவர் நினைவாகப் போற்றி வருகிறேன்..
இந்த வாள் உன் தந்தையினுடையதா? அப்படியானால்...? கந்தா... நீ அநாதையில்லை விசாலதேவரின் மகனல்லவா நீ
யாரப்பா விசாலதேவர்?
உனக்கு நினைவிருக்காது. நாம் கேதுவிற்கு முன்னால் எனது மந்திரியாக இருந்தவர் அவர். துரோகி தாழ்கேதுவின் பொய்யான வார்த்தைகளில் மயங்கி அவரை ஒரு நாள்.......


பன்னிரண்டு வருடங்களுக்கு முன்.......
உங்களைக் கொல்லவே இவன் தங்கள் படுக்கையறைக்குள் வந்தான். கையில் ஆயுதம் வேறு.
விசாலதேவரே! இதற்கு என்ன சொல்லுகிறீர்?
நான் சொல்வது எதுவுமில்லை. என் வார்த்தையை நம்பும் நிலையிலும் நீங்கள் இல்லை. சந்தர்ப்பம் என்னைக் குற்றவாளியாக்கியிருக்கிறது.
விசாலதேவரே, உம்மை நாடு கடத்தியிருக்கிறேன். என் முன் நிற்காதே - ஓடிப் போ!
அரசே எந்தக் குற்றத்துக்காக எனக்கு இந்தத் தண்டனை விதிக்கிறீர்களோ அதைச் செய்ய முனைந்தவன் தங்கள் நம்பிக்கைக்குப் பாத்திரனாக அருகே நிற்கிறான். தங்களைக் காப்பாற்ற வந்த என்னைத் துரோகியாக்கி விட்டது விதியின் செயல்தான். என்றாவது ஒருநாள் உங்களுக்கு உண்மை தெரியும். அப்போது நான் குற்றமற்றவன் என்பதை உணர்ந்து கண்ணீர் சிந்துங்கள். அதுவே போதும்.
தன் ஒரே தாயில்லாக் குழந்தையுடன் நாயகத்தை விட்டு என்னால் விரட்டப்பட்டவர் விசாலதேவர். துரோகி தாமகேது அன்று என் அறிவை மறைத்திருந்தான். கந்தா.
மன்னர் மஹிபாலர் கந்தனைத் தன் மகனாக ஏற்று அரச போகமும் அரண்மனை வாழ்வும் அளிக்க முடிவு செய்தார். ஆனால் கந்தனோ.....?
கந்தா, எனக்கு இரண்டு பிள்ளைகள் என்று என்னைப் பெருமைப்படும் வாய்ப்பை அளிக்க மாட்டாயா?
அம்மா, தாயின் பாசத்தை அறியாதவன் நான். உங்கள் அன்பிலே உருகிப் போனேன். ஆனால் என்னை வளர்த்த இந்தக் காட்டாறையும் கான … கத்தையும் என் தோழர் … களையும் விட்டு எப்படி … வருவேன்?
ஆனந்தா, நீ இப்படிக் கண்ணீர் விடலாமா? உன் அன்பு எப்படிப்பட்டதென்று எனக்குத் தெரியாதா? ஆனால் இந்தக் கானகத்தை விட்டு என்னைப் பிரிக்காதே. உன் நட்பை என்றும் நான் மறக்கவே மாட்டேன்.
கந்தா! உன் நினைவோடு என்னால் அரண்மனையில் அதிக நாள் இருக்க முடியாது. விரைவில் உன்னையும் உன் தோழர்களையும் சந்திக்க வந்து விடுவேன்.
சென்று வா நண்பனே! ஏன் இப்படிக் கண்ணீர் என் பார்வையை மறைக்கிறது?

முற்றும்

# நீ சந்திரனுக்குப் போனால்...?

வல்லரசுகள் வானுலகை வெற்றி கொள்ள ராக்கெட்டுகளை வான வெளியிலே அனுப்பிய வண்ணம் இருக்கின்றன. மனிதன் சந்திர மண்டலத்தில் குடியேறும் நாள் வெகு தூரத்தில் இல்லை என்று கூறலாம். ஒரு வேளை நீயே கூட, முதலில் சந்திரனில் அடியெடுத்து வைக்கும் பெருமை பெற்ற மனிதனாகவும் இருக்கலாம். யார் கண்டார்கள்!

சந்திரனுக்கு நீ போனால் அங்கு என்ன காண்பாய் என்பதை நான் சொல்லட்டுமா? சலனமே இல்லாத, பயங்கரமான அமைதி நிறைந்த, எரிமலைகளால் சூழப்பட்ட, காற்றோ, தண்ணீரோ இல்லாத ஓர் உலகம் அது. பகலில் தாங்க முடியாத சூடும் இரவில் சகிக்க முடியாத குளிருமாக இருக்கும் சந்திர மண்டலத்தில்.



விண்வெளிக் கப்பலை விட்டுச் சந்திர மண்டலத்தில் இறங்கியதுமே உனக்கு அதிசயம் காத்திருக்கும். பூமியில் ஓர் எட்டு எடுத்து வைத்தால் சில அடி தூரம்தான் தாண்ட முடியும். ஆனால் சந்திரனில் பதினைந்தடிகளை ஒரே தாவாகத் தாவலாம். பூமியில் நடப்பது போலச் சந்திரனில் நடக்க வேண்டுமானால் நீ 300 பவுண்டு கனமுள்ள பூட்ஸ்களை அணிந்து கொண்டாக வேண்டும்! காரணம் என்ன தெரியுமா? பூமியின் ஆகர்ஷண சக்தி எவ்வளவோ அதில் ஆறில் ஒரு பங்குதான் சந்திரனுக்கு. பள்ளிக்கூட விளையாட்டு மைதானத்தில் உன் நண்பன் தாண்டிக் குதிக்கும் விளையாட்டில் ஆறு அடி உயரம் தாவினான் என்றால் சந்திரனில் அவன் இருபத்தியொரு அடிகளை அனாயாசமாகத் தாண்டுவான்!

பூமியில் பூரண சந்திரனின் அழகைக் கண்டு நீ ரசிக்கிறாய். குளுமையான ஒளியை உடையவன் என்றெல்லாம் அவனுக்குப் பெயர் இல்லையா? ஆனால் அங்கு நீ பகலில் அடியெடுத்து வைத்ததும் சந்திரச் சூடு உன் கால்களைச் சாம்பலாக்கி விடும். சந்திரனுக்குத்தான் தனியொளி கிடையாதே. ஆகவே சந்திரனில் வீசும் சூரிய ஒளியின் உக்கிரம் இருக்கிறதே, அப்பப்பா! 214 டிகிரி பாரன்ஹீட்—அதாவது தண்ணீரின் கொதி நிலையை விட இரண்டு டிகிரிகள் அதிகம்.

இரவு வேளையிலோ?—243 டிகிரி பாரன்ஹீட்; அதாவது தண்ணீரின் உறை நிலையை (வறட்டுப் பனிக்கட்டியை) விட 134 டிகிரி குறைவு!

இதுமட்டுமா? இன்னும் அங்கு எத்தனையோ விந்தைகள் காத்துக்கொண்டிருக்கின்றன உனக்கு.



சந்திர மண்டலம் முழுதும் ஒரே புழுதி மயம்தான்! ஆனால் நீ அங்கு போகும் வரை அந்தப் புழுதியின் அளவை யாராலும் கணக்கிட்டுச் சொல்ல முடியாது. வான சாஸ்திரிகளில் ஒரு சிலர் நம்புகிறார்கள், சந்திரனிலுள்ள புழுதி, ஒரு மைலில் மூன்றில் இரண்டு பங்கு ஆழமுடையது என்று. வேறு சிலரோ 'அதெல்லாம் இல்லை. துடைக்கப்படாத உன் மேஜைமீது எத்தனை புழுதி படிந்திருக்குமோ அவ்வளவுதான்' என்கிறார்கள்.

இந்த இரண்டில் எது உண்மையானாலும் சந்திரனிலுள்ள புழுதி சாதாரணப் புழுதியல்ல. ரசாயன ரீதியாக இயங்கக் கூடியவை. சந்திரனில் காற்றே கிடையாது. உன்னோடு உன் நண்பன் அங்கு வந்திருந்தால் நீ காணும் அதிசயங்களைப் பற்றி அவனிடம் எதுவும் பேச முடியாது. காற்றே இல்லையானால் சத்தமும் கிடையாதே. நாம் பேசுவதைப் பிறர் கேட்கும்படி செய்வது காற்றுத்தானே? ஒலியைத் தாங்கிச் செல்லக் காற்று இல்லாதபோது அங்கு சப்தம் எப்படிக் கேட்கும்?

'இப்படிச் சந்திரனில் சலனமே இல்லாமல், சப்தமே கேட்காமல், புழுதி நிறைந்து இன்னும் எத்தனையோ கஷ்டங்கள் இருக்கும் போது எதற்காக அங்கு போக வேண்டும்?' என்று கேட்கத் தோன்றுகிறதல்லவா உனக்கு? ஆனால் விஞ்ஞான ஆராய்ச்சியின் அவசியத்துக்காகச் சந்திரனில் குடியேற மனிதன் துடிக்கிறான். சந்திர மண்டல யாத்திரை சுலபமாகும் போது நாமும்தான் ஒரு தடவை போய்ப் பார்த்து வைப்போமே!



"நம்ம கணக்கு வாத்தியார் சுத்த மோசம்! ஒரு நாளைக்குச் சொன்னதை வேறு ஒரு நாள் மாற்றுகிறார்! நேற்றைக்கு நாலும் நாலும் எட்டு என்றார். இன்றைக்கு ஐந்தும் மூணும் எட்டு என்கிறார் .....இன்னும் பாரு, நாளைக்கு ஆறும் இரண்டும் எட்டு என்று சொல்லப் போகிறார். அதைக் கேட்டுண்டு நாமும் சும்மா இருக்க வேண்டியிருக்கு!"

# பிரமிப்பூட்டும் பிரமிட்டுகள்

ஏழு அதிசயங்களில் இன்னும் நிலைத்திருப்பது எகிப்து தேசத்திலுள்ள பிரமிட்டுகள்தாம். நைல் நதியின் மேற்குக் கரையிலே இந்தப் பிரமிப்பூட்டும் கல்லறைகளான கட்டடங்கள் இருக்கின்றன. கருங்கற்களாலும் செங்கற்களாலும் கட்டப்பட்டது இது. சதுரமான பீடத்தின் மீது அடுத்தடுத்து உள்ள பீடங்கள் உள்ளடங்கி இருக்கும்படி நான்கு பக்கங்களும் சரிவாக மேலே போகப் போகக் குறுகலாகி ஒன்று சேரும்படியாகக் கட்டியிருக்கிறார்கள். ஐயாயிரம் வருஷங்களுக்கு முன்பு எகிப்தை ஆண்ட 'பாரோ' மன்னர்களால் கட்டப்பட்டவை இந்தப் பிரமிட்டுகள். இதன் உள்ளே பல கூடங்களும் அறைகளும் வழிகளும் இருக்கின்றன.

பிரமிட்டை எழுப்புவதற்குப் பயன்படுத்தப்பட்டுள்ள கற்கள் ஒவ்வொன்றும் இரண்டரை டன் கனம் உள்ளவை. இத்தனை பெரிய கற்களை எங்கிருந்து எப்படிக் கொண்டு வந்தார்கள் என்பது இன்றைய ஆராய்ச்சியாளரைத் திகைக்க வைக்கும் புதிராகவே இருக்கிறது. பிரமிட்டின் உள் அறைச் சுவர்கள் மழு மழுப்பாக்கப்பட்டு அற்புதமான வேலைப்பாடுகளுடன் கூடியவை. பிரமிட்டுகளில் முதன்மையானது மீடம் பிரமிட். ஆனால் மிகப் பெரியது சோப்ஸ் பிரமிட். இது பாரோ கூபுவால் கட்டப்பட்டுப் பிற்காலத்தில் அந்த மன்னருடைய கல்லறையாகி விட்டது. 481 அடி உயரமுடைய இது 13 ஏக்கரா



நிலப் பரப்பை ஆக்கிரமித்துக் கொண்டிருக்கிறது. இந்தப் பிரமிட்டின் நிறை ஏழு மிலியன் டன்களாம். இதைக்கட்ட 300,000 அடிமைகள் தேவைப்பட்டனராம். இருபது வருடங்கள் ஆயிற்றும் இதைக் கட்டி முடிக்க. இரண்டரை மிலியன் கற்கள் பயன்படுத்தப் பட்டிருக்கின்றன இந்த ஒரு பிரமிட்டுக்கு மட்டும். இன்றைய புதை பொருள் ஆராய்ச்சியாளரும், கட்டடக் கலை விற்பன்னர்களும் பிரமிட்டுகளின் அழகையும் அமைப்பையும் கண்டு பாரோ மன்னர்கள் ஐயாயிரம் ஆண்டுகளுக்கு முன்னமேயே கட்டடக் கலையில் இத்தனை வல்லவர்களாக இருந்திருக்கிறார்களே என்று வியந்து பாராட்டுகிறார்கள்.

இரண்டாவது எகிப்திய பிரமிட், சோப்ஸ் மன்னரை அடுத்துப் பட்டத்துக்கு வந்த செப்ரன் என்பவரால் கட்டப்பட்டது. மூன்றாவது பிரமிட் சோப்ஸின் மகன் மைஸெரினஸ் என்பவனால் கட்டப்பட்டது. இவை மூன்றும்தான் மிகப் பெரிய பிரமிட்டுகள். ஆனால் நைல் நதிக் கரையில் இவை தவிர இன்னும் பல பிரமிட்டுகள் காட்சியளிக்கின்றன. இன்றைக்கு நாம் காணும்படியாக இருப்பவை மொத்தம் 34 பிரமிட்டுகள். பிற்காலத்தில் உலகம் சுற்றும் வாய்ப்பு உங்களுக்கு ஏற்படுமானால் அவசியம் இந்தப் பிரமிட்டுகளைப் போய்ப் பாருங்கள். எத்தனையோ அதிசயங்களைத் தன்னகத்தே அடக்கிக் கொண்டிருக்கின்றன இந்தப் பிரமிப்பூட்டும் பிரமிட்டுகள்.

---

## மூளையைக் குழப்பும் முக்கோணம்




அருகிலுள்ள படத்தைப் பார்த்தால் முக்கோணப் 'பிரமிட்' கட்டப் பிளான் போட்டுள்ளது போலிருக்கிறதல்லவா? ஆனால் இது உன் திறமையைச் சோதிக்கும் ஒரு கணக்கு. இந்த முக்கோணங்களில் உள்ள ஆங்கில எழுத்துக்களுக்குப் பதில் ஒன்று முதல், பதினெட்டு வரையுள்ள எண்களைப் பொருத்தமான இடங்களில் எழுத வேண்டும். அப்படி நீ அந்த எண்களை அமைப்பதானது கீழ்க்கண்ட படியெல்லாம் கூட்டினால் கூட்டுத் தொகை 57 வர வேண்டும்? (1) மூன்று புள்ளிக் கோடுகளின் பாதையில் ஆறு எழுத்துக்கள் இருக்கின்றனவல்லவா? நீதான் எழுத்துக்களுக்குப் பதில் எண்களை எழுதப் போகிறாயே. ஆகவே அந்த ஆறு எண்களைக் கூட்டினால் மொத்தம் 57 வர வேண்டும். (2) ஒவ்வொரு பிரதான முக்கோணத்தின் பக்கங்களைச் சுற்றியுள்ள ஆறு எண்களைக் கூட்டினாலும் இதே போல 57 வர வேண்டும். இப்படி அதில் இருப்பது மொத்தம் 5 பிரதான முக்கோணங்கள். (3) இனி, மூன்று புள்ளிக் கோடுகளும் நடு மையத்தில் சந்திக்கின்றன இல்லையா? இப்போது AHN மையம் OIB வழியாக மறுபடி Aக்குச் செல்வதானால் இரண்டு புள்ளிக் கோடு ஒரு நேர் கோட்டினாலான ஒரு முக்கோணம் உருவாகும், இல்லையா? இப்படி ஆறு முக்கோணங்கள் நமக்குக் கிடைக்கின்றன. இந்த ஆறு முக்கோணங்களின் பாதையில் உள்ள ஆறு எண்களைக் கூட்டினாலும் 57 வரவேண்டும்! ஆக மொத்தம் இந்தப் படத்தில் பதினாறு முறையாகக் கூட்டினாலும் கூட்டுத் தொகை அதே 57 வந்தாக வேண்டும். முயன்று பார்!

---

விடை: A—11, B—2, C—15, D—16, E—6, F—7, G—14, H—3, I—10, J—12, K—1, L—17, M—4, N—18, O—13, P—5, Q—8, R—9.

ஆயிரக்
கணக்கானவர்
அடுத்தடுத்து...





மாணவர்களுக்கு 25% கட்டணச் சலுகை



தவணை முறையில் டிக்கட் வழங்கும் திட்டம்

தவணை முறைப்படி டிக்கட் வழங்கும் பி.ஓ.ஏ.ஸி. திட்டத்தைப் பயன்படுத்திக் கொள்ளுங்கள். பயணம் முந்தி-பணம் பிந்தி. உங்கள் பி.ஓ.ஏ.ஸி. ட்ராவல் ஏஜெண்டையோ, உலகெங்கிலுமுள்ள பி. ஓ. ஏ. ஸி. அலுவலகங்களையோ அணுகுங்கள் அவர்கள் சேவை உங்களுக்கு எப்பொழுதுமுண்டு.

உலக முழுவதும் **B·O·A·C** உங்களை பேணுகிறது

ஏயர் இந்தியா மற்றும் கான்டாஸ் அவர்களோடு கூட்ட

தட்டில் ஆடிய கற்பூரக்கொழுந்தின்மேல் அவள் விரல்கள் படிந்து கண்களை ஒற்றின. பின்னால் குரல் கேட்டுத் திரும்பினாள். பேசியது அடுத்த வீட்டுப் பெண்தான். அவள் அழகில் லயித்து நின்றது அந்தப் பெண்ணின் பார்வை.

மணிக்கு மணி முகத்தைத் தேய்த்துக் கழுவுவதிலும், ஓயாமல் ஸ்னோவும் பவுடருமாக ஒற்றிக் கொள்வதிலும் குறைவில்லை. ஆனால் பாலியின் அழகு அவளுக்குச் சிறிதளவேனும் எட்டமுடியாததாகத்தானிருந்தது.

"போகலாமா?"

அவளோடு திரும்பி வருவதில் அந்தப் பெண்ணுக்கு ஓர் ஆர்வம். எதையாவது சொல்லி விட்டு, மாதுளைப் பற்கள் தெரியப் பாரதி அவளைப் பார்த்துப் புன்னகை புரிய வைத்து விட்டால் போதும். மகிழ்ச்சியில் மனம் திளைத்துப் போகும். இருள் பிரியும் வேளையில், விறுவிறுப்பாய்க் கோலமிடும் அவள் விரல்களைப் பார்த்தபடி, தெருவில் கைகளைப் பின்னால் கட்டிக் கொண்டு நிற்கிற தோற்றம் நினைவுக்கு வந்தது. சிரித்துக் கொண்டாள்.

"என்னது? எதற்காகச் சிரிக்கிறீர்கள்?"

எதையோ சொல்லிச் சமாளித்துக் கொண்டாள். இந்த உன்னிப்பான பார்வையில் தான் எவ்வளவு ஆசை? கடவுள் ஏன் இந்தப் பெண்ணுக்கு இன்னும் கொஞ்சம் அழகைக் கொடுத்திருக்கக் கூடாது?

சிறிது நேரம் தலைநிமிர்ந்த அந்த வேளையில் தெருவின் இருபுறமும், வாசற்படியிலும், ஜன்னல் ஓரமுமாகக் கண்கள் பார்வையில் விழுந்தன. தலையைக் குனிந்து கொண்டு மேலே நடந்தாள். மீண்டும் தலை நிமிராவிட்டாலும் பார்வை குத்துவதுபோல் மனத்தில் ஒரு பிரமை.

ரகு வீட்டில் இல்லை. ஹால் விளக்கை ஏற்றினாள். மின் விளக்கின் பொழிவில் சுவரில் மாட்டியிருந்த புகைப்படத்தில் ஒளி விளையாடியது. கண்கள் புன்னகை புரிய அவளும் அவள் தங்கையுமாகச் சேர்ந்து நின்று எடுத்துக் கொண்ட புகைப்படம் அது. அவள் அணிந்திருந்த அலங்கார நாட்டிய உடை, நெற்றிச் சுட்டியும், புல்லாக்கும், காதணியும், மார்புப் பதக்கமுமாக அவள் அழகுக் கென்றே அமைந்தது போன்ற ஜோடனை.



# நிறைவு

## எஸ். லட்சுமி சுப்பிரமணியம்

சிரித்துக் கொண்டே அவள் கன்னத்தைக் கிள்ளுவாள் தங்கை. ''உனக்கு அலங்காரம் எதற்கு? மூக்கிலும், காதிலும் இருப்பதையும் கழற்றி விட்டு, ஈரம் உலராத தலையை ஆற்றி விட்டபடி நின்றாலும், நீ அழகாகத்தான் இருக்கிறாய், அக்கா!'' அந்தக் குரலில் கொஞ்சம் பொறாமைகூட இருப்பது போலத் தோன்றும்.

ரகுவும் அவளுமாக, மாலையைக் கழற்றாமல் நின்றபோது சுற்றிலும் இருந்த கூட்டம் அவளைப் பார்த்து நின்ற விதம் அவளுக்கு நினைவிருக்கிறது. அவளைப் பாராட்டும் அந்தப் பார்வை அப்போது பெருமையாகத்தான் இருந்தது. அதை இயல்பாக ஏற்றுக் கொள்ளும் வகையறியாமல் விழிகள் மருண்டன. வண்டு போல் மை தீட்டிய கருவிழிகள். ஒன்றும் புரியாதது போல், அப்படி அவள் நின்ற நிலையும் ஓர் அழகுதான்.

தாய் முகமும் தன் முகமும் அணைந்தாற் போல் நெருங்கி, அவள் முகத்தைத் தொட்டுச் சொடுக்கித் திருஷ்டி கழிக்கும் விரல்களின் நொடிப்பு அவளுக்குப் பழக்கமானதுதான். அதைக் கவனிக்காதது போலத் திரும்பிக் கொள்வாள். வாசனை தூவினாற் போலத் தாயின் அந்த ஆதரவான பார்வை நெஞ்சில் நெடுநேரம் நிலைத்திருக்கும்.

பழைய நினைவுகள்.

ரகு சாப்பிட்டு விட்டு அறைக்குப் போய் விட்டான். மேஜை விளக்கின் வட்ட ஒளியில் அவன் ஏதோ எழுதிக் கொண்டிருப்பது தெரிந்தது. தம்ளரில் தண்ணீரைக் கொண்டு போய் வைத்துக் கார்ட்டை எடுத்து மூடினாள். அவன் நிலை கலையவில்லை. அவளை அப்படிப் பாராமல் இருப்பதே, அப்படிக் காட்டிக் கொள்வதே, அவன் வழக்கம். அவளுக்கும் அது ஓரளவு பழக்கமாகி விட்டது இப்போது.

அவளுக்குக் குறைவில்லை. பார்ப்பவர்கள் எல்லாரும் அப்படித்தான் சொன்னார்கள். அவளுக்கும் தெரிந்ததுதான். ஆனால் அந்த உணர்வை ரகு புரிந்து கொண்ட விதம்? அவள் காதில் விழுவது அவனுக்கும் கேட்டிருக்கக் கூடியதுதானே? பாகியின் அழகுக்கு முன் ஜோடி சேர முடியாத தன் தோற்றத்தின் நினைப்பில் அவன் குன்றி விடுவது போல் அவளுக்குத் தோன்றும்.

அந்த ஒப்பனையில் அவன் மனத்தில் புகையும் உணர்ச்சிகள் என்ன? அவற்றின் வடிவம் அவளுக்குத் தெரிந்ததில்லை. அவனை மீறி எழும் தாழ்மை உணர்ச்சியில் கருங்குவது போல் அவன் முகம் வாடி விடும்.

என்றாவது ஒரு நாள், புதுப் புடவை அணிந்து அவன் கண்ணில் படுவது போல் அவன் முன் வந்து நிற்பாள். எண்ணெய்த் திரியில் நீர்த் துளி தெறித்ததும் சுடர் சீறுவது போல் அவன் பார்வை குமுறும்.

வாயைத் திறந்து ஒரு முறையாவது அவள் அழகை அவன் பாராட்டியதில்லை. பொறாமையா அது? யாருக்கு யார்மேல் பொறாமை? அவளுக்கே வேடிக்கையாக இருக்கும் சில சமயம் நினைத்துப் பார்க்கும் போது. அர்த்தம் காண முடியாத அந்த மன உளைச்சலில் ஆழ்ந்து நிற்பாள்.

வெளியே கிளம்பினால் அவன் வேகமாக முன்னால் போய் விடுவான். அவள் தனியே பின்னால் போய்க் கொண்டிருப்பாள். இருவரையும் ஒப்பிடும் நிலைக்கு இடம் கொடுக்கக் கூடாது என்ற உணர்வா அது? ஆனால் அந்தத் தனிமையில் அவளுக்குத் திருப்தி காண முடிவதில்லை.

பஸ்ஸில் ஏறியதும் எத்தனை இடம் இருந்தாலும் அவன் அருகே போய் உட்கார்ந்து கொள்வாள். அவன் இளைப்பைக் கவனிக்காதது போலத் திரும்பிக் கொள்ளும் போது அவளை யறியாமல் சிரிப்பு எழும்.

ரகுவின் பள்ளிக்கூடத்து நண்பன் ஒருவன் திடுமென்று வந்து நின்ற போதும் அப்படித்தான். பேசிக் கொண்டிருந்தவள் உள்ளே எழுந்து போய் விட்டாள். சிறிது நேரம் கழித்துத் தட்டில் இரண்டு தேநீர்க் கோப்பைகளைக் கொண்டு வந்து ஸ்டூலில் வைத்து விட்டுத் திரும்பியவள் ஒரு கணம் நின்றாள். அவன் அவளை அறிமுகப்படுத்தவில்லை.

கதவோரம் பின்னல் மறையக் காத்திருந்தது போலப் பேசிய அந்தப் பேச்சு அவள் காதில் விழுந்தது.

''நீ அதிருஷ்டசாலி, ரகு!''

கதவிடுக்கின் வழியே ரகுவைக் கவனித்தாள். அவன் முகத்தில் அசைவில்லை. பார்வை பொருமிற்று. அவள் அங்கே போகாமல் இருந்திருக்கலாம்.

அந்தக் குறிப்பு எதை உணர்த்திற்று? அவனிடம் இல்லாததையா? அவளிடம் செறிந்து நின்றதையா? அல்லது அந்த ஒப்பிட்டுப் பார்க்கும் உணர்வில் அவன் நிலை சற்றுத் தாழ்ந்து நின்றதையா? அவளுக்கு நினைக்கத் தோன்றவில்லை. அவன் அப்படித்தான் நினைத்திருப்பான். அவளுக்குத் தெரியும்.

அன்று சாப்பிடும் போது அவன் பேச மறந்து விட்டதைப் போல் ஒரு மௌனம். அதன் புழுக்கத்தில் அடையாளம் புரியாத இம்சை இருவரையுமே வருத்திற்று.

வீட்டில் தனியே இருக்கும்போது இந்தச் சம்பவங்களின் நினைவு மனத்தில் சூழும். ஊஞ்சலின் உட்புறம் மின்னும் வானவில்லின் வர்ணங்களென ஒவ்வொன்றும் ஒவ்வொருவித உணர்ச்சியைத் தூண்டி விடும்.

அவனுள் கிளர்ந்த எழுச்சியை அவள் அறிவாள். ஆனால் அதை அடக்கிக் கவரும் ஆற்றல் அவளுடைய வசீகரத்துக்கும் இல்லை. அந்த இடத்தில் அவளுடைய நளினமும் சாதுரியமும் பயனற்றுத்தான் போயின. அவளுடைய முயற்சிகள் மீண்டும் மீண்டும் அவன் விலகிப் போவதற்கே வழிகாட்டுவது போல் அமைந்தன.

எந்த நேரமும் அவள் மனம் அவன் தோற்றத்தைத்தானே நினைக்கிறது?

ஒரு நாள் அவள் பூந்தொட்டியில் வளர்ந்திருந்த ரோஜாச் செடியில் பூவைக் கிள்ளிக் கொண்டிருந்தாள். அவன் காலை நேரத்துச் செய்தித் தாளில் மனம் படியாமல் உட்கார்ந்திருந்தான்.

அவளைப் பார்த்தபடி அரைக் கவனமாகப் பூவைத் தொட்டதில் முள் குத்திவிட்டது. பூவை உதறிய வேகத்தில் சில இதழ்கள் சிதைந்தும் போயின.

''என்னது?''

அசுவாரசியமாக அவன் கேட்டது அவளுக்கு வருத்தமாக இல்லை. அவன் கேட்டதே

போதும். அருகே குனிந்து கையைக் காட்டினான். ரோஜா மலரைப் பிடித்து நின்ற ரோஜா நிற விரல்கள். நகங்களில் ஏறியிருந்த மருதாணிச் சிவப்புக்கு இணையாக விரல் நுனியில் இரத்தப் பொட்டு. காற்றில் நலுங்கிய இதழ்களைப் போல் விரல்களும் துடித்தன. அது உடலின் துடிப்போ? உள்ளத்தின் துடிப்போ?

அந்த விரலைப் பிடிக்க அஞ்சியவன் போலத் திரும்பிக் கொண்டான். ஏதோ சொல்ல வந்ததை நிறுத்தி விட்டான். அவள் நெஞ்சில் ஏக்கம் தவித்தது. உள்ளே போய் விட்டான் அவன்.

கூடத்துக் கடிகாரத்தில் மணி ஒன்பது அடித்தது. ரகு படுக்கையைத் தட்டி உதறிக் கொண்டிருந்தான். திடீரென்று அவனை அழைத்தது போல் இருந்தது. நினைவிலிருந்து விழித்துக் கொண்டாள்.

ஊஞ்சல் மேல் தாமரை இலையில் சுற்றி வைத்த பொட்டலம். அவன் வாங்கி வந்ததாக இருக்கலாம். அதிலிருந்து மல்லிகைப் பூவின் மணம் 'கம்'மென்று எழுந்தது.

கிருஷ்ணர் படத்துக்குப் போட வாங்கிக் கொண்டு வந்திருப்பான். அவன்தான் போடுவது வழக்கம். அன்று ஏனோ நினைவில்லை. பயனற்றுத் தங்கிவிட்ட அதன் மணம் இப்போது அவளுக்கு நச்சரிப்பதாகத் தோன்றியது. அவள் அழகைப் போல்தானோ அதுவும்?

''என்ன யோசனை?''

கவர்ச்சி மலரும் புன்னகையோடு அவள் புறம் திரும்பினான். பூச்சரத்திலிருந்து ஒரு சாண் கிள்ளி எடுத்து அவள் கையில் கொடுத்தான். ''கூந்தலில் வையுங்களேன்'' என்று சொல்லுவது போல் அவன் முன் திரும்பி நின்றான். அவன் விரலின் ஸ்பரிசத்தை எதிர்பார்த்து விழிகள் அசையாமல் நின்றன.

பின்னல் பிரியில் மலர்ச் சரம் சேரும் உணர்வு அவளுக்குப் புரிந்தது. உடல் குறுகுறுத்தது. தலையைக் குனிந்து கொண்டாள்.

''பாகி! நீ ரொம்ப அழகாக இருக்கிறாய்!''

அவள் திடுக்கிட்டாள். பேச்சை நம்ப முடியாமல் ஒரு திகைப்பு. ரகுவா பேசுகிறான்...?

''ஆமாம், பாகி! ஆனால் அதுதான் எனக்கு ஒரு ஏக்கம்!''

அவனைத் தேற்றுவது போல் அவள் தலையை ஆட்டினாள். ஆனால் அவன் பேச்சு நிற்கவில்லை.

''உனக்கு முன்னால் என்னுடைய தோற்றம்...ஏதோ இணைசேர முடியாதது போல!''

''என்ன பேச்சு இது? என்னை வேதனைப் படுத்தாதீர்கள். என் அழகு உங்களுக்குத் தானே சொந்தம்? அந்தப் பெருமை உங்களுக்குத் தானே? அப்படி நீங்கள் நினைப்பதில் தானே எனக்குத் திருப்தி?''

அவனுக்கு உடல் புல்லரித்தது; ஏதோ தரிசனம் கண்டாற் போல. அவள் முகத்தில் படர்ந்த ஒளி அவன் உள்ளத்திலும் ஊடுருவியது போலத் தோன்றியது.

அவள் அவன் உடைமை. அவனிடமே அமைந்திருந்தால்தானா? அவனுக்கு உரியதாக இருப்பதும் அவனுக்குப்பெருமைதானே?

பாகி அவன் மார்பில் முகத்தைப் பதித்துக் கொண்டாள். இனி அவள் வேறு, அவன் வேறு என்பதில்லை. ஒன்றிய அந்த நிலையில் அவள் அழகு நிறைவெய்தி விட்டது.



ஜூன் 29 முதல்
சென்னை
மற்றும் தென்னுடைங்கும்
மாடர்ன் தியேட்டர்ஸ்
கவிதா
கதை, வசனம்
முரசொலி மாறன் M.A.
பாடல்கள்
கண்ணதாசன் · மருதகாசி
இசை
K.V. மகாதேவன்
டைரக்ஷன் : T.R. ரகுநாத்
MOULIS

# நந்தவனம்



சோமு

## 25. மயக்கம் தீர்ந்தது



சிங்கம்புத்தூர் மாளிகையில் ஜமீந்தாரிணியின் அறைக்குள்ளே பொன்னுத்துரை நுழைந்த போது; புவனபதியும் செல்வியும் நின்றுகொண்டிருந்த சூழ்நிலையிலே ஒரு தெளிவு இருந்தது. விபரீதமான குழப்பத்தை எதிர்பார்த்து வந்த பொன்னுத்துரைக்கு இது வியப்பைத் தந்தது.

''துரையா! வா! வா!'' என்றார் அனவரத புவனபதி. அந்தக் குரலிலே இழைந்த அன்பு பொன்னுத்துரையின் வியப்பை இன்னும் பன்மடங்கு அதிகப்படுத்திற்று!

''துரையா! வா அப்பா!'' என்றாள் ஜமீந்தாரிணி. குரலிலே பலவீனம் இருந்த போதிலும், உள்ளத்தின் அன்பு அந்தப் பலவீனத்துக்கு மத்தியிலும் பலமாக ஒலித்தது!

வியப்புக்கு மேல் வியப்பாக இருந்த இந்தச் சூழ்நிலையைக் கண்டு இன்பத் திகைப்பு மேலிட்டவனாகச் செல்வியின் முகத்தைக் கூர்ந்து பார்த்தான் பொன்னுத்துரை. அவளும் அவனைப் பார்த்தாள். அந்தப் பார்வையிலே வரவேற்பு இருந்தது! ஒரு 'சொந்தம்' ஒளிவீசியது!

''அத்தை! உங்கள் உடம்புக்கு என்ன?'' என்று கவலையோடு கேட்டான் பொன்னுத்துரை.

''ஒன்றுமில்லை. எல்லாம் சரியாகி விட்டது! சில சமயங்களில் புயலும் மழையும் வருவது போல் இருக்கும், கடைசியில் ஒரு காற்று வந்து மேகங்களையெல்லாம் அடித்துக் கொண்டு போய் விடும் அல்லவா? அப்படி ஒரு காற்று அடித்து ஓய்ந்து விட்டது இந்த மாளிகையிலே!'' என்றாள் ஜமீந்தாரிணி.

பொன்னுத் துரை ஜமீந்தாரிணியின் கட்டிலுக்கு அருகிலே வந்து அவளைப் பார்த்தான். மயக்கம் நன்றாகத் தெளிந்திருந்ததோடு, முகத்தில் ஓர் அமைதியும் நிலவியதைக் கண்டான்.

''பொன்னு! உன்னுடைய அத்தைக்கு மயக்கம் வந்து மிகவும் கவலையாகப் போய் விட்டது. அதனால்தான் உனக்குச் சொல்லியனுப்பினேன். உன்னைப் பார்க்க வேண்டும் என்று அவள் சொன்னாள்!''

இவ்வாறு கூறினார் ஜமீந்தார்.

''அதுதான் சொன்னேனே! இடியும் மழையும் வராதபடி ஒரு காற்று அடித்து எல்லாவற்றையும் கொண்டு போய் விட்டது! இப்பொழுதுதான் இந்த மாளிகையிலேயே ஒரு தெளிவு உண்டாயிற்று'' என்றாள் ஜமீந்தாரிணி.

''நீ ஓய்வு எடுத்துக் கொள். நான் பொன்னுத்துரையிடம் எல்லாம் விவரமாகப் பேசிக் கொள்கிறேன்!'' என்றார் ஜமீந்தார்.

''அது சரி. நீங்கள் எல்லா விவரமும் பேசிக் கொள்ளுங்கள். ஆனாலும் நான் சொல்ல வேண்டியதைச் சொல்லி விடுகிறேன்!'' என்றாள் ஜமீந்தாரிணி.

பொன்னுத் துரைக்கு ஆவலும் பரிவும் பொங்கி வந்தன. அத்தைக்கு அருகிலே போய் நின்று கொண்டு கேட்டான்:

''அத்தை! நீங்கள் என்னிடம் என்ன சொல்ல வேண்டும்? தாராளமாகச் சொல்லுங்கள்!''

ஜமீந்தாரிணி கட்டிலில் நன்றாக நிமிர்ந்து உட்கார்ந்து கொண்டாள்.

''பொன்னுத்துரை! நாளாக நாளாக எனக்கு அடிக்கடி மயக்கம் வருகிறது. இதயத்தில் பலம் இல்லை. ஒரு வேளை இல்லாவிட்டால் இன்னொரு வேளை, நிச்சயம் இந்த இதயம் இப்படியே நின்று விடத்தான் போகிறது. உறுதி சொல்வதற்கு இல்லை. ஆகையினால் என் கண் முன்னாலேயே உன்னுடைய திருமணத்தை நடத்திப் பார்த்துவிட வேண்டும் என்று ஒரு ஆசை. செல்வியின் விருப்பமும் அதுவேதான்!''

ஜமீந்தாரிணியின் இந்த வார்த்தைகள் செவியிலே அமுதத்தைக் கொண்டு கொட்டுவது போல் வந்தன! பொன்னுத்துரைக்குக் கால் நிலத்திலே பாவவில்லை!

''அத்தை! நீங்கள் என்ன சொல்லுகிறீர்கள்! என்றால் என் காதுகளை

நம்ப முடியவில்லையே! உண்மையிலே நீங்களும் செல்வியும் இப்படி ஒரு தீர் மானத்துக்கு வந்து விட்டீர்களா? அவ் வளவு அதிர்ஷ்டசாலியா நான்! அத்தை! நான் எதிர்பார்க்கவே இல்லை! வாழ்க் கையில் எனக்கு இப்படி ஒரு அதிர்ஷ்டம் உண்டாகும் என்று நான் கனவு கூடக் கண்டதில்லை!''

''பொன்னு! கபடம், சூது, வஞ்ச கம் எதுவுமே இல்லாத சுத்தமான மனசு உனக்கு! அந்த மனசுக்கு ஒரு நாளும் ஒரு குறைவும் வராது!'' என்றாள் ஜமீந் தாரிணி. இப்படிச் சொல்லும் போது அளவுகடந்த பரிவின் மிகுதியினால் அவளுடைய கண்கள் கலங்கின. பொன் னுத்துரைக்கோ உள்ளத்திலே பொங் கிய எல்லையற்ற அன்பையும் களிப்பை யும் தாங்க முடியவில்லை. ஜமீந்தாரி ணிக்கு அருகிலே சென்று அவளுடைய கால்களைத் தொட்டுக் கண்களிலே ஒற்றிக் கொண்டான்.

''மகாராஜனாய் இரு, அப்பனே!'' என்றாள் ஜமீந்தாரிணி.

''மாமா!'' என்று சொல்லிக் கொண்டே அனவரதபுவனபதிக்கு அரு கிலே சென்று உடம்பை வளைத்து அவ ருடைய கால்களைத் தொட்டுக் கண் ணிலே ஒற்றிக் கொண்டான். விவரிக்க முடியாத உவகை அவனை ஆட்கொண்டு இயக்கியது!

''மாமா! அறிவுக் குறைவினால் இது வரை நான் தவறான முறையில் பேசியும், நடந்தும் இருந்தால் என்னை மன்னித்து விடுங்கள்! உங்களு டைய ஆதரவும் அனுதாபமும் இல்லாமல் உங்க ளுடைய அரவ ணைப்பிலிருந்து விலகி நிற்க என் னால் முடியவில்லை மாமா!''

இப்படிச் சொல்லும்போது பொன் னுத்துரையின் வார்த்தைகள் படபடத் தன. ஜமீந்தாருக்கு உடம்பெல்லாம் ஆடியது.

''பொன்னு! அறிவிலே குறை இருந் தால் அதை நிறைவு செய்வது எளிது என்பதை இப்பொழுது நன்றாக உணர் கிறேன். இந்தக் காலத்தில் கல்வியும் அறி வுக் கலைகளும் அத்தனை தூரம் நாடெங் கும் பரந்து கிடக்கின்றன. ஓரளவு முயற்சி இருந்தால் யாரும் அறிவாளி யாகிவிட முடியும். உண்மையில் என் வாழ்நாளில் அறிவாளிகளைப் பார்த்துப் பார்த்து அலுத்துப் போய் விட்டேன்! உண்மையான அன்பு உள்ளவர்களைப் பார்ப்பதுதான் அபூர்வமாக இருக்கிறது! பொன்னுத்துரை! இதுவரை அறி வுக்கு மதிப்புக் கொடுத்து ஏமாந்தேன். இப்பொழுது புத்தி வந்து விட்டது. இனிமேல் அன்பை மதிப்பேன். சந்தேக மில்லை. அறிவைவிட மேலானது அன்பு தான் என்பதை நன்றாகக் கற்றுக் கொண்டு விட்டேன் அப்பனே!''

இவ்வாறு சொல்லிக் கொண்டே பொன்னுத் துரையை உடம்போடு உடம்பு சேர்த்து அணைத்தவாறு, அந்த அறைக்கு வெளியே அழைத்து வந்தார் அனவரத புவனபதி.

சிங்கம்புத்தூர் மாளிகையின் விசாலமான கூடத்திலே சோபாவில்





சிம்லாவாழ் தென்னிந்தியர் சங்கத்தினர் தங்கள் ஆண்டு விழாவை மே மாதம் 19 ந் தேதி திரு கிருஷ்ண மூர்த்தி தலைமையில் சிறப்பாகக் கொண்டாடினர். விழாவில் 'கால் கடுதாசி' என்ற நாடகம் சிறப்பாக நடைபெற்றது.

வந்து உட்கார்ந்தார்கள் ஜமீந்தாரும் பொன்னுத்துரையும்.

''செல்வி! எங்கள் இரண்டு பேருக்கும் சூடான காப்பி கொண்டு வரும்படி சொல்லிவிட்டு, நீ இங்கே வருகிறாயா?'' என்று மகளை அழைத்தார் அனவரதர்.

''பொன்னுத்துரை! இந்த ஆண்டில் செண்பக நாயகி கோவிலின் திருவிழாவுக்குச் செல்லும் போது நீயும் செல்வியும் தம்பதிகளாக வரவேண்டும் என்பது என் தீர்மானம்!'' என்றார் ஜமீந்தார்.

''மாமா! உங்களுடைய மன நிலை என்ன என்பதை நன்றாகத் தெரிந்து கொண்டு விட்டேன். என் வரையில் அன்றும் இன்றும் என்றுமேசெல்விதான் என் இதயத்தின் ராணி. இதற்கு மேல் எனக்கு ஒன்றும் சொல்லத் தோன்றவில்லை. அவளுடைய உயர்ந்த பண்புகளுக்குத் தக்க முறையில் இனிமேல் என் மனப்பான்மைகளை நான் பண்படுத்திக் கொள்ள வேண்டும் என்று ஆசைப்படுகிறேன். இளமையிலிருந்து நான் முரட்டுத்தனமாகவே வளர்ந்து விட்டேன். அதைச் சில நாட்களாக நன்றாக உணர்ந்து வருகிறேன். இனி நான் எப்படி உருவாக வேண்டும் என்பது உங்கள் கையிலேதான் இருக்கிறது!''

பொன்னுத்துரை இப்படிச் சொல்லிக் கொண்டிருக்கும் போது, செல்வி அங்கே வந்தாள். சோபாவில் தந்தையின் அருகிலே உட்கார்ந்தாள்.

''செல்வி! சற்று நேரத்துக்கு முன்பு துரை சொன்னானே ஒரு வார்த்தை, ஞாபகமிருக்கிறதா?'' என்று கேட்டார் ஜமீந்தார்.

''எதைச் சொல்லுகிறீர்கள் அப்பா?'' என்று கேட்டாள் தாமரைச் செல்வி.

''ஏதோ தவறு செய்திருந்தால் மன்னிக்க வேண்டும் என்று சொன்னான் அல்லவா? அது என்ன தவறு தெரியுமா? இனி மேலும் உங்கள் இருவருக்குள்ளும் எந்த இரகசியமும் இருக்கக் கூடாது. அதனால் அந்தத் தவறு என்ன என்பதை இப்பொழுதே வெளியிட்டுச் சொல்லி விடுகிறேன்....!''

ஜமீந்தார் இப்படிச் சொன்ன போது பொன்னுத்துரையின் முகத்தில் ஒரு சிறு குழப்பம் படர்ந்தது. என்றாலும் அதைச் சமாளித்துக் கொண்டான்.

''செல்வி!'' என்று அழைத்த ஜமீந்தார், ஒரு விநாடி புன்முறுவல் செய்து மௌனமாக இருந்தார். பிறகு மேலே பேசினார், அந்த இரகசியத்தை!

''செல்வி! உன்னுடைய அறையில் ஒரு அநாமதேயக் கடிதம் கிடந்ததல்லவா? அதை எழுதியது யாராக இருக்குமோ என்று திகைத்தாய் அல்லவா? அதை எழுதியது பொன்னுத்துரைதான்! அவனுடைய எழுத்து அது என்று புரிந்து கொண்ட பிறகுதான் உடனே நான் அதைக் கிழித்து எறிந்தேன்! என்ன பொன்னுத்துரை?''

சோபாவில் இருந்து எழுந்து கை கூப்பியபடியே பொன்னுத்துரை, ''மாமா! என்னை மன்னித்து விடுங்கள்!'' என்றான்.

''துரை! முதலில் உட்காரு சோபாவிலே! உன்னை மன்னிப்பதற்கு ஒரே ஒரு வழிதான் உண்டு! அதைத்தான் இப்பொழுது தீர்மானித்துச் சொன்னேன். திருமணத்தைத் தவிர இந்தத் தப்பிதத்துக்கு வேறு தண்டனை கிடையாது!'' என்றார் ஜமீந்தார், சிரித்துக் கொண்டே! பொன்னுத்துரை ஏதும் மறுமொழி பேச முடியாமல் எப்படியோ உட்கார்ந்திருந்தான். ஜமீந்தார் சொன்னார் மகளைப் பார்த்து:

''செல்வி! இப்படி ஒரு கடிதத்தைப் பொன்னுத்துரை எழுதியதற்கு என்ன காரணம்? கடிதத்தில் எழுதியிருந்த செய்தி என்னவோ உண்மைதான்! ஆனாலும், இந்த நிகழ்ச்சிகளையெல்லாம் ஊர் முழுதும் பரப்பாமல் இரகசியமாக இப்படி ஒரு கடிதத்தை எழுதி, அதை வேறு யாருக்கும் அனுப்



அடிஸன் பெயின்ட்ஸ் கம்பெனியின் டைரக்டர் திரு எச். கிருஷ்ணமூர்த்தி அவர்களின் புதல்வி சௌ. ஜயலக்ஷ்மிக்கும் திரு ராமமூர்த்திக்கும் ராயப்பேட்டையில் விவாகம் நடந்தது.



சென்னை லார்ஸன் டுப்ரோ கம்பெனியைச் சேர்ந்த நாராயணன் அவர்களின் புதல்வி சௌ. ஜயலக்ஷ்மிக்கும் திரு வேங்கட சுப்பிரமணியத்துக்கும் திருமணம் நடைபெற்றது.

---

பாமல், உன்னிடமே கிடைக்கும்படி சேர்த்தானே! இதற்கு என்ன காரணம்! இத்தனை விபரீத நிகழ்ச்சிகளுக்கு மத்தியிலும் அவனுக்கு உன்னிடம் அளவற்ற அன்பு இருந்த ஒரே காரணத்தினால்தான் அவன் அப்படிச் செய்தான்! உண்மையில் அது தவறு இல்லை. தவறு ஏற்படாதவாறு நம் கண்களைத் திறந்த நல்லுரை அது! பொன்னுத்துரை! நீ ஏன் குழப்பிக் கொள்கிறாய். நடந்தது அனைத்தும் ஒரு நன்மைக்குத்தான். கடலுக்குள்ளேயிருந்து புறப்படுகிற அலை வெளியே ஓடிப் போய்விட முடியுமா? கரையிலே வந்து சரிந்துவிட்டு, மறுபடியும் கடலுக்குள்ளேதான் போய்ச் சேர வேண்டும். அப்படி ஒரு நிகழ்ச்சி நம்முடைய வாழ்விலே நடந்தது என்று வைத்துக் கொள்ள வேண்டும். தெரிந்ததா? செல்வி, உனக்கு ஒரு முக்கிய அறிவுரை சொல்ல வேண்டும். இது வரை நடந்த விபரீத நிகழ்ச்சிகளை ஒரு விபரீதக் கனவாக எண்ணி மறந்து விடு! கெட்ட சொப்பனம் கண்டது போல் கருதி அந்த நிகழ்ச்சிகளையெல்லாம் மனத்திலிருந்து அகற்றிவிட வேண்டும் நீ! இனி உனக்கு வாழ்விலே நண்பன், தோழன், ஆசிரியன், குரு, கணவன் எல்லாம் பொன்னுத்துரைதான்....!''

இப்படிச் சொல்லிக் கொண்டே எழுந்திருந்து, இடுப்பிலே செருகி வைத்திருந்த சம்புடத்திலிருந்து திருநீறு எடுத்து, இரண்டு பேர் நெற்றியிலும் பூசினார் அனவரதபுவனபதி. இருவரும் ஜமீந்தாருடைய பாதங்களில் விழுந்து வணங்கினார்கள்.

''பொன்னுத்துரை! அலுவல் அறையைத் திறக்கும் ஓசை கேட்கிறது. வல்லாளவேலன் வந்து விட்டான் என்று நினைக்கிறேன். அவனை அழைத்து வரும்படி சுப்பையாவை அனுப்பியிருந்தேன். நீ போய் வல்லாளவேலனிடம் எல்லாச் செய்திகளையும் சொல்லிவிடு! அது மிகவும் அவசியமான ஒரு காரியம்!''

இப்படிச் சொல்லி விட்டுச் செல்வியை உடன் அழைத்துக் கொண்டு ஜமீந்தாரிணி படுத்திருந்த அறைக்குச்

---



வட சென்னை டாக்டர் சி. வி. நரசிம்மன் அவர்களின் புதல்வி சௌ. ஜானகி சாத்தனூர் அண்ணா அரசாங்க ஆஸ்பத்திரி டாக்டர் திரு ரவீந்திரனை மணம் புரிந்து கொண்டார்.



பாண்டிச்சேரி சர்க்கார் ஆஸ்பத்திரி டாக்டர் டி. வேங்கடரமணி அவர்களுக்கும் சௌ. ஹேமலதாவுக்கும் அதிவிமரிசையாகத் திருமணம் நடைபெற்றது.



அகில இந்திய ரேடியோ டிபுடி டைரக்டர் ஜெனரல் திரு பரமேசுவரன் அவர்களின் புதல்வி சௌ. ஜயலக்ஷ்மிக்கும் திரு ஹரிஹர னுக்கும் சென்னையில் திருமணம் நடந்தது.



நெய்வேலி லிக்னைட் கார்ப்பரேஷனைச் சேர்ந்த திரு நாராயணசாமி அவர்களின் புதல்வி சௌ. பத்மாவுக்கும் திரு பத்மநாப னுக்கும் சிதம்பரத்தில் கல்யாணம் நடந்தது.

சென்றார் அனவரதர். பொன்னுத் துரை அலுவல் அறைக்கு வந்து நாற் காலியிலே உட்கார்ந்தான். கணக்குப் பெட்டிக்கு எதிரே, பாயிலே அமர்ந்து இருந்த வல்லாளவேலர், பொன்னுத் துரையை ஏற இறங்கப் பார்த்தார்.

''என்ன சித்தப்பா! இப்படிப் பார்க் கிறீர்கள்?'' என்று கேட்டான் பொன் னுத்துரை.

''ஒன்றுமில்லை! எத்தனை அங்குலம் வளர்ந்திருக்கிறீர்கள் என்று பார்த்தேன் தம்பி! மற்றப்படி நடப்பு எல்லாம் தெரிந்து கொண்டு விட்டேன்!'' என் றார் வல்லாளவேலர்.

''அதற்குள்ளாகவா தெரிந்து கொண்டு விட்டீர்கள்?'' என்று வியப் போடு கேட்டான் பொன்னுத்துரை.

''தம்பி! இந்த வல்லாளனுக்கு ஒரு செய்தி தெரியவேணுமானால், ஒருத்தர் வந்து சொல்ல வேண்டும் என்ற அவ சியமே கிடையாது. இந்தச் சிங்கம்புத் தூர் மாளிகையிலே உள்ள சுவர் சொல் லும்! ஒவ்வொரு செங்கல்லும் பேசும் தெரியுமா? காதைக் கொண்டு போய்ச் சுவரிலே வைத்தால் போதும்! அப் படியே கதை கதையாகக் கேட்கலாம்!'' என்று சொல்லிக் கணக்கு மேஜையிலே ஒரு குத்துக் குத்தித் தீர்மானம் வைத் தார் வல்லாளவேலர்.

''அது சரி! சித்தப்பா! நான் எழு தின கடிதத்தை மாமா கண்டு பிடித்து விட்டார்களே! அதுதான் ஆச்சரிய மாக இருக்கிறது!''

''தம்பி! உங்களுக்கு எல்லாமே ஆச்சரியந்தான்! இந்த வல்லாளனுக்கு எதுவும் ஆச்சரியமில்லை! கடிதம் எழுதி னது நீங்கள் என்று கண்டு பிடித்த தோடு, அந்தக் கடிதத்தை ஜன்னல் வழியாகப் போட்டது யார் என்றும் மாமா கண்டு பிடித்திருப்பார்கள்! இப் பொழுது எல்லா முடிவும் நல்ல முடி வாக இருப்பதால் எல்லாருமே தப்பி னோம்! இல்லையென்றால் இதற்குள் இந்த மாளிகை ஒரே போர்க்களமாக மாறி யிருக்கும்!''

''சித்தப்பா! அதை யெல்லாம் பற்றி இனி மேல் பேச வேண்டியது என்ன



கிராமபோன் கம்பெனி சென்னைக் கிளை மானேஜர் திரு கே. எஸ். அய்யர் அவர்களின் புதல்வி சௌ. பிரபாவுக்கும் திரு நாகராஜ னுக்கும் திருமணம் சிறப்பாக நடந்தேறியது.



வக்கீல் திரு எஸ். அனந்த நாராயணய்யர் அவர்களின் புதல்வி சௌ. மீனாக்ஷிக்கும் திரு எஸ். எஸ். சர்மாவுக்கும் பம்பாய்த் தமிழ்ச் சங்கம் ஹாலில் விவாகம் நடந்தது.



செங்கல், ஓடு தயாரிப்பாளர் சங்கத்தின் பதினாறாவது ஆண்டு விழாக் கொண்டாட்டத்தில் சென்னை தொழில் மந்திரி திரு ஆர். வேங்கடராமன் உரையாற்றுகிறார். அவருக்கு அருகில் அச்சங்கத்தின் தலைவர் திரு ஏ. ஆர். ராஜகோபாலன் அமர்ந்திருக்கிறார்.

இருக்கிறது! விட்டுத் தள்ளுங்கள். முடிவு மட்டும் நல்ல முடிவாக—''

''முடிவுதானே? தம்பி, அதைப் பற்றி எனக்கு எந்தக் காலத்திலுமே சந்தேகம் இருந்ததில்லை. என்னைத் தள்ளுங்கள். உங்கள் சித்தி இருக்கிறாளே சித்தி, அவளைக் கேட்டுப் பாருங்கள்—''

''சித்தியையா? சித்திக்குத் தெரியுமா இது சித்தப்பா!''

''தம்பி, ஏதோ உங்களுடைய சித்தி தானே என்று நினைக்கிறீர்கள். நானும் அப்படித்தான் நினைத்தேன். ஆனால் பாருங்கள். அவள் ஒரு நாள் எனக்குக் கொடுத்திருக்கிறாள் மண்டபப்படி! அடாடா! அப்படிக் கொடுத்திருக்கிறாள்!'' என்றார் வல்லாளர்.

''மண்டபப்படியா? அது என்ன சித்தப்பா?''

''தம்பி, உங்களுக்கும் எனக்கும் முந்தியே அவள் எல்லாம் முடிவு தெரிந்து வைத்திருக்கிறாள்! பாஞ்சாலங்குறிச்சிக் கோடாங்கிக்காரனிடத்திலே குறிகேட்டு, அப்படியே மனசுக்குள்ளே அதை ஒரு பக்கம் வாங்கிப் பத்திரமாகப் பூட்டி வைத்து விட்டு, நம்மிடத்திலே கதை பேசுகிறாள்! எப்படி இருக்கும் எனக்கு! நீங்களே சொல்லுங்கள்!''

''சித்தப்பா! அப்படியானால் இத்தனை உறுதிக்கும் மத்தியிலா நீங்கள் என்னை வடக்கே ஓடிப் போகும்படி சொன்னீர்கள்?''

''தம்பி! அது வேறு சமாசாரம்! நீங்கள் சிங்கம்புத்தூர் மாப்பிள்ளை என்பது உறுதிதான்! ஆனால் அந்தப் பையன்?''

''சித்தப்பா!'' என்று இழுத்தான் பொன்னுத்துரை!

''என்ன தம்பி! அந்தப் பையன் என்று சொன்னதுமே, உங்களுக்கு ஏன் குதிரை கலைகிறது லகானைத் தளர்த்துகிறீர்களே தம்பி, ஏன் அப்படி?'' என்று கேட்டுக் கொண்டே மேஜைப் பெட்டியிலே சாய்ந்தவாறு 'துரையைப் பார்த்தார் வல்லாளர். பொன்னுத்துரை நாற்காலியின் பின் கால்களைத் தூக்கி முன் பக்கமாகச் சாய்ந்து கொண்டே, சித்தப்பாவிடம் மெல்லிய குரலில் சொன்னான்:

''சித்தப்பா! எல்லாம் மங்களமான ஒரு தீர்மானத்துக்கு வந்து விட்டபிறகு, அந்தப் பையனைப் பற்றி ஏன் நினைக்கிறீர்கள் இப்பொழுது?''

''தம்பி, வேதாளம் மறுபடியும் முருங்கை மரத்தில் ஏறிக் கொண்டது என்கிற கதையாக இருக்கிறதே உங்கள் பேச்சு! அந்தப் பையன் என்ன ஆனால் நமக்கு என்ன வந்தது என்று கேட்கிறீர்களே! அப்படிக் கேட்கலாமா நீங்கள்? உங்கள் மாமாவும், நீங்களும், மாமா மகளுமாகச் சேர்ந்து ஒரு முடிவுக்கு வந்து விட்டீர்கள். சரி. உங்கள் தீர்மானப்படி திருமணமும் நடக்கப் போகிறது. அதுவும் சரி. ஆனால் அப்படித் திருமணம் நடந்து முடிந்த பிறகும், இந்தப் பையனை இப்படியே விட்டு வைத்திருந்தால் எப்படி? அதைப் பற்றி யோசியாமல் இருக்கலாமா? என்ன அப்பாவிப் பிள்ளையாக இருக்கிறீர்கள் நீங்கள்?''

வல்லாளவேலர் இப்படிச் சொன்னதும் திகைப்பு மேலிட்டவனாக அவரையே பார்த்தான் பொன்னுத்துரை.

''என்ன சித்தப்பா, இத்தனை மகிழ்ச்சியான ஒரு சந்தர்ப்பத்தில் மறுபடியும் என் மூளையைக் குழப்புகிறீர்களே!'' என்று கேட்டான்.

''தம்பி! நீங்கள் என்ன குழம்பினாலும், எத்தனை தயங்கினாலும், அதற்காக நான் சும்மா இருந்துவிடப் போகிறதில்லை! அந்த வில்வநாதனுடைய விரோதத்தை யெல்லாம் மறந்து, நீங்கள் அவனுக்கு நண்பனாகவே மாறிவிட்டாலும் சரி! நானும் பஞ்சவர்ணமும் அந்த வில்வநாதனை விடப்போவதில்லை! வேணுலிங்கமும் கடலையாண்டியும் சேர்ந்து என்னைப் படுத்தியுள்ள பாடு அப்படி!'' என்று சொல்லி மீண்டும் மேஜையிலே குத்தினார் வல்லாளவேலர். (தொடரும்)


குளுமைக்கும்,
எடுப்பான
தோற்றத்திற்கும்
கேம்ப்ரிக்ஸ்,
மல்ஸ் மற்றும்
லான்கள்
மபத்லால்
க்ரூப்
நியூ ஷர்ராக் (ஷர்ராக்), அஹமதாபாத், நியூ ஷர்ராக், நாதியாத்.
ஸ்டாண்டர்ட், பம்பாய். ஸ்டாண்டர்ட் (நியூ சைனு), பம்பாய்.
ஸ்டாண்டர்ட், டிவாஸ். ஸஸ்ஸூன், பம்பாய்.
ஸஸ்ஸூன், (நியூ யூனியன்), பம்பாய். சூரத் காட்டன், சூரத்.
மபத்லால் பைன், நவ்ஸாரி. ககல்பாய ஜூட், கல்கத்தா.
இந்தியன் டைஸ்டப், பம்பாய.

# வாட்டர்பரீஸ்
சிவப்பு லேபில்
# காம்பவுண்ட்
இருமல்,
ஜலதோஷங்களுக்கானது




## நான்கு நல்ல காரணங்கள் இதோ

| 1 | 2 | 3 | 4 |
|---|---|---|---|
| இருமலையும், ஜலதோஷத்தையும், இமைப் பொழுதில், கச்சிதமாகக் கரைக்கிறது வாட்டர்பரீஸ் காம்பவுண்ட். | கபம் அறுத்து, நுரையீரலைச் சுத்தப்படுத்தும் கிரியோஸோட், க்வயகால் அடங்கியது வாட்டர்பரீஸ் காம்பவுண்ட். | வாட்டர்பரீஸ் காம்பவுண்ட் வெறும் நோய் நிவாரணி மட்டுமல்ல; நம்பிக்கைக்குகந்த டானிக்குமாகும். நோயை எதிர்க்கும் சக்தியை உடலுக்கு உதவுகிறது. | வாட்டர்பரீஸ் காம்பவுண்ட் பசியைத் தூண்டுகிறது. ஜீரண சக்தியை வளர்க்கிறது. ரத்தத்தைச் சுத்தப்படுத்துகிறது. தாதுப் பொருள் நஷ்டத்திற்கு ஈடுசெய்கிறது. |

# வாட்டர்பரீஸ் காம்பவுண்ட்
## சிவப்பு லேபில்

வார்னர்-லாம்பர்ட் பார்மஸூடிகல் கம்பெனி (வரையறுக்கப்பட்ட பொறுப்புடன் யு.எஸ்.ஏ.வில் இணைக்கப்பெற்றது)

# சிந்தனை மேடை

## அரவிந்தன்

### 3. இரயில் உறவுகள்

குறுக்கு வழியாகச் சென்னை எழும்பூர் செல்லும் திருவனந்தபுரம் எக்ஸ்பிரசில் நேர்வழியாக ஏறுவதற்குக் கூட்டம் இடம் தரவில்லையாதலால் சன்னல் வழியாகச் சாமான்களையும், பெட்டி படுக்கையையும் தள்ளி விட்டுப் பின் என்னையும் ஒருவிதமாக உள்ளே திணித்துக் கொண்டு நிம்மதியாக ஒன்றிரண்டு தரம் மூச்சு விட்டுக் கொள்ளலாமென்று தலை நிமிர்ந்தேன். நிமிர்ந்த தலை குனியும்படி மேலே யிருந்து ஒரு குரல் முழங்கியது.

அவ்வளவு கூட்டத்திலும் நெருக்கடியிலும் ஒரு துன்பமுமில்லாமல் 'அப்பர் பெர்த்தில்' காலை நீட்டிக் கொண்டு உட்கார்ந்திருந்த மனிதர் ஒருவர், ''என்ன சார் உங்களைப் போல விவரந் தெரிந்தவர்களே இப்படிச் சன்னல் வழியாக ஏறினால் நன்றாயிருக்கிறதா?'' என்று நேர்மையின் பிரதிபிம்பமாக மாறி என்னைச் சாடுவதற்குத் தொடங்கினார்.

''அப்பர் ஸ்வாமிகளே! (அப்பர் பெர்த்தில் இருப்பவர்களைக் கூற நான் கண்டு பிடித்திருக்கும் மரியாதைத் தொடர் இது.) நீங்கள் கூறியதில் எனக்கு மகிழ்ச்சியளிக்கிற ஒரே அம்சம் 'என்னை விவரந் தெரிந்தவன்' —என்று நீங்களாகவே பார்த்தவுடன் ஒப்புக் கொண்டதுதான். ஏனென்றால் என்னை வெகுநாட்களாகப் பார்த்துப் பழகி எல்லா வகையிலும், உறவு பூண்டவர்களும் சொல்லத் தவறிய வார்த்தையாகும் அது!'' என்று கிண்டலில் இறங்கினேன். அடியேனுடைய கிண்டல் 'அப்பர்' ஸ்வாமிகளுக்குப் புரிந்துவிட்டது போலும்.



''நல்லதைச் சொல்ல வந்தால் கிண்டல்பண்ணுகிறீர்களாசார்! 'நேர்வழி இருக்கும் போது....''

''தப்பு ஸ்வாமி! நேர் வழி என்பது இந்த எக்ஸ்பிரசுக்குக் கிடையாது. இது 'குறுக்கு வழியாகச் சென்னை எழும்பூர் செல்லும் திருவனந்தபுரம் எக்ஸ்பிரஸ்' அல்லவா?''

''நீர் விதண்டாவாதம் பேசுகிறீர்.''— நீங்களில் ஆரம்பித்த 'அப்பர்' 'நீரில்' இறங்கி விட்டார்.

''கொஞ்சம் இருங்கள்! நிம்மதியாக இரண்டு தரம் மூச்சு விட்டுக் கொள்கிறேன். அப்புறம் நீங்கள் என்னோடு எவ்வளவு வேண்டுமானாலும் சண்டை பிடியுங்கள். அநியாயமாக 'விவரம் தெரிந்தவன்'— ஒருத்தனை மூச்சு நின்று போகும்படி செய்து விடாதீர்கள், ஸ்வாமி—'' என்று பெருந்தன்மையாக அவரிடம் சொல்லி அநுமதி பெற்றபின் மூச்சு விட்டுக் கொண்டேன் நான். மூச்சு விட்டு ஆசுவாசப் படுத்திக் கொண்ட பின் தைரியமாக இன்னும் சிறிது நேரம் அப்பர் ஸ்வாமிகளோடு விவாதம் செய்தேன்.

இரயிலில் அவர் உட்கார்ந்திருந்த மேற்பகுதிப் பலகையைச் சுட்டிக்காட்டி, ''லக்கேஜ் ஒன்லி — சாமான்களுக்கு மாத்திரம் என்று போட்டிருக்கிறதே; என்னுடைய பெட்டி படுக்கைகளை வைப்பதற்கே இடமில்லாமல் நான் திண்டாடிக் கொண்டிருக்கும் போது நீர் இந்தப் பலகையைத் தூங்குவதற்கு ஆக்கிரமித்துக் கொண்டிருக்கலாமா?'' என்று கேட்டேன்.

'அப்பர்' என் கேள்வியிலிருந்த நியாயத்தைப் புரிந்து கொள்ளாமல் என் மேல் கோபப்பட்டு எரிந்து விழலானார். மிகவும் பலவீனமான வேளைகளில் தான் எதிராளிக்கு நம் மேல் கோபம் வரும் என்ற இரகசியம் எனக்குத் தெரியுமாதலால் நான் அவரை வகையாகச் சமாளித்தேன்.

### நெருக்கடியில் சுகம்

கடைசியில் இரண்டு பேருக்கும் சுமுகமான முறையில் ஓர் உடன்படிக்கை, ஏற்பட்டது. சாமான்களைப் பலகையில் ஓர் ஓரமாக வைத்துவிட்டு மீதமிருந்த இடத்தில் விழுப்புரம் வருகிற வரை அவர் தூங்க வேண்டும் என்றும் விழுப்புரத்துக்கு அப்பால் சென்னை வரை (அதற்கு மேல் அந்த இரயில் போகாதாகையால் இந்த உடன்படிக்கைக்கு எழும்பூர்தான் உச்சவரம்பு) நான் தூங்கிக் கொள்வதற்கு விட்டுவிட வேண்டுமென்றும் உடன்படிக்கை ஆயிற்று.

எங்களுக்குள் இந்த உடன்படிக்கை ஏற்பட்ட காலத்தில் திருவனந்தபுரம் எக்ஸ்பிரஸ் கோடைக்கானல் ரோடு நிலையத்தில் நின்றுகொண்டிருந்ததனால் இதைக் 'கோடைக்கானல் உடன்படிக்கை' என்றுபெருமையாக அழைக்க முடியும். லாகோஸ் உடன்படிக்கை நாட்டோ, ஸீட்டோ இணைப்பு உடன்படிக்கை என்றெல்லாம் அரசியல் முக்கியத்துவம் வாய்ந்த நிகழ்ச்சிகளை அழைப்பதுபோல் எங்களுடைய இரயில் உடன்படிக்கையையும் அழைத்துப் பார்க்க

வேண்டுமென்று எனக்கு ஓர் ஆசை. நம்முடைய வீட்டில் கட்டிலும் மெத்தையும் போட்டுக் கொண்டு பெரிய மின் விசிறிக் காற்றின் கீழே சொகுசாகப் படுத்து உறங்குகிற பல நாட்களில் தூக்கமே வராமல் நாம் தவிப்போம். ஒரு வசதியுமில்லாமல் மற்றவர்களின் வேர்வை நாற்றமும், மூச்சுக் காற்றும் நிறைந்துள்ள இரயில் பெட்டியின் மூன்றும் வகுப்புக் கூட்டத்திலோ கிடைக்கிற இடத்தைப் பிடித்துக் கொண்டு தூக்கம் நம்மிடம் பேயாய்ப் பறந்து வரும்.

'போட்டியும், நெருக்கடியும், மண்டிக் கிடக்கிற இந்த உலகத்தில்தான் சுகமும் இருக்கிறது' என்ற அநுபவத்தை இரயில் பயணத்தின் போது நீங்கள் உணர முடியும். அந்த அநுபவம் உங்கள் வாழ்க்கைக்கு ஒரு பாடம்.

இரயில் பயணத்தின் போது ஆரம்பத்தில் எதிரிகளாகச் சந்தித்தவர்கள் கடைசிவரை எதிரிகளாகவே இருப்பார்கள் என்பது உறுதியில்லை. நண்பர்களாகச் சந்தித்தவர்களும் அப்படித்தான். இரயில் பயணம் சுகமும், துக்கமும், சுகதுக்கத்தில் அடங்காத இன்னும் பல்வேறு உணர்வுகளும் கலந்த ஓர் அநுபவம். இந்த அநுபவத்தை எப்படி எடுத்துக் கொள்வது என்பது அவரவர்கள் மனோபாவத்தைப் பொறுத்தது.

## சுமைகளும் கவலையும்

சுமைகளைப் பொறுத்த மட்டில் உங்கள் அநுபவம் எப்படியோ? பயணம் செய்யும் போது கூட்டிலிருந்து விடுபட்டுப் பறக்கும் பறவையைப் போலப் பிணிப்பற்று விட்டு விடுதலையாகிச் செல்ல வேண்டுமென்பது என் ஆசை. பெட்டியையும், படுக்கையையும் தான் இராப் பட்சமாகச் சுமக்க வேண்டியிருக்கிறது. பெட்டி படுக்கைகளைத் தவிர ஒரு பெரிய பங்களாவையும், வழக்கமான சௌகரியங்களையும் போகிற இடத்துக்கும் அப்படியே சுமந்து கொண்டு போவது போல் பிரயாணம் போகிறவர்களைக் கண்டால், 'ஐயோ; பாவம்! கைதிகள்'– என்று சொல்லத் தோன்றும். பிரயாணத்தின் போது அதிகமான சுமைகளே அதிகமான கவலைகள். அதிகச் சுமைகளோடு பிரயாணம் போகிறவர்களுக்குப் புறப்படும் போது கவலை; போய்ச் சேர வேண்டிய இடத்தில் போய் இறங்கும்போது கவலை. புறப்படும்போது எல்லாச் சாமான்களையும் ஏற்றியாயிற்றோ இல்லையோ என்று கவலை. போய்ச் சேர்ந்த பின்பு ஏற்றிய எல்லாச் சாமான்களையும் ஒன்று விடாமல் இறக்கியாயிற்றோ, இல்லையோ என்று கவலை.

எந்த விதத்திலுமே கவலையில்லாமல் இரயில் பயணத்தை அநுபவிக்க வேண்டுமானால் நம்மைச் சுற்றியோ நம் மனத்தைச் சுற்றியோ சுமைகளோ, பாரமோ இருக்கலாகாது. இரயிலின் பலகணிக்கு அப்பால் தென்பட்டு விரைகிற ஒவ்வொரு மரத்தையும், செடியையும், கொடியையும், தந்திக் கம்பத்தையும், ஒவ்வோர் அற்புதமாகவும், அதிசயமாகவும், பாவித்துக் கொண்டு புதிய ஆர்வத்தோடு அவற்றைக் காணும் உல்லாசமான உள்ளம் நமக்கு வேண்டும். பயணத்தை ரசிப்பதற்கு இது ஒரு நல்ல வழி.

வழக்கமான உணவு, வழக்கமான சௌகரியங்கள், இவைகளை ஓரளவுக்கு விட்டுக் கொடுத்தால்தான் இரயில் பயணத்தில் சுகம் காண முடியும். நம்முடைய இரயில் பயணத்தில் போகிற வழியில் நமக்கு என்னென்ன கிடைக்குமோ, அவற்றைக் கொண்டு நம் தேவைகளைத் திருப்தி செய்து கொள்ள வேண்டும். நமக்கு என்னென்ன கிடைக்க வேண்டுமோ அவை யெல்லாம் கிடைக்கவில்லையே என்று கிடைக்காதவற்றை எல்லாம் எண்ணி ஏங்கக் கூடாது. போய்க் கொண்டிருக்கிற வழியில் என்னென்ன கிடைக்குமோ, அவற்றைக் கொண்டு திருப்திப் படுவதும், என்னென்ன கிடைக்கவில்லையோ அவற்றை நினைத்து அதிருப்திப்படாமையும் தான் இரயில் பயணம் சுவாரசியமாக அமைவதன் இரகசியம். இந்த இரகசியத்தைத் தெரிந்து கொண்டு பயணம் செய்தால் ஒவ்வொரு பயணமும் ஓர் உல்லாச யாத்திரைதான்.

## நாள் கணக்கில்

சென்னையிலிருந்து, டில்லி, கல்கத்தா, பம்பாய் போன்ற நீண்ட தொலைவிலுள்ள நகரங்களுக்குப் பயணம் செய்கிறவர்கள்,- பயணம் முடிந்து இரயிலிலிருந்து கீழே இறங்கும் போது குடித்தனம் மாற்றிக் கொண்டு வேறு வீட்டுக்குப் போவது போன்ற உணர்ச்சியை அடைந்திருப்பார்கள். ஜி. டி.

நாயுடு போன்ற விஞ்ஞான மேதைகள் ஒரு பெரிய புத்தகத்தைப் படித்து முடிப்பதற்காகவே நீண்ட பயணம் ஒன்றை ஏற்படுத்திக் கொள்வது உண்டாம். சிலருடைய மனப்பான்மைக்குப் பிரயாணத்தின் போது படிப்பது மிகவும் பிடிக்கும்.



இன்னும் சிலருடைய மனப்பான்மை பிரயாணத்தின் போது பிரயாணத்தைத் தவிர வேறு எதையும் படிக்கக் கூடாது என்பது போல இருக்கும். இவர்களைத் தவிர வேறு சில விநோதமான பிரகிருதிகளும் உள்ளனர். 'பிரயாணத்தின் போது புத்தகங்களையும், பத்திரிகைகளையும் படிப்பதைத் தவிர தங்களுக்கு வேறு எதுவுமே வேலை இல்லை' என்று சக பிரயாணிகள் கற்பனை செய்து கொள்ளும் அளவுக்கு ஒவ்வொரு நிலையத்தில் இரயில் நிற்கும் போதும் பரபரப்போடு புத்தகங்களும் பத்திரிகைகளும் வாங்கிக் குவித்துக் கொண்டிருப்பர். ஆனால் ஒன்றைக் கூடப் படிக்க மாட்டார்கள். படிப்பதற்குப் பொறுமையும், இருக்காது இவர்களுக்கு. அக்கம் பக்கத்திலுள்ளவர்கள் இரவல் கேட்டாலும் கொடுப்பதற்குச் சிரமப் படுவார்கள்.

இன்னும் சிலர் இரயில் பயணத்தை வேறு விதமாக அநுபவிப்பார்கள். உரித்து ஒவ்வொரு சுளையாகச் சாப்பிடுவதற்கு ஏற்ற பழங்களை வாங்கிப் பக்கத்தில் குவித்துக் கொண்டு மெல்ல நிதானமாகத் தோலை உரித்துச் சுளையை உரித்து அநுபவித்துச் சாப்பிட்டுக் கொண்டே தாங்கள் சாப்பிடுவதனால்தான் இந்த இரயிலே ஓடுகிறது என்பதைப் போன்ற கர்வத்தோடு பயணம் செய்வார்கள். மற்றும் சிலருக்கு இரயிலில் சீட்டு விளையாடுவது பிடிக்கும். அரசியல் பிரச்னைகளைக் காரசாரமாகப் பேசி விவாதிப்பது சிலருக்குப் பிடிக்கும்.



இரயிலில் பிரயாணம் செய்து கொண்டே இரயில் விபத்துக்களைப் பற்றிப் பேசிக் கொண்டு போவதை விரும்புவார்கள் சிலர். இரயில் பயணத்தின் போது மட்டும் மூக்குக்கு மேல் கோபம் வருவது சிலருடைய வழக்கமாயிருக்கும்.

வடக்கே சில நீண்ட தூர இரயில்களில் பயணம் செய்யும் போது நல்ல சாப்பாட்டுக்கும் நல்லகாப்பிக்கும் திண்டாட வேண்டியிருக்கும். இரயில் பயணத்தை அநுபவிக்க வேண்டுமானால் நமக்கு வேண்டியதையே எதிர்பார்த்துத் தவிக்காமல் போகிற வழியில் கிடைப்பதை ஏற்கப் பழகிக் கொள்ள வேண்டும் என்று முதலில் கூறியது இதற்காகத்தான். மற்றவர்களுடன் எந்தக் காரணத்துக்காவது சண்டை போட வேண்டுமென்ற உத்வேகமும் இரயில் பயணத்தின் போது சிலருக்கு ஏற்படும். ஆனால் இந்தமாதிரி ஆட்கள் யாருடன் சண்டைக்குப் போகிறார்களோ அவர்களும் இதே உத்வேகமுள்ளவர்களானால் இரயில் பெட்டி இரண்டுபட்டுப் போகும்.

## பயணம் இன்பம்

இரயில் பயணம் என்பது அதை நிர்வாகம் செய்கிறவர்களுடைய நோக்கிலும், அதை அநுபவிக்கிறவர்களுடைய நோக்கிலும் விமர்சனத்துக்குரிய அம்சமாகி வந்தபோதிலும் இரயிலில் இன்னும் பயணம் செய்து கொண்டுதான் இருக்கிறோம். அசௌகரியங்கள் இருந்தாலும் அதனிடையே பயணம் செய்வது ஒரு சௌகரியம்தான். இந்த இரயில் பயணம் இருக்கிறதே: அதைச் சௌகரியம் என்பதா, அசௌகரியம் என்பதா, என்று முடிந்த முடிவாகச் சொல்லி விட முடியாது. 'இரயில் உறவு' என்று நிலையாமையை விளக்குவதற்கு ஒரு தத்துவம் இருப்பதைப் போலவே 'இரயில் சண்டை' என்று விரைவில் மறைந்து விடுகிற பகைமையைக் குறித்தும் ஒரு தத்துவம் சொல்லலாம்.

இந்த நூற்றாண்டில் பிரயாணமும் அதற்கான நல்வசதியுமே மனிதனுடைய தேவைகளில் இன்றியமையாததாகி விட்டன, ஜெட் விமானத்தையும், ராக்கெட்டுகளையும் விட வேகமாகச் செல்ல வல்ல நவீன சாதனங்கள் உலகத்துக்குக் கிடைத்தாலும் பிரயாண அவசரம் என்பது இருந்தே தீரும். அந்தந்த நிலைக்கு ஏற்ப ஏதாவது ஒரு விதத்தில் அவசரம் இருந்தாலும், பதற்றங்கள் இருந்தாலும், பரபரப்பு இருந்தாலும் பயணம் ஓர் இன்பம். அந்த இன்பத்தை உணர்ந்து அநுபவிக்க உல்லாசமான மனம்வேணும். கிடைக்கிற சௌகரியங்களைப் பெரிதாக மதித்து ஏற்றுக் கொள்கிற திருப்தி மிக மிக முக்கியமாக வேண்டும். உலகத்தை அப்போதுதான் பிறந்து பார்ப்பது போன்ற புதுமைத் தாகத்தோடு பார்க்கிற ஆர்வமும் வேண்டும். நீங்கள் நிறையப் பயணம் செய்து அநுபவஸ்தராயிருந்தால் அப்படி அந்தப் பயணங்களால் அநுபவ காரணம் என்ன என்பதைப் பற்றியாவது சற்றே சிந்தியுங்கள்.



# கால் பந்தாட்டம் வளர்கிறது

குண்டுமணி

கிறிஸ்து பிறப்பதற்கு இருபத்தைந்து நூற்றுண்டுகளுக்கு முன் சீனுவில் ஹான் வம்சம் இருநூறு வருஷங்கள் ஆட்சி புரிந்து வந்தது. கலைகளை வளர்ப்பதில் இந்த ஹான் வம்சம் முன் நின்றது. அரசரின் பிறந்தநாள் வைபவத்திலே இரண்டு மூங்கில் தடிகளை அலங்காரங்கள் செய்து நிறுத்தி வைத்து, இவ்விரண்டு மூங்கில் தடிகளுக்குமிடையில் ஒரு வர்ணப் பட்டு வலையை இணைப்பார்கள். அந்தப் பட்டு வலையின் நடுவிலே ஓர் அடி சுற்றளவுள்ள ஒரு துவாரமிருக்கும். இரு போட்டி கோஷ்டிகளாகப் பிரிந்து நிற்கும் திறமை மிக்க ஆட்டக்காரர்கள் ஒரு பந்தை அந்தத் துவாரத்தின் வழியாக அடிக்க முயலுவார்கள். அந்த முயற்சிக்கு விருவிருப்பை யூட்டப் பல பரிசுகளும் உண்டு. ஆனால் தோல்வி யுற்றவர்களைச் சும்மாவிட மாட்டார்கள். அவர்களுக்குக் கடுமையான தண்டனை கிடைக்கும். இந்த விளையாட்டுக்கு ட்ஸுசூ என்று பெயர். உதை பந்து என்று இதற்கு அர்த்தம்.

பழங்காலத்திலே ஜப்பானியர்களும் கால் பந்தாட்டம் மாதிரி ஓர் ஆட்டத்தை ஆடியிருக்கிறார்கள். கிறிஸ்து பிறப்பதற்கு ஐந்து நூற்றுண்டுகளுக்கு முன் ஒரு சதுரமான மைதானத்தில் எட்டுப் பேர்கள் ஒருவருக்கொருவர் பந்தை அடித்துக் 'கெமாரி' என்னும் ஆட்டத்தை அமுலுக்குக் கொண்டு வந்தனர். மைதானத்தின் ஒவ்வொரு மூலையிலும் ஒவ்வொரு வித மரத்தை நிறுத்திவைத்திருப்பார்கள். கெமாரி ஆட்டம் மதக்கோட்பாடுகளுடன் கூடிய ஆட்டமாக இருந்தது.

ரோம சாம்ராஜ்யத்திலே ஹார்பஸ்டம் என்னும் விளையாட்டு முன்னணியில் இருந்தது. இரண்டு கோஷ்டிகள் நீண்ட சதுர மைதானத்தில் ஹார்பஸ்டம் விளையாட்டை ஆடின. இந்த மைதானத்தின் இரு கோடியிலும் 'கோல்' கோடுகளும் மைதானத்தின் நடுவே ஒரு கோடும் வரையப்பட்டிருக்கும். ஒவ்வோர் ஆட்டக்காரரும் பந்தைத் தமக்கு முன்புறமாக உள்ள ஆட்டக்காரருக்கு வீசி யெறிவார். இப்படி முன்னேறிய பந்தை எதிர்க் கோஷ்டியின் கோல் கோட்டைத் தாண்டி யெறிய வேண்டும். எதிர்க் கோஷ்டியினர் பந்து முன்னேறாமல் தடுப்பார்கள்.

1848-ம் வருஷம் கேம்பிரிட்ஜில் சில மாணவர்கள் கால் பந்தாட்டத்தை முறைப்படி ஆட முதல்படியாக வழி முறைகளை வகுத்தனர். ஹாரோவில் பயின்ற பழைய மாணவர்கள் யார்க்ஷயரில் ஷெப்பீல்டு ஐக்கிய கிரிக்கெட் கால் பந்துக் கழகத்தை நிறுவினர். 1855-ம் வருஷம் நிறுவப்பட்ட இந்தச் சங்கம் கால் பந்தாட்டத்தைப் பொறுத்த வரையில் சரித்திர முக்கியத்துவம் வாய்ந்ததாகும். இதன் பின்னர் பல கிளப்புகள் தோன்றின; கால் பந்தாட்டத்தில் பல வழி முறைகளும் உருவாயின.

ரஷ்யாவில் கால் பந்தாட்டப் பந்தயம் ஆரம்பிப்பதற்கு முன்னுல் பத்தே வயதுள்ள இருபது சிறுவர்கள் ஓடி வந்து பந்தய மைதானத்தின் நாலா பக்கங்களிலும் நின்று கொள்வார்கள். பந்தயம் ஆரம்பிப்பதற்கு முன்னுல் தலைசிறந்த கால் பந்தாட்டக் கோஷ்டியினர் பயிற்சிக்காக முதலில் பந்தை அடிப்பார்களல்லவா! அப்பொழுது மைதானத்தை விட்டு வெளியேறும் பந்துகளைத் தேக்கி மைதானத்துக்குள் பந்தை அடிக்க வேண்டிய பொறுப்பு அந்தப் பத்து வயதுச் சிறுவர்களுக்கு. விளையும் பயிருக்கு முளையிலேயே ஆர்வத்தைத் தூண்டி விட்டால் அவை வளர்ந்து செழிக்கக் கேட்பானேன்?

இந்தியாவில் முதன் முதலில் கால் பந்தாட்டத்தை ஆங்கில ராணுவத்தினர் ஆடிக் காண்பித்தனர். பம்பாயில் 1830-ம் வருஷத்தில் இரண்டு ராணுவ கோஷ்டிகளுக்கிடையில் கால் பந்தாட்டப் போட்டி நடைபெற்றிருக்கிறது. இதைக் கண்ணுற்ற இந்தியர்கள் மனத்தில் கால் பந்தாட்டம் ஆட வேண்டும் என்ற ஆசை எழுந்து நாடெங்கும் பரவியது.

சென்னை நகர ஸ்டேடியம் மைதானத்தில் தென்னிந்திய பெ(ன்)ட்ராங்குலர் லீக் கால் பந்தாட்டப் போட்டி இம்மாதம் 1-ந் தேதியிலிருந்து பதினெரு நாட்கள் நடைபெற்றது. இந்தப் போட்டியில் இலங்கையிலிருந்தும் ஒரு கால் பந்தாட்டக் குழு வந்து கலந்து கொண்டது. இலங்கை ஆட்டக்காரர்களுக்கு முன்னேற வாய்ப்பிருக்கிறது என்பது முதல் நாளைவிட மற்ற நாட்களில் அவர்கள் நன்றாக ஆடிக் கொண்டு வந்ததிலிருந்து தெரிந்தது. மைசூர், கேரளா, ஆந்திரக் கால் பந்தாட்டக்காரர்களிடம் நல்ல ஆட்டமிருந்தது. ஆனால் 'கோல்' போட்டு வெற்றி தேடுவதில் அவர்கள் ஒரு சிறிது பின்தங்கியிருந்தனர். சென்னை கால் பந்தாட்டக்காரர்களிடம் ஆட்ட நுணுக்கங்களும், இணைந்து செயலாற்றும் திறனும் மிகுந்திருந்ததால் வெற்றி அவர்களை வந்தடைந்தது. சென்னை கால் பந்தாட்டக் குழுவில் தங்கள் சிறந்த ஆட்டத்தினுல் வெற்றிக்கு வழி வகுத்தவர்களில் தாணுபதி, ராஜாமணி, ஜானகிராமன், சந்திரன், தாஸ் ஆகியோர் முக்கியமானவர்கள்.

இந்தியாவில் பலப் பல இடங்களிலும் பல்வேறு சமயங்களிலும் ஏதாவது ஒரு வெற்றிக் கோப்பைக்காகப் பந்தயம் நடைபெற்றுக் கொண்டே யிருப்பதால் கால் பந்தாட்ட வீரர்களுக்கு நல்ல பயிற்சி கிடைத்துக் கொண்டேயிருக்கிறது. என்றாலும் தெருவிலே கால் பந்தாட்டம் ஆடிப் பலர் வீட்டுக் கண்ணாடி ஜன்னல்களை உடைப்பதிலே சிறுவர்களுக்கு இருக்கிற ஆனந்தம் அவர்களுக்கு உண்டோ?






அத்தியாயம் நான்கு

## மனிதரை மறந்தானில்லை...!

முருகையனின் தொழிலாளித் தோற்றத்தைக் கண்டு விட்டுச் சாந்தா கண் கலங்கவே முருகையன் விளையாட்டாகச் சிரித்தான்.

"சாந்தா! உண்மையிலேயே எனக்கு இந்த வேலை பெருமையும் மகிழ்ச்சியும் தருகிறது" என்றான். "ஏதோ ஒரு புதிய உலகத்துக்கே வந்து விட்டது போலவும், அங்கே நடைபெற்று வரும் அமைதியான தொழில் புரட்சியில் நானும் பங்கு கொண்டிருப்பது போலவும் எனக்குத் தோன்றுகிறது. வேலை கடினமான வேலைதான். ஆனால் அந்த வேலை நேரம் முடிந்துவிட்டால் பிறகு எந்தக் கவலையுமே கிடையாது. உண்மையிலேயே நான் இந்தத் தொழில் செய்வதில் மகிழ்ச்சியடைகிறேன்."

"உங்களுக்குப் பிடித்திருந்தால் சரிதான்; ஆனால் மிகவும் கவனமாக இருக்க வேண்டிய வேலை" என்றாள்.

"எந்த வேலையிலும் கவனம் வேண்டியதுதான். மனிதர்கள் இப்போதெல்லாம் விமானங்களில் பறக்கிறார்கள். புதிய புதிய இயந்திரசாலைகளில் உழைக்கிறார்கள். பஞ்ச பூதங்களையும் ஆட்டிப் படைத்து வெற்றி பெறுகிறார்கள். கரணம் தப்பினால் மரணம் என்பது இப்போது எங்கும்தான் இருக்கிறது" என்றான் முருகையன்.

இருவரும் பேசிக் கொண்டே ஒன்றாக நடந்தார்கள். சாந்தா தன் வீட்டுக்குப் பிரிந்த பாதையில் திரும்பிச் சென்றாள். முருகையன் சுந்தரத்தின் வீட்டை நாடி நடந்தான். சுந்தரத்தின் வீட்டில் ஓர் அறை அவனுக்காக ஒதுக்கப்பட்டிருந்தது. சாப்பாடும் அங்குதான். சுந்தரத்தின் வீடு பெரியதாக இல்லாவிட்டாலும் தனியாக இருந்தது. சுற்றிலும் திறந்தவெளித் தோட்டம். கூடிய வரையில் எல்லா வசதிகளும் அங்கு இருந்தன.

குழாயைத் திறந்து விட்டு வெகு நேரம் நீருக்கடியில் உட்கார்ந்திருந்தான் முருகையன். பாதிச் சோப்புத் துண்டு கரைந்த பிறகுதான் தேகத்திலிருந்த கரித் தூள் ஓரளவு விலகியது. ஒரு துண்டை எடுத்துத் துவட்டி விட்டு, அதை உற்றுப் பார்த்தான். வெள்ளைத் துண்டு கருப்புத் துண்டாக மாறத் தொடங்கியது!

குழந்தைகளிடம் காப்பி, பலகாரம் கொடுத்து அனுப்பினாள் சுந்தரத்தின் மனைவி மீனாட்சி. இன்னும் சுந்தரம் தன்னுடைய அலுவலகத்திலிருந்து வீட்டுக்குத் திரும்பவில்லை. முருகையனுக்

குப்பசி எடுத்ததால் சிற்றுண்டியை வயிறாரச் சாப்பிட்டான். பிறகு வெளியில் கிளம்பினான்.

திட்டமிட்டு உருவாக்கப் பெற்ற சிறு நகரமாக இருந்ததால் காற்றோட்டத்துக்கும் கதிரொளிக்கும் ஒருவிதக் குறைவுமில்லை. ஊருக்குள்ளும் ஊரைச் சுற்றிலும் மரங்கள் நிறைந்திருந்தன. முருகையன் மெதுவாக ஊருக்கு வெளியில் வந்து அங்கு கிடந்த பாறையில் அமர்ந்தான்.

அந்த வேளையில், அந்தச் சூழ்நிலையில் அந்த இடத்தில் அவனுக்கு ஏனோ சித்திராவின் நினைவு வந்தது. இருவரும் திருமணம் செய்து கொண்டு அங்கே உல்லாசமாகப் பொழுது போக்க வருவதாக இருந்தார்கள். ஒரு வாரம் வந்து சுந்தரத்தின் வீட்டில் விருந்தினராகத் தங்கிச் செல்ல முடிவு செய்திருந்தார்கள். திடீரென்று எப்படியெல்லாம் நிலைமை மாறி விட்டது.!

உல்லாசத்துக்காகவோ, ஓய்வுக்காகவோ வர வேண்டிய இடம் இப்போது உழைப்புக்கே உறைவிடமாகி விட்டது. இனி அவளோடு உல்லாசமாகப் பொழுது போக்கவும் முடியாது; ஓய்வாகப் பேசிக் களிக்கவும் முடியாது. முருகையன் பெருமூச்செறிந்தான். எல்லாமே பொய்யாய், பழங்கதையாய், வெறுங் கனவாய்ப் போய் விட்டன!....



முருகையனுக்கு அவள் மீது வருத்தமில்லை; கோபமுமில்லை. நடந்தவை யாவும் நன்மைக்கே என்று பல முறை தனக்குள் சொல்லிக் கொண்டான். என்றாலும் பழகிய பழக்கத்தால் ஏற்பட்ட நினைவுகள் அவனை என்னவோ செய்தன.

மழையோடு மழையாகக் கடற்கரையில் அவளைத் தனியே விட்டுச் சென்றானல்லவா? வெகுநேரம் அப்படியே நின்று கொண்டிருந்து விட்டுச் சொட்டச் சொட்ட நனைந்து கொண்டே முனியாண்டியின் குடிசைக்கு வந்தான் முருகையன். மழை பெய்து தெரு முழுதும் சேறும் சகதியுமாகக் குழம்பிக் கிடந்தது. மெதுவாக வந்து கதவைத் தட்டினான். முனியாண்டிக்கு அவனைக் கண்டவுடன் வியப்புத் தாங்கவில்லை. தன்னுடைய கந்தலை எடுத்து அவனுக்குத் துவட்டி விட்டான். மாற்றுடையைத் தேடித் தடுமாறினான். கடைசியாக முனியாண்டியின் பிடிவாதத்துக்காக, நனைந்த துணியைப் பிழிந்து மீண்டும் அதையே உடுத்திக் கொண்டான் முருகையன்.

''குமரவேலைப் பார்த்தாயா?'' என்று கேட்டான் முருகையன்.

''பார்த்தேனுங்க! நூறு ரூபாய் கைச் செலவுக்குப் பணம் கொடுத்து, வேலையை விட்டு நீக்கிட்டாருங்க. வேறே எங்கேயாவது பிழைப்புத் தேடிக்கச் சொன்னார்.''

முருகையன் எதிர் பார்த்த விஷயம்தான்

அது. ஓர் உயிரைக் கொன்று விட்டு, அதற்காக ஒருவனை வேலையை விட்டும் நீக்கி விட்டு, இரண்டுக்குமாகச் சேர்த்து நூறு ரூபாய் பணம் கொடுத்து விட்டார்! தம்முடைய மனசாட்சித் தொல்லையிலிருந்து மீள்வதற்காகக் கொடுக்கப்பட்ட பணமோ, அல்லது லஞ்சமாக நினைத்து வஞ்சிப்பதற்குச் செய்த ஏற்பாடோ தெரியவில்லை.

''சரி, முனியாண்டி! இப்போதைக்கு இந்தப் பணத்தை வைத்துக் கொண்டு எப்படியாவது குழந்தைகளைப் பார்த்துக் கொள். நானும் இனிமேல் வெளியூருக்குக் கிளம்பப் போகிறேன்.''

''ஐயா!'' என்று பதறினான்.

''கவலைப்படாதே! உன் வீட்டுக் காரிக்குக் கொடுத்த வாக்கு எனக்கு நினைவிலிருக்கிறது. ஊருக்குப் போய் உனக்குக் கடிதம் எழுதுகிறேன்.''

பிறகு அவனிடம் விடை பெற்றுக் கொண்டு பெட்டிக் கடை நடேசனின் வீடு தேடிச் சென்றான். நடேசனின் வீட்டில் எல்லோருடைய முகமும் வெளுத்திருந்தது. ஏதோ ஒரு பயங்கரமான ஆபத்தை ஒவ்வொரு வினாடியும் அவர்கள் எதிர்பார்த்துக் கொண்டிருந்தார்கள் என்பது தெரிந்தது. நடேசனுக்கும் அவன் தாயார் மனைவி முதலியவர்களுக்கும் முருகையன் ஆறுதல் கூறினான். அன்றிரவு அங்கேயே அவர்களுடன் தங்கினான்; சாப்பிட்டான்.

மறுநாள் பொழுது விடிந்தவுடன் காகிதங்களில் சில மனுக்கள் எழுதி நடேசனிடம் கையெழுத்து வாங்கினான் முருகையன். அதே மனுக்களில் முனியாண்டியையும் வரவழைத்துக் கையெழுத்துப் போடச் செய்தான். எழுதியிருக்கும் விஷயத்தை அவர்களுக்கு விளக்கினான். நடேசன் நிரபராதி என்றும், அந்த விஷயம் முனியாண்டிக்கும் தெரியுமென்றும் மனுக்களில் எழுதப்பட்டிருந்தது.

நடேசனை அழைத்துக் கொண்டு, முன்பு ஒருமுறை தன்னுடைய வியாபார சம்பந்தமாகச் சந்தித்த அதிகாரியைக் காண்பதற்குச் சென்றான். இம்முறை அவனுடைய பெயரைக் குறித்து அனுப்பியவுடன் தாமதமின்றிப் பேட்டி கிடைத்தது. இருவருக்கும் நாற்காலிகளைச் சுட்டிக் காட்டி விட்டு, வந்த காரியத்தை விசாரித்தார் அதிகாரி.

''இரண்டு விஷயங்களுக்காக உங்களைப் பார்க்க வந்திருக்கிறேன்: முதல் விஷயம் இதுதான்'' என்று, தான் சொந்தமாக எழுதி வைத்திருந்த மனுவை நீட்டினான். அதைப் படித்துப் பார்த்துவிட்டுத் திடுக்கிட்டார் அதிகாரி.

''ஆமாம், எனக்குக் கொடுத்திருக்கும் விற்பனை அனுமதியைத் தயவுசெய்து

ரத்து செய்து விடுங்கள். இனி நான் அதைக் கவனிக்கப் போவதில்லை.''

காரணத்தைக் கேட்டார் அதிகாரி. தம்முடைய உத்தியோக தோரணையில் என்று இல்லாமல், அவனிடம் பரிவு கொண்டவர் என்ற முறையில் விசாரித்தார். நடந்த விஷயங்களைக் கூறி முடித்தான் முருகையன். ''இனி நான் சென்னையில் இருக்கப் போவதில்லை; எனக்குச் சம்பந்தமில்லாத தொழில் என் பெயரில் நடக்க வேண்டாம்.''

ஏற்கனவே முருகையனைப் பற்றி உயர்வாக நினைத்திருந்தவர் அவர். இப்போது முன்னிலும் ஒரு மடங்கு அவனிடம் பற்றுதல் ஏற்பட்டது.

''அடுத்த விஷயம் இந்த நடேசனைப் பற்றியது. இதற்கும் தங்கள் இலாகாவுக்கும் தொடர்பு இருக்குமோ என்னவோ. ஆனால் உங்களைத் தவிர எனக்கு வேறு யாரையுமே தெரியாதென்பதால் உங்களிடம் வந்திருக்கிறேன். நீங்கள் இவருக்கு உதவி செய்ய முடிந்தால் அது எனக்குச் செய்யும் பேருதவியாகும்.''

நடேசனின் மனுவைப் படித்துப் பார்த்தார் அதிகாரி. அதைப் பற்றிச் சிறிது நேரம் சிந்தனை செய்தார். மிகவும் கடினமான காரியம் என்பது அவர் முகத்திலிருந்து தெரிந்தது.

''முதலில் இது என்னுடைய இலாகா சம்பந்தப்பட்ட விஷயமில்லை. அடுத்தபடி இதில் எவ்வளவோ சங்கடமான நுணுக்கங்கள் எல்லாம் இருக்கின்றன. இது சம்பந்தமானவர்களிடம் சொல்லிப் பார்க்கிறேன்.''

''சட்ட நுணுக்கங்களைப் பற்றி எனக்குத் தெரியாது. ஆனால் நல்லவர்களையும் நல்ல செயல்களையும் காப்பாற்றவும், தீயவர்களையும் தீய செயல்களையும் தடுக்கவுந்தான் சட்டங்கள் இருக்கின்றன என்று நினைக்கிறேன்... நடேசன் ஒரு பாவமும் அறியாதவர்; அவரை நீங்கள்தான் காப்பாற்ற வேண்டும்'' என்றான் முருகையன்.

''முடிந்ததைச் செய்கிறேன்'' என்றார் அதிகாரி.

''நான் ஊரை விட்டுப் போகிறேன். அதனால்தான்....''

''திரும்பவும் சென்னைக்கு வந்தால் என்னை வந்து சந்தியுங்கள்'' என்று சிரித்துக் கொண்டே கூறி விட்டு, ''நடேசனுடைய கவலை இனி உங்களுக்கு வேண்டாம்!'' என்றார் அதிகாரி.

மிகப் பெரிய மனச் சுமை நீங்கியது முருகையனுக்கு. தேவையான போது அந்த அதிகாரியைச் சந்தித்து விவரம் கூறச் சொன்னான் நடேசனிடம். பிறகு விடைபெற்றுக் கொண்டான்.

## அத்தியாயம் ஐந்து

# வாழப் பிறந்தவள்தான்

அடுத்தாற்போல் கலைஞன் குருசாமியையும் சந்தித்து அவனிடம் விவரங்களைக் கூறி விட்டு, கடைசியாகச் சாந்தாவைப் பார்க்க நினைத்தான் முருகையன். குருசாமியின் அறைக்குச் சென்றபோது அங்கே அவனுடைய நாடக ஆசிரிய நண்பனைத்தான் காண முடிந்தது. விவரம் விசாரித்ததில் குருசாமி அப்போது தனி வீட்டில் குடியும் குடித்தனமுமாக மனைவியோடும் குழந்தையோடும் இருப்பதாய்க் கூறினான் நண்பன்!

''என்ன! மனைவியும் குழந்தையுமாகவா?''

''ஆமாம், இன்றைக்குத்தான் குழந்தைக்குப் பெயர் சூட்டு விழா! ஏன், உங்களுக்கு அவர் சொல்லவில்லையா? நான் இப்போது அந்த விருந்துக்குத்தான் புறப்பட்டுக் கொண்டிருக்கிறேன். நீங்களும் வருகிறீர்களா?''

குருசாமியின் விஷயம் புரியாத புதிராக இருந்தது முருகையனுக்கு. முன்பு சுகுணா அவன் மீது அன்பு கொண்டிருந்ததும், அதை அவன் தெரிந்து கொள்ளாதவன் போல் நடித்ததும் முருகையனுக்குத் தெரியும். பின்னர் அவள் குருசாமியிடம் கோபித்துக் கொண்டு சென்று விட்டாள் என்பதையும் வேறொருவனுடன் வாழ்ந்து வந்தாள் என்பதையும் குருசாமியிடமிருந்தே கேள்வியுற்றிருந்தான். வேறொரு பெண்ணை அவன் மணந்துகொண்ட செய்தியோ அவன் தந்தையான செய்தியோ முருகையனுக்குத் தெரியாது.

''சரி, என்னை அவர் அழைக்காவிட்டாலும் நானாகவே விருந்துக்கு வருகிறேன்'' என்று நாடக நண்பனுடன் புறப்பட்டான் முருகையன்.

ஏற்கனவே ஐந்தாறு பேர் குருசாமியின் வீட்டில் கூடிக் கலகலப்பாகப் பேசிக் கொண்டிருந்தார்கள். திண்ணையில் பாய் விரிக்கப் பட்டிருந்தது. வெற்றிலை பாக்குத் தட்டை மத்தியில் வைத்துக் கொண்டு சுற்றிலும் மற்றவர்கள் அமர்ந்திருந்தார்கள். ஓர் ஓரமாகச் சின்னஞ்சிறு பெண் குழந்தையொன்று கைகளையும் கால்களையும் ஆட்டிக் கொண்டு கிடந்தது.

நாடக ஆசிரியனுடன் முருகையனையும் ஒன்றாய்க் கண்டவுடன் திகைத்துப் போய் விட்டான் குருசாமி. திடீரென்று எழுந்து முருகையனின் கரங்களைப் பற்றிக் கொண்டான். எதிர்பாராத தர்மசங்கடத்தில் அகப்பட்டுக்கொண்டவன் ஒரு கணம் விழித்துவிட்டு, ''என்னை நீங்க மன்னிச்சுக்கணும் அண்ணா!'' என்றான். ''உங்களைத்தான் நான் முதல் முதலிலே கூப்பிட்டிருக்கணும். ஆனால், அந்த அளவுக்கு எனக்குத் துணிவு கிடையாது. நீங்க ஏதாவது நினைச்சுக்கிட்டா என்ன செய்யறதுன்னுதான்..''

மேலே பேசத் தெரியாமல் தயங்கினான் குருசாமி. தலையைக் கீழே குனிந்து கொண்டான். முருகையனிடம் முகம் கொடுத்துப் பேசுவதற்கு அவனுக்குத் தெம்பு வரவில்லை.

''என்ன விஷயம்?''

''எல்லாம் உங்களிடம் விவரமாய்ச் சொல்கிறேனண்ணா!'' என்று சொல்லி விட்டு, குழந்தையை எடுத்து முருகையனின் மடியில் விட்டான். அதே சமயத்தில் ஜன்னலுக்குப் பின்னாலிருந்து ஒரு முகம் தெரியவே, எதேச்சையாகத் திரும்பிப் பார்த்தான் முருகையன். சட்டென்று தன்னை மறைத்துக் கொண்டாள் சுகுணா. என்றாலும் அவள் சுகுணாதான் என்பது முருகையனுக்குத் தெரிந்து விட்டது.

கூடியிருந்த குருசாமியின் நண்பர்கள் மெல்ல எழுந்து அடுத்த திண்ணைக்குச் சென்றார்கள். நடந்தது முழுவதையும் வெட்கித் தலைகுனிந்தபடியே குருசாமி முருகையனிடம் சொல்லி முடித்தான். முருகையனுக்கோ குருசாமி செய்தது தவறாகவே தோன்றவில்லை.

''இதில் நீங்கள் வெட்கப்படுவதற்கோ தயங்குவதற்கோ ஒன்றுமில்லை, குருசாமி! துணிவோடு எது நன்மையென்று உங்களுக்குத் தோன்றியிருக்கிறதோ அதைச் செய்திருக்கிறீர்கள். நீங்கள் யாருக்கும் இதனால் கெடுதல் செய்யவில்லையே? அதற்கு மாறாக, இனி வாழவே முடியாத ஒரு பெண்ணுக்கு வாழ்க்கையை அல்லவோ கொடுத்திருக்கிறீர்கள்!''

''அண்ணா! நான் செய்ததை நீங்கள் ஒப்புக் கொள்வீங்கன்னு நினைக்கவே இல்லையண்ணா. ஏதோ எதிர்பாராமல் ஒரு நெருக்கடி வந்தது. அதைச் சமாளிக்கறதுக்காக இப்படிச் செய்திட்டேன். நாலு பேர் என்னைத் தூற்றத்தான் செய்வாங்க. செய்திட்டுப் போகட்டுமே! என்னைப் போலவே மற்றவங்களும் கூடிய வரையிலே அவளைக் குறை சொல்லாமல் இருந்தால் போதும்.''

முருகையன் குருசாமியின் நடவடிக்கையினால் சிறிதும் அதிர்ச்சி



உபாத்தியாயர்: டேய்! எதைக் கேட்டாலும் தெரியாதுன்னு சொல்லிவிடுவாயே! நான் உனக்குத் தெரிந்த கேள்வியா கேட்கிறேன் சொல்லு. 'தெரியும்' என்ற சொல்லுக்கு எதிர்ப்பதம் என்ன?

மாணவன்: தெரியாது சார்!

உபாத்தியாயர்: கரெக்ட்!

யடையவில்லை. சமூகம் தனது ஒழுக்கத்தையும் பண்பாட்டையும் கட்டிக் காத்துக் கொள்வதற்காகத்தான் சில கடுமையான சட்டதிட்டங்களை வகுத்து வைத்திருக்கிறது. அவ்வளவு கடுமையான கட்டுக் காவல்களை அது ஏற்படுத்தியிருக்கா விட்டாலும் அது தன்னை இவ்வளவு தூரம் வேலியிட்டு வளர்த்துக் கொண்டிருக்க முடியுமா என்பது சந்தேகமே. என்றாலும் எதற்குமே சில விதி விலக்குகள் உண்டல்லவா? குருசாமியின் குடும்ப வாழ்க்கையை அந்த வகையில் சேர்த்து அதை வரவேற்றான் முருகையன்.

அவனுடைய மடியில் கிடந்த குழந்தை வீறிட்டழுதது. வீட்டுக்குள்ளிருந்து ஒரு பாட்டிக் கிழவி வந்து அதை மெல்ல எடுத்து அணைத்துக் கொண்டு சென்றாள். சற்று நேரத்துக்கெல்லாம் சாப்பாடு தயாராகி விட்டது என்ற அழைப்பும் வந்தது. எல்லோரும் எழுந்து சென்று இலைகளின் முன்னால் அமர்ந்தார்கள்.

கருணாவும் பாட்டியும் சேர்ந்து கொண்டு முதல்தரமான விருந்து தயாரித்திருந்தார்கள். கருணாவே வந்திருந்து எல்லோருக்கும் பரிமாறினாள். பேச்சும், சிரிப்பும், கலகலப்புமாக நண்பர்கள் வயிறாரச் சாப்பிட்டார்கள். முருகையனும் கவலைகளையெல்லாம் மறந்து அவர்களுடைய மகிழ்ச்சியில் தன்னை மறந்தான்.

உணவு முடிந்தவுடன் மீண்டும் ஆண் பிள்ளைகள் திண்ணைக்கு வந்தார்கள். முருகையனிடம் அவனுடைய கல்யாண விருந்தைப் பற்றி உற்சாகத்துடன் கேட்டான் குருசாமி. 'சித்திரா அண்ணி'யைப் பற்றி ஆர்வத்துடன் விசாரித்தான். முருகையனின் மழுப்பல்களுக்குக் குருசாமியால் உண்மையான காரணம் தெரிந்து கொள்ள முடியவில்லை. வெட்கப் பட்டுக் கொள்கிறான் என்ற எண்ணம் அவனுக்கு.

நண்பர்களின் கலகலப்புக்கிடையே, பரபரப்புடன் வெளியில் வந்து பாட்டி குருசாமியிடம் என்னவோ கூறினாள். அவசரமாக உள்ளே ஓடினான் குருசாமி. உடனே அவன் அழுகையும் தேம்பலுந்தான் வீட்டுக்குள்ளிருந்து கேட்டன.

''அடி, பாவி! கருணா! மோசம் செய்திட்டியே! மோசம் செய்திட்டியே!.... கருணா! கருணா!''

எல்லோரும் உள்ளே எழுந்து ஓடினார்கள். குருசாமி சாப்பிட்டுச் சென்ற எச்சில் இலையில் ஒரு வாய்ச் சோற்றை எடுத்துத் தின்று விட்டு, சாப்பிட்ட கையுடன் இலையருகில் சுருண்டு கிடந்தாள் கருணா. அவளுடைய விழிகள் செருகியிருந்தன. மற்றொரு கையில் ஓர் கடிதம் இருந்தது.

குருசாமி அவளைப் பேச வைப்பதற்கு எவ்வளவோ முயன்று பார்த்தான். அவளுடைய விழிகள் மீண்டும் அசையக் கூடுமென்று நம்பினான். எல்லாவற்றுக்கும் அவளுடைய இடது கையிலிருந்த கடிதம் பதில் கூறியது.

''என்னுடைய தெய்வமே,

நான் முற்பிறவியிலேயே பெரும் பாவம் செய்திருக்கிறேன். இல்லாவிட்டால் உங்களைப்போல் ஓர் உத்தமருடன் வாழ்வதற்குப் பாக்கியம் கிடைத்திருந்தும் அதற்காகச் சிறிது காலம் பொறுத்திருக்காமல் இப்படி அவசரப் பட்டிருப்பேனா? நான் மதி கெட்டு மயங்கிப் போனவள். விதியும் எனக்குச் சதி செய்து விட்டது.

உங்களுடைய முடிவு உங்களுடைய தியாக சிந்தையின் முடிவு. நீங்கள் எவ்வளவு உயர்ந்தவர் என்பதை இதனால் நிரூபித்து விட்டீர்கள். ஆனால் இவ்வளவு உயர்ந்த மனிதருடன் வாழ்வதற்கேற்ற அருகதை எனக்குச் சிறிதாவது இருக்க வேண்டாமா? நாளைக்கு என்னைத் தூற்றுகிறவர்கள் கருணா என்ற யாரோ ஒரு பெண்ணைத் தூற்ற மாட்டார்கள். ஓர் உத்தமரின் மனைவியை, உயர்ந்த மனிதரின் துணைவியை அவர் பெயரையும் சேர்த்து வைத்துத் தூற்றுவார்கள்.

ஒரு பாவத்தைச் செய்து விட்ட நான், மறு பாவத்துக்கும் ஆளாகி உங்கள்

பெயரைக் களங்கப் படுத்த வேண்டுமா? நான் உங்களிடம் வசனம் படித்துக் கொண்டவள். அதனால் இவ்வளவாவது எழுதுகிறேன்.

என்னுடைய குழந்தையை உங்களிடம் ஒரு சுமையாக விட்டுச் செல்கிறேன். அது உங்கள் குழந்தையாக வளர்ந்தால் என்னைப் போல் அது வளராது; நான் செய்த தீமையையும் செய்யாது. என்னை மறந்து விட்டு என் குழந்தையை மட்டும் நினைத்துக் கொள்ளுங்கள். பாட்டியும் நீங்களுமாக அவனைக் காப்பாற்றி வளர்த்து, அவனுக்கு வயது வந்தவுடன் உங்களுக்குப் பிடித்த ஒருவனிடம் ஒப்புவியுங்கள்: இன்னும் ஈரேழு பிறவி யெடுத்தாலும் என் நன்றிக் கடனை உங்களுக்குக் கட்ட முடியாது.—நான் வருகிறேன். —சுகுணா''

வாழ்க்கையின் சித்திரங்கள் மாறி மாறிக் கண்ணெதிரில் நடப்பதைக் கண்ட முருகையன், அன்று மாலையே சாந்தாவின் வீட்டைத் தேடிக் கொண்டு வந்தான். அந்த வீட்டில் இப்பொழுது வேறு யாரோ குடியிருந்தார்கள். மற்றவர்களிடமிருந்து விவரமான செய்தியும் கிடைக்கவில்லை. நண்பன் சுந்தரத்தைச் சந்திப்பதற்காக ஆந்திர நாட்டுக்குக் கிளம்பினான். **(தொடரும்)**

# திருட்டைத் தடுக்க..

**சு**ற்றுவட்டாரத்தில் கடலையின் தொல்லை முல்லுகள் அதிகமாயிருந்தன. அகப்பட்டதைச் சுருட்டிக் கொண்டு ஓடி விடுவான் அந்தத் திருடன். நாலாவது மெயின் ரோடு வாசிகள் ஒன்றுகூடி ஒரு முடிவுக்கு வந்தனர். விழிப்புடன் இருந்து வருமுன் காக்க வேண்டும் என்று திட்டம் போட்டது பாதுகாப்புக் கமிட்டி. அதன்படி காவல்காரன் ஒருவனை அமர்த்திக் கொள்வதென்றும் அவன் இரவு நேரங்களில் தெருவில் குறுக்கும் நெடுக்குமாய் நடந்து அறுபது வீடுகளையும் கண்காணிக்க வேண்டும் என்றும் தீர்மானம் கொண்டு வந்து அது ஏகமனதாய் நிறைவேறுவது கண்டு களிப்படைந்தார் அம்பலவாணர். இந்த ஏற்பாட்டின்படி ஒவ்வொரு மாதமும் முதல் தேதியன்று எல்லா வீட்டினரும் இரண்டு ரூபாயைக் காவல்காரனிடம் தந்து அவன் நீட்டுகிற நோட்டுப் புத்தகத்தில் வரவு வைத்துக் கையெழுத்தும் போட வேண்டும்.

அன்று முதல் இரவு நேரங்களில் காவல்காரன் நடக்கும்போது கனமான பூட்ஸ் வழவழப்பான தார் ரோட்டில் டக் டக் கென்று ஒலி எழுப்பும். இரும்புப் பூண் போட்ட தடி டொங் டொங்'கென்று சத்தப் படுத்தும். அம்பலவாணர் அமைதியுற்ற மனத்துடன் இனி அயர்ந்து தூங்கலாம் என்று அகமகிழ்ந்தார். அந்த ஆனந்தமெல்லாம் முதல் தேதி வரையில்தான். இரண்டு ரூபாய் கேட்கக் காவல்காரன் வரும் போது அவர் முகம் அஷ்டகோணலாக இழுத்துக் கொள்ளும். எதற்காக அந்தத் தீர்மானத்தைக் கொண்டு வந்தோம் என்று அலுத்துக் கொண்டு வேண்டா வெறுப்பாகக் கொடுப்பார்.

மூன்று மாதங்கள் உருண்டோடிச் சென்றன. இடையே ஒரு நாள் இரவு சேர்ந்தாற்போல் ஐந்து வீடுகளில் கொள்ளை போய் விட்டது.



நாலாவது மெயின் ரோடு வாசிகள் கதி கலங்கிப் போனார்கள். அம்பலவாணர் வீட்டிலேயே பாதுகாப்புக் கமிட்டி அவசரமாகக் கூடியது. வெள்ளிச் சாமான்கள் எல்லாம் பறிபோய் விட்டனவே என்று பதறினார் அம்பலவாணர். ரோந்து சுற்றிய காவல்காரனே கொள்ளை அடித்திருப்பானோ என்று கூட அவருக்குச் சந்தேகம். ''அவன் அயோக்கியன் என்று அப்போதே நினைத்தேன்; கூப்பிடுங்கள், அவனை விசாரிப்போம்'' என்று ஆக்கிரத்துடன் இரைந்தார் அவர்.

இந்தச் சமயத்தில் தபால்காரர் அமபலவாணரிடம் ஒரு கடிதத்தைக் கொடுத்து விட்டுப் போனார். பிரித்துப் படித்தார் அவர்.

''பாதுகாப்புக் கமிட்டித் தலைவருக்கு,

காவல்காரன் மீது கோபப்பட வேண்டாம். திருடுவதற்குத் தேவையான சாமர்த்தியம் அவனுக்குப் போதாது. நன்றாய்த் தூங்குவதைத் தவிர வேறு எதற்கும் லாயக்கற்றவன் அவன். முதல் தேதியன்று பணம் வாங்க வீடு வீடாய் வருவதோடு சரி. மற்ற நாட்களில் இரவும் பகலும் ஒன்றாய்த் தூங்குவான். 'அப்படியானால் தினம் தினம் ரோந்து சுற்றியது யார்?' என்று கேட்கிறீர்களா? சாட்சாத் இந்தக் கடலைதான்!

இப்படிக்கு,
கடலை.''

இதைப் படித்து முடித்ததும் எல்லோரும் ஏகமனதாய் இன்னொரு தீர்மானத்தை நிறைவேற்றினார்கள். காவல்காரனை வேலையிலிருந்து நீக்கி விடுவது என்பதுதான் அந்தத் தீர்மானம்.

சந்தோஷமாய் விடு திரும்பினார் அம்பலவாணர். சந்தோஷமா? இனி முதல் தேதியன்று காவல்காரன் வீட்டுக்கு வந்து நின்று கொண்டு இரண்டு ரூபாய் தருமாறு அவரைக் கழுத்தறுக்க மாட்டான் அல்லவா?

— சாமா

# எழிலுக்கு ஏற்றது கைத்தறியே

காஞ்சீபுரம், தர்மாவரம், மற்றும்
ஆரணி பட்டு புடவைகள்,
மதுரை சாயம் தோய்த்த
பருத்தி வகைகள், ஜெய்பூர்
சாயம் தோய்த்து பிரிண்ட் செய்த
பட்டு துணிகள்,
சாந்திபூர் பருத்தி துணிகள்,
பெங்களூர், காஷ்மீர் பட்டுகள்,
மத்திய பிரதேசத்திலிருந்து
மஹேஸ்வரி மற்றும்
நாகபுரி சேலைகள்.

**ஹாண்ட்லூம் ஹவுஸ்**
9, ரடன் பஜார், சென்னை-3.
போன் : ஷோரூம்-33405

மற்றும்

221, டாக்டர் தாதாபாய் நௌரோஜி ரோடு,
பம்பாய்-1
2, லின்ட்ஸே தெரு, கல்கத்தா-16
9-ஏ, கான்னுட் பிளேஸ், புது டில்லி.

தலைமை ஆபீஸ் :
அகில இந்திய கைத்தறித் துணிகள்
விற்பனை கூட்டுறவு சங்கம் லிமிடெட்,
ஜன்ம பூமி சேம்பர்ஸ்,
பம்பாய்-1



வசீகரமும், வனப்பும்
ஒருங்கே நிறைந்த கைத்தறி
ஆடைகள் இந்தியாவின்
பல பாகங்களிலிருந்தும்
வருகின்றன.

FDS/HH/5 TH

# கொக்கரக்கோ...



ஹிந்திக் கதை: ராதாகிருஷ்ண　　தமிழாக்கம்: ரா. வி.

எல்லாம் வல்ல இறைவன் எல்லையில்லாப் பெருவெளி படைத்த பெரு மலையில் வாழ்கிறான். அவனை யொட்டிப் பல தெய்வங்கள், காடு கழனிகளைக் காக்கவென்று. எண்ணி முடியாது இந்தத் தெய்வங்களை. பேய்ச்சி ஆயி, மாரி ஆயி, பிடாரி, காளி, காத்தவராயன் — அப்பப்பா! இன்னும் எத்தனை தெய்வங்கள்! உலகம் முழுவதுமே கடவுளர்களால் நிறைந்துள்ளதோ? பூமி, வானம், காற்று எங்கிலுமே தெய்வங்களுக்குத் தங்கு தடை இடையாது. நினைத்த பொழுது நினைத்த இடத்துக்குப் போகலாம். இருள்—ஒளி என்ற வேறுபாடு அவற்றுக்குக் கிடையாது. இரண்டையும் அவை சமமாகவே பாவிக்கின்றன. நிலத்திலும் நீரிலும் மண்ணிலும் விண்ணிலும் அவை ஒரே மாதிரி நடமாடுகின்றன. மலைகளிடையே வெடித்தெழும் ஊற்றுக்களில் நீரை வருவிப்பது யார்? அவற்றை வயல்களில் பாய்ச்சி நல்ல விளைச்சல்களை உண்டு பண்ணுவது யார்? எள்ளுப் பூவுக்கு இத்தனை மஞ்சள் நிறத்தை அளித்ததும் செம்பருத்திப் பூவுக்குச் சிவப்பு நிறத்தை அளித்ததும் யார்? எல்லாம்வல்ல தெய்வங்கள தாமே? அவற்றின் அருளுக்குப் பாத்திரமாகித்தான் பறவைகள் மரக் கிளைகளில் இராப் பொழுதைப் போக்குகின்றன. வன விலங்குகள் மலைக்குகைகளில் வாழ்கின்றன. இத்தெய்வங்களிலே நல்லவையும் உண்டு, தீயவையும் உண்டு.

ஆனால் இப்பொழுதெல்லாம் காலம் மாறி விட்டது. நல்ல தெய்வங்களுக்கு அவ்வளவாகச் செல்வாக்குக் கிடையாது. துஷ்ட தேவதைகளின் கைகளே மேலோங்கி நிற்கின்றன. எங்கிருந்துதான் இல்லாத பொல்லாத நோய்களையெல்லாம் அவை கொண்டு வந்து சேர்க்கின்றனவோ, தெரியாது. உடலின் பூட்டு—முடிச்சுக்களில் எல்லாம் நுழைந்து வலி உண்டுபண்ணுகின்றன. வாத நோயை உண்டுபண்ணி உபத்திரவப் படுத்துகின்றன. பிராயம் முதிர்ந்தவர்களின் இதயத்திலே புகுந்து இருமலையும் காசத்தையும் உண்டு பண்ணுகின்றன. மனிதர்களின் கண்ணுக்குப் புலனாகாத துஷ்ட தேவதைகளின் சிரிப்பு உடலை ஆட்டிப் படைக்கிறது; நடுக்கமுற வைக்கிறது. மலேரியா ஜுரமே வந்து மனிதன் கஷ்டப் படுகிறான்.

துஷ்ட தேவதைகள் கெட்ட கெட்ட கனவுகளாக அனுப்பி வைக்கின்றன. அந்தக் கனவுகளுக்குள்ளேயே தாங்களும் ஒண்டி ஒளிந்து வந்து தாக்குகின்றன. அதுமட்டுமா? வயல்களின் விளைச்சலைக் குறைத்துக் கெடுத்து விடுகின்றன. மழை பொழியாமல் தடை உத்தரவு பிறப்பித்து விடுகின்றன மேகங்களுக்கு. நெல் வயல்கள் 'சூறை' விழுந்து விடுகின்றன. ஐப்பசி மாதங்களில் பசும் புல்லும் எரிந்து கருகி வைக்கோலாகி விடுகிறது. மிருகங்களுக்குத் தீவனம் கிடைப்பதில்லை. கோடை நாட்களில் ஆற்று ஊற்றுக்கள் வறண்டு உலர்ந்து விடுகின்றன. மடுக்கள் காய்ந்து பொய்த்து விடுகின்றன. ஆடு மாடுகள் குடி நீரின்றித் தவித்து மரிக்கின்றனவென்றால் மனிதர்களோ வயிற்றுக் கொடுமை தாளாமல் செத்து மடிகிறார்கள். உயிர்களுக்கு, இல்லாத சிரமங்களையெல்லாம் கொடுத்துக் குற்றுயிரும் குலையுயிருமாக ஆக்குவது இந்தத் துர்த்தேவதைகள்தான்.

எனவே, எந்தத் தெய்வங்களையும் திருப்திப் படுத்துவதற்காக ஆடு, கோழி ஆகியவை காவு கொடுக்கப்படுகின்றன. பன்றிரத்தம் படைத்துப் பூசனை செய்கிறார்கள். இந்தத் தெய்வங்களுக்குக் காவு கொடுத்துக் கொடுத்தே ஆடுகள் அருகி விட்டன. பன்றிகள் கிராக்கியாகி விட்டன. கோழிகள் குறைந்துவிட்டன.

லீடா என்பவன் கிராமத்துப் பூசாரி. அவன் புலால் உண்பதில்லை. மது அருந்துவதில்லை. லாகிரிப் பொருள்களைத் தீண்டுவதில்லை. அவன் இரவு பகல் எந்நேரமும் தான் உண்டு, தன் பக்தி—பூசையுண்டு என்றிருப்பான். அவனது செவ்வரி படர்ந்த கண்கள் உறங்கும் மந்திரங்களை எழுப்பும். அம்மந்திரங்கள் விழிப்புற்று உலகத்தைக் காணும். பூசாரி லீடா தலை முடியை உதறிக் கொண்டு ஆடத் தொடங்கி விடுவான். உள்ளங் காலிலிருந்து உச்சந் தலை வரை அவனைக் குலுக்கிக் குலுக்கிப் போடும். அவன் ஆவேசம் வந்தவனாகி வில்லாக உடலை வளைத்து, தலையைப் பம்பரமாகச் சுழற்றிச் சோடா நாகபுரி வாசிகளைப் பார்த்துக் கூறுவான்:

''ஏ, நாகபுரிக்காரர்களே! பொன்னும் மணியும் குலித்த நமது நாகபுரி எங்கே போய் விட்டது? பொன் மண்ணாகி விட்டது. மணி பனியென மறைந்து விட்டது. நம் நாகபுரி யன்னையின் அங்கங்கள் அனைத்தும் அழுக்காகி விட்டன. நாகபுரியின் கண்களிலிருந்து துளி துளியாக ரத்தம் வடிகிறதே, ஏன் தெரியுமா? பூமியிலே சத்து இல்லை. வானத்திலே மேகம் இல்லை. காடுகளிலே செடி கொடி இல்லை; கீழ்க் காற்று அடித்தும் மழையைக் காணோம்; புவி அன்னையின் மனம் குளிரக் காணோம்; நாகபுரி உயிர்களை இழந்துவிட்டது. அதனால் ஆதிவாசிகளின் மனம் புளித்து விட்டது; உள்ளம் உடைந்து விட்டது. தடி எடுத்தவன் தண்டல்காரன் என்பது போல், அவனவன் தன் மனம் போனபடி செய்கிறான், மக்களை ஆட்டு மந்தையாக மதிக்கிறான். ஓடுங்கள் தம்பி, ஓடுங்கள்! இனி இந்த நாகபுரியில் உயிர் வாழ்வது மெத்தக் கடினம்.''

மக்கள் இச்சூழ்நிலையில் சிக்குண்டு, தன்னம்பிக்கை இழந்து நாலு காசு சம்பாதிப்பதற்காக அயலூர் சென்று விடுகிறார்கள். அஸ்ஸாம், பூடான், வங்காளம் என்று எவரெவருக்கு எந்த இடம் பிடிக்கிறதோ, எங்கு சௌகரியம் இருப்பதாகத் தோன்றுகிறதோ, அங்கு சென்று விடுகிறார்கள். பல்லாண்டுகளாக இப்படியே நடந்து வருகிறது. வயல்களில் விளைச்சல் குறைகிறது..கிராமங்களில் மக்களின் எண்ணிக்கை குறைகிறது. இப்படியாகக் கிராமமே வெறிச்சோடி விடுகிறது.

கிராமத்திலேயே தங்கி விட்டவர்களும்கூட ஒருவரையொருவர் சந்தித்துக் கொள்வதில்லை அவ்வளவாக. அப்படியே சந்தித்துக் கொண்டாலும் பேசிக் கொள்வதில்லை. பேசிக் கொண்டாலும் குறைவாகப் பேசுவார்கள். தங்கள் துரதிர்ஷ்டத்தைப் பற்றிப் பேசுவார்கள். அவர்களுடைய முகத்திலே துர்த்தேவதைகள் எப்பொழுது என்ன துன்பம் விளைவிக்குமோ என்ற கிலியும் அச்சமுமே படிந்திருக்கும். களைப்பு, பசி, பட்டினியினால் வாடிச் சாகிறார்களோ என்று தோன்றும். கண்களில் கவலை படர்ந்திருக்க, விழிகளில் ஏக்கம் சேர்ந்திருக்க, ஒரு வேளை அவர்கள் வாழ்க்கையின் உண்மை நிலையைக் காணாமல் எப்பொழுதுமே கெட்ட கனவுகள் கண்ட வண்ணம் வாழ்க்கையை ஓட்டுகிறார்களோ?

மக்கள் இப்படிப் பீதியுற்றிருக்கும் வேளையில் கிராமத்தில் மரண அமைதி நிலவாமல் வேறு என்ன நிலவுமாம்? இரவு நேரங்களில் காடுகளில் பேய் பிசாசங்கள் கூச்சலிடும் குரல் தெளிவாகக் கேட்கும். ஒருபுறம் பேய்கள் கூச்சலிட்டால், இன்னொருபுறம் நரிகள் ஊளையிடும். கேட்பவர்கள் கதிகலங்கிப் பயந்து சாவார்கள். அவர்கள் உடலிலிருந்து வியர்வை ஆறாகப் பெருகத் தொடங்கி விடும். விசித்திர நிலை, விசித்திர உலகம் என்ற நிலை ஏற்பட்டு விட்டது. சிற்சில சமயம் இரவு நேரங்களில் நட்சத்திரங்கள் கண்ணீர்த் துளியென உதிருவது கூட உண்டு.

ரேம்பா உரான்வ் என்பவனின் பெண்சாதி நோய்வாய்ப்பட்டிருக்கிறாள். அவள் புரண்டு படுத்துக் குடிக்கத் தண்ணீர் கேட்கிறாள். ரேம்பா பேசாமல் எழுந்து சென்று நீர் கொண்டு வந்து தருகிறான். அவள் உள்ளத்திலே ஏதோ ஒரு விஷயம் நெருடுகிறது. வாய் திறந்து சொல்லலாம் என்றால் வார்த்தை வெளி வரவில்லை. அவள் உள்ளத்தைப் புரிந்து கொண்ட ரேம்பா ஏதோ சொல்லி அவளைச் சமாதானப்படுத்த முயல்கிறான். ''ஒன்றுமில்லை. எல்லாம் சரியாகி விடும். நேற்று இரவு நான் ஒரு கனவு கண்டேன். நேற்று முதல்நாள் இரவு காரிருளில் ஏதோ எனக்குப் பளிச்சென்று தெரிந்தது. ஓர் ஒளி வட்டம் மாதிரி. தெரிந்ததும் மறைந்து விட்டது!'' என்கிறான்.

ரேம்பாவின் மனைவி முனகிக் கொண்டே தலையைத் தூக்குகிறாள். நீர் அருந்துகிறாள். பிறகு புரண்டு படுக்கிறாள். மிகவும் சன்னமான குரலில், ''நானும்கூட ஒரு கனவு கண்டேன். யாரோ என் காதில் 'வெள்ளைச் சேவல் கொண்டு வா. காவு கொடு' என்று சொல்வது போல் இருந்தது. பிறகு நான் பளபளவென்று பிரகாசமான ஆடைஅணிந்த ஒரு பெண்மணியைக் கண்டேன். அவள் நெற்றியிலே சுட்டி அணிந்து அழகாகத்தோன்றினாள். 'சேவலைக் காவு தர வேண்டும். அதுவும் வெள்ளைச் சேவலாக இருக்க வேண்டும்' என்று சொன்னாள். நீ இல்லாத நேரங்களில் நான் அன்னியக் குரல் ஒன்றைக் கேட்கிறேன். கிறீச்சென்று சில் வண்டுக் குரலில் அவள் என்னதான் சொல்கிறாளோ, விளங்கவில்லை. ஆற்றங்கரையிலிருந்து யாரோ அவளைக் கொக்குப்போல் குரல் கொடுத்துத் தடுக்க முயற்சி செய்கிறார்கள். ஆனால் அவள் காதில் போட்டுக் கொள்வதில்லை. தான் சொல்வதையெல்லாம் சொல்லிக் கொண்டே போகிறாள். அப்படி என்னதான் சொல்கிறாளோ?'' என்கிறாள்.

அவளது மனக் கிலி கண்களில் தெறிக்கிறது. அவள் விழிகள் நிலைக் குத்தலிட்டு நிற்கின்றன. அவன் இன்னும் என்னென்னவோ சொல்ல விரும்புகிறான். தன் மனத்தில் உள்ள முடிச்சை அவிழ்த்து விட வேண்டும் என்று நினைக்கிறான். ஆனால் சொல்லத்தான் முடியவில்லை. அப்படியே மௌன





மாகிப் படுத்தவண்ணம் கூரையைப் பார்க்கத் தொடங்குகிறான். அங்கே கறுப்புக் கறுப்பாக ஒட்டடைகள் ஊசலாடிக் கொண்டிருக்கின்றன. அவற்றோடு நீர் வைக்கும் பழைய கரைக் குடுக்கைகள் இரண்டு மூன்று தொங்கிக் கொண்டிருக்கின்றன.

ரேம்பா யோசனையில் ஆழ்ந்து விடுகிறான். ராங்கி சொன்னது ரொம்ப ரொம்பக் குறைவு என்பதை அவன் அறிவான். இதைக் காட்டிலும் அவள் சொல்ல நினைத்தது அதிகம் என்பதும் அவனுக்குத் தெரியும். ஆயினும் அவன் என்ன செய்வது?

அவனிடம் வெள்ளைச் சேவல் கிடையாது. கிடைக்கக் கூடும் என்ற நம்பிக்கையும் அவனுக்குக் கிடையாது. லோன்ஸ் இட்ரி அல்லது நர்கோபிச் சந்தையிலே ஒருவேளை வெள்ளைச் சேவல் கிடைக்கலாம். ஏன்? கட்டாயம் கிடைக்கும். ஆனால் காசு....? அதுதான் எங்குமே கிடைக்காது! இவ்வாண்டு நெல் விளைந்தது மிகக் குறைவு. கடலைப் பயிரைக் கடும் பனி சூறையாடி விட்டது. கோழி—சேவல் இவற்றின் விலையோ விஷம்போல் ஏறிக் கிடந்தது. முன்பெல்லாம் ஐந்தணாவுக்கு ஒரு சேவல் கிடைத்து வந்தது. இப்பொழுது ஐந்து ரூபாய்க்கு ஒரு ஜோடி கிடைப்பதே குதிரைக் கொம்பு. ஒரு முறை ராணுவத்தினர் வந்து கிராமத்தில் உள்ள கோழிகளை யெல்லாம் தின்று தீர்த்து விட்டுப் போய் விட்டனர். இப்பொழுதோ, போதாக் குறைக்கு ஹபடியா என்னும் இடத்தில்தொழிற்சாலை ஒன்று வேறு தோன்றி விட்டது!

ரேம்பா யோசனையில் மூழ்கி முக்குளித்துக் கொண்டிருந்தான். கண்களுக்கு எதிரே தோன்றிய உலகம் அவன் கண்களுக்குத் தட்டுப்படவே இல்லை. ஒரு வேளை அவன் சம்பந்தப்பட்ட இந்த உலகத்துக்கும் அவனுக்கும் சம்பந்தம் கிடையாதோ?

அவன் மனக்கண்ணெதிரே தெரிந்த உலகம் பயங்கரப் பேய்களும் பிசாசுகளும் நிரம்பியதாக இருந்தது. அங்கே எத்தனை தேடியும் வெள்ளைச்சேவல்ஒன்றுகூடத் தென்படவில்லை.

ரேம்பாவின் மனைவி ராங்கி மீண்டும் தலை தூக்கித் தாகத்துக்குத் தண்ணீர் கேட்கிறாள். ரேம்பா மீண்டும் நீர் எடுத்துத் தருகிறான் அவளுக்கு. அவள் நீர் குடிக்கத் தொடங்குகிறாள். ரேம்பா கம்பீரமான குரலில், ''பதற்றப்படாதே. அன்று நான் கனவு கண்டேன். நீ உன் கூந்தலில் வெள்ளை இறக்கைகளைச் செருகிக் கொண்டு கடைத் தெருவுக்குப் போய்க் கொண்டிருப்பது போல். அதனால் உன் உடல் நிலை சீக்கிரமே குணமாகி விடும்!'' என்கிறான்.

ராங்கி பெருமூச்சு விடுகிறாள். ''அது சரி, ஆனால் வெள்ளைச் சேவல் எங்கிருந்து கிடைக்குமாம்?'' என்று கேட்கிறாள்.

ரேம்பா மீண்டும் யோசனையில் ஆழ்ந்து விடுகிறான். வெள்ளைச் சேவல் எங்கே கிடைக்கும்? உலகத்தில் எங்குமே வெள்ளைச் சேவல் கிடையாதா? அவன் கற்பனைக் கண்களுக்கெதிரே ஒரு வெள்ளைச் சேவல் தோன்றுகிறது. அது இறக்கைகளைப் படபட வென்று அடிக்கிறது. அவனது கற்பனையும் சிறகு விரித்தாடுகிறது. ரேம்பா அதைப் பிடிக்க விரும்புகிறான். ஆனால் பிடிப்பது எப்படி? என்னவானாலும் சரி, ராங்கிக்காக அவன் அதைப் பிடித்துத்தான் ஆக வேண்டும். எங்கிருந்தாகிலும் அவன் ஒரு வெள்ளைச் சேவல் கொண்டு வந்துதான் ஆக வேண்டும்.

வீடாவை உங்களுக்குத் தெரியும். வீடா கிராமத்துப் பூசாரி. கடந்து போன விஷயங்கள் அவனிடம் வருங்காலத்தை உரைத்து விடுகின்றன. அவனுக்கு எல்லாம் தெரியும். பார்க்கப் போனால் அவனுக்குத் தெரியாத விஷயமே ஒன்றுகூடக் கிடையாது. அவனுக்குத் தெய்வங்களின் ஆதரவு உண்டு. அவன் எத்தனையோ தெய்வங்களை வசப்படுத்திவைத்திருக்கிறான். அவன் வசத்தில் இருக்கும் நல்ல தேவதைகள் தீய தேவதைகளின் உபத்திரவத்தைத் தடுத்தாட் கொள்ளுகின்றன. அவன் தேவதைகளைப் பூசை போட்டுத் தருவிப்பது உண்டு. சில சமயம் காற்றிலேறி அவை அவனிடம் வருவது உண்டு. வரும் அந்தத் தெய்வங்களைப் பிறர் பார்க்க முடியாது. ஆனால் வீடா நன்றாகப் பார்ப்பான். நேருக்குநேர் நின்று பேசுவான். அவனுடைய ஆணைகளை அவை நிறைவேற்றும். காதோடு காதாக அவன் அறியாத எத்தனை எத்தனையோ விஷயங்களை அவை அவனுக்குச் சொல்லிச் செல்லும்.

சிற்சில சமயம் அவனுக்கே ஆவேசம் வருவது உண்டு. அவன் மீதே சாமி வரும்போது அவன் வாயிலிருந்து நுரை தள்ளும். உச்சந் தலையிலிருந்து உள்ளங்கால் வரை ஆடும். 'ஹா...ஹா' என்று உரக்கக் கத்துவான். தலையை அவன் அசைக்கும் வேகத்தில் முடி அவிழ்ந்து காற்றில் பறந்து கன பயங்கர உருவத்தை அவனுக்கு அளிக்கும். அப்பொழுது அவன் நா பேசும் திறனை இழந்து விடும். அவன் மீது வந்திருக்கும் 'சாமி' அவன் வாய் மொழியாகப் பேசும். சந்நதம் வந்தவன் மூலமாகத் தெய்வங்கள் எத்தனை எத்தனையோ விஷயங்களைச் சொல்லும். நடக்கும் விஷயங்கள், நடக்காத விஷயங்கள் எல்லாமே சொல்லும். அவற்றில் ஒரு சில அறிவுக்கு எட்டுவதா யிருக்கும். பெரும்பாலானவை எத்தனைதான் மண்டையைப் போட்டு உடைத்துக் கொண்டாலும் புரியாது. வெகு நேரம் வரை 'சாமி' அவன் உடலில் விளையாடும். அப்புறம் தானாகவே மலையேறிவிடும். சாமி மலையேறியதும், வீடா பூசாரி தரையில் தடாலென்று குப்புற விழுந்து விடுவான்; மூர்ச்சையடைந்து விடுவான்.

வெகுநேரம் சென்றபின், விசிறியினால் விசிறி, குளிர் நீரை முகத்தில் அடித்த பின்னரே அவன் மூர்ச்சை தெளியும். கைகால்களை அசைப்பான். அவனுக்கு நன்றாக நினைவு திரும்பி வந்த பின்னரும், அவன் மிகவும் தளர்ந்து சோர்ந்து வாட்டமாகவே காட்சியளிப்பான். சாமி வந்திருந்த பொழுது அவன் என்னென்ன சொன்னான் என்பது அவனுக்கே தெரியாது.

ரேம்பா அவனைத் தேடிச் சென்றபோது அவன் தன் வீட்டு வாசலில் உள்ள இலுப்பை மரத்தடியில் இழிந்த ஈச்சம் பாயைப் போட்டுக் கொண்டு பழைய கம்பளி ஒன்றை இழுத்துப் போர்த்திக் கொண்டு உட்கார்ந்திருந்தான். உட்கார்ந்தபடியே 'யானை யானை' ஆடிக் கொண்டிருந்தான். கண்கள் மூடியிருந்தன. அவன் எதிரே மூன்று சீடர்கள் கையில்

**மெரிட்***

**தையல் மெஷின்கள்**



சுலபமாக

குறைந்த செலவில்

தைப்பதற்கு

**ஸிங்கர்***

கடைகளிலும் மற்றும் அங்கீகரிக்கப்பட்ட

டீலர்களிடம் மட்டுமே கிடைக்கும்

* ஸிங்கர் மானுபாக்சரிங் கம்பெனியின் டிரேட் மார்க்.

---

## புதிய பெரிய டப்பாவில்

# கால்கேட்

# பேபி பவுடர்




அதிகப் பவுடர்...

அழகுச் சிக்கனம்...

புதிய சுலபமாக

அழுந்தும் மூடி!

குழந்தையின் நளினமான

சருமத்திற்கு இதமளிக்கிறது!




ஜலதோஷம் மற்றும் தொண்டைப்புண்ணிலிருந்து பூரண நிவாரணம் பெறுங்கள்
தொண்டைப்புண்ணோ அல்லது திடீரெனத் துவங்கித் தொந்தரவு தரும் ஜலதோஷமோ—'ஆஸ்ப்ரோ'வினால் துரித நிவாரணம் பெறுவதை ஊர்ஜிதம் செய்து கொள்ளுங்கள். உங்களுக்குத் தொண்டைப்புண் இருந்தால், இளஞ்சூடான நீரில் 'ஆஸ்ப்ரோ'வைக் கரைத்து அதனால் கொப்பளியுங்கள். உலகம் முழுவதிலும் லக்ஷக்கணக்கானவர்களுக்கு குடும்ப மருந்தான 'ஆஸ்ப்ரோ' உங்கள் உடலின் நோவுறும் இடங்களில் நேரிடையாக வேலை செய்து நிச்சயமான நிவாரணத்தை அளிக்கிறது. குடும்பம் முழுவதற்கும் உபயோகிக்க 'ஆஸ்ப்ரோ' கைவசம் வைத்திருங்கள்.
'ஆஸ்ப்ரோ'
குடும்பம் முழுவதற்கும் ஏற்றது
'ஆஸ்ப்ரோ' வேலை செய்யும் விதம் :
பொடியாகப் பிரிகிறது:
பரவுகிறது:
நிவாரணமளிக்கிறது:
இளஞ்சிவப்பும் ஊதா நிறமும் கொண்ட சீலிடப்பட்ட பட்டையைக் கேட்டு வாங்குங்கள்
ASPRO
'ஆஸ்ப்ரோ' சாப்பிடுங்கள்
மீண்டும் நிச்சயமாக சுகம் பெறுங்கள்
ஒரு நிக்கோலஸ் தயாரிப்பு

முறம் ஏந்தி அரிசி பொறுக்கியவண்ணம்ஏதோ மந்திரத்தை முணுமுணுத்துக் கொண்டிருந்தார்கள். வீடா எப்பொழுது கண்களைத் திறப்பான், எப்பொழுது நாம் நம் செய்தியைச் சொல்லலாம் என்று எதிர்பார்த்தவண்ணம் ரேம்பா சற்றுத் தள்ளி உட்கார்ந்து கொண்டான். வீடா கண்களைத் திறந்தான். அவன் விழிகள் சிவந்திருந்தன, குங்குமமாக. ரேம்பா தன்னெதிரே கைகூப்பிக் கொண்டு அமர்ந்திருந்ததைக் கண்டு இலேசாகச் சிரித்தான் அவன்.

அந்தச் சிரிப்பின் தோரணை, 'எனக்கு எல்லாம் தெரியும், புரியும்' என்று சொல்வது போல் இருந்தது. அவன் சிரிப்பு பயங்கரமாகத் தோன்றியது ரேம்பாவுக்கு. உள்ளங்காலிலிருந்து உச்சந் தலை வரை ஒரு முறை பரபரப்பு ஏற்பட்டு அடங்கியது.

''பூசாரி ஐயா!'' – ரேம்பா மிகவும் தீனமான குரலில் அழைத்தான்.

''சொல்லு!'' வீடாவின் இந்தச் சொல்லிலே, 'எனக்கு எல்லாம் தெரியும். இருந்தாலும் நீயே உன் வாயினால் சொல்லு' என்னும் பொருள் பொதிந்திருந்தது. தனக்குத் தெரிந்ததெல்லாம் சரிதானா இல்லையா என்பதைச் சரி பார்த்துக் கொள்வதற்காகக் கேட்பது போலும் இருந்தது.

''பூசாரி ஐயா! பத்து நாட்களாக ராங்கிக்கு உடல் நலம் சரியில்லை. அவளைக் குணப்படுத்துவது உங்கள் பொறுப்பு. உடல் சரியானதும் உங்கள் வீட்டு முற்றத்தை மெழுகுவாள், பெருக்குவாள். உங்கள் வயலுக்கு எரு கொண்டு கொட்டுவாள். அவள் உடல் நிலை இப்பொழுது மிகவும் மோசமாக இருக்கிறது!'' என்றான் ரேம்பா.

வீடா பூசாரி ஒரேயடியாகக் கூச்சலிட்டான். ''உடல் நலம் கெடாமல் எப்படி இருக்குமாம்? அவள் அந்த மூங்கில் புதர் பக்கமாகப் போயிருப்பாள். பேய் ஏதாவது அறைந்திருக்கும். ஆமாம், அவள் ஏதாவது கனவு கண்டாளா?'' என்று கேட்டான்.

''கண்டாள்!''

''நீயும் கண்டாயா?''

''கண்டேன்! நீங்கள் சொல்வது முக்காலும் மெய்!''

''கனவிலே என்ன கண்டாய்?''

''வெள்ளைச் சேவல்!''

வீடா பூசாரி உரத்த குரலில், ''கொடு, வெள்ளைச் சேவல் காவு கொடு. உனக்கு இதை விட்டால் வேறு வழி கிடையாது. பேய்ச்சி ஆத்தாவின் பெயரைச் சொல்லி, வெள்ளைச் சேவல் கொண்டு வந்து காவு கொடு! இல்லை, இல்லை. நான் சொல்வதைக் கேளு. சேவலை என்னிடம் கொண்டு வா. என் கண்ணெதிரிலே காவு கொடு. அப்படிச் செய்தால், இரத்த பலிக்கு எதிராகப் பேய் நம்பிக்கைத் துரோகம் இழைக்காது. அந்தப் பொல்லாத பேய் ராங்கியைப் பிடித்து விட்டது. எத்தனை நல்ல பெண் ராங்கி! என்னெதிரே நீ சேவலைக் காவு கொடுத்தால், அது ஏமாற்றாது. கவலைப்படாதே. எல்லாம் சரியாகி விடும்'' என்றான்.

ரேம்பா ஏதோ சொல்ல வாயெடுத்தான். ஆனால் சொல்ல நினைத்தது சொல்ல வந்தால் தானே? இனி அதிகத் தொல்லை கிடையாது. சேவல் ஒன்றைக் காவு கொடுக்க வேண்டும். காவு வாங்கிக் கொண்டபின், பேய் தானாக ஓடிப் போய் விடும். வீடா பூசாரி சொல்வது எப்பொழுதுமே பொய்ப்பதில்லை. இதுவும் பொய்க்காது. மெய்யாகவே பேய் ஓடிவிடும். ராங்கி உடல்நலம் அடைந்து விடுவாள். ஆனால்...ரேம்பாவின் வாயிலிருந்து சொல்லே எழும்பவில்லையே, ஏன்?

வீடா தனக்குள் ஏதோ முணுமுணுக்கலானான். அவனது சிடன் முறத்திலிருந்து அரிசியை எடுத்து ஒவ்வொன்றாக விட்டெறியலானான். ''போய் வா, ரேம்பா! பிடித்திருக்கும் பேய்க்கு வெள்ளைக் கோழி காவு கொடு. அப்புறம் அது கிட்ட வராது. ராங்கி சட்டு புட்டுன்னு குணமாகி விடுவாள். ராங்கிக்கு யாரும் தீங்கு இழைக்க முடியாது. இந்தப் பொல்லாத பேய்களுக்கு நான் எத்தனை தடவைதான் சொல்வது? கிராமத்தில் யாருக்கும் தொந்தரவு கொடுக்கக் கூடாது என்று ஆயிரம் தடவை சொல்லியிருப்பேன். கேட்டால்தானே? இருக்கட்டும், சொல்கிறேன். இந்தப் பங்குனி போகட்டும். இதுகளை ஒரு கை பார்த்து விட்டு மறு காரியம் பார்க்கிறேன். எல்லாவற்றையும் இலவ மரத்திலே இலைகளோடு இலைகளாகக் கட்டிப் போட்டு விடுகிறேன். கிழக்கத்தி வெய்யில் கொஞ்சம் கன்னுன்னு உறைக்கட்டும்; தெற்கத்திக் காற்று சற்று அடிக்கட்டும். அப்புறம் ஒவ்வொன்றின் கண்ணிலும் விரலைவிட்டு ஆட்டி வைக்கிறேன்!'' என்றான்.

ரேம்பா இதுவரை பேசாமல் நின்று கொண்டிருந்தான்.

''போ, ஏன் நிற்கிறாய்? போய் வா, இங்கிருந்து!'' என்றான் வீடா பூசாரி.

''பூசாரி ஐயா! இந்த வருஷம் நெல்கூடச் சரியாக விளையவில்லை. ஐம்பது மூட்டை கண்ட இடத்தில் பதினைந்து மூட்டை கிடைப்பதே பெரும்பாடாகி விட்டது. கடலைப் பயிர் பனி பெய்து வீணாகிவிட்டது. கையிலே காசும் கிடையாது. கிராமத்திலே கூலி வேலையும் கிடைக்கவில்லை. வெள்ளைச் சேவல் எங்கிருந்து கொண்டு வருவேன் நான்? எனக்கு ஏதும் வழி தோன்றவில்லையே!'' என்று திகைத்தான் ரேம்பா.

வீடாவின் முகம் கடுமையாயிற்று. தனது குத்தும் பார்வையால் அவனைப் பார்த்துக்



கொண்டே, "உனக்கு ஏதும் வழி தோன்றவில்லையென்றால், எனக்கும் ஏதும் வழி தோன்றவில்லை. சேவல் காவு கேட்பவரிடமே சொல்லிக் கொள். நான் என்ன செய்வது?" என்று கையை விரித்தான்.

"என் நிலை தெரிந்தும் பேய் பெரிய மனசு செய்யவில்லையே கேட்க வில்லையே! நான் எத்தனையோ வேண்டிக்கொண்டு பார்த்து விட்டேனே!" என்றான் ரேம்பா.

"நான் என்ன செய்வது? பொல்லாத பேய் அது. சேவலைக் காவு வாங்கிக் கொள்ளாமல் விடாது."

"அடுத்த வருசம் வரை பொறுத்துக் கொள்ளச் சொல்லக் கூடாதுங்களா?"

"அது என் பேச்சுக்கு மதிப்புக் கொடுத்திருந்தால் ராங்கியைத் தொட்டிருக்குமா? பொல்லாத பேய், அப்பா அது பொல்லாத பேய்! என்ன சொன்னாலும் அது காதில் வாங்கிக் கொள்ளாது. சேவலுக்கு நீ ஏதாகிலும் வழிவகை செய்துதான் ஆக வேண்டும்!"

ரேம்பா வருத்தமே உருவாக அங்கிருந்து புறப்பட்டான். லீடா ஏதாவது நீறு மந்திரித்துக் கொடுத்தால், எல்லாம் தானாகச் சரியாகி விடும் என்று அவன் எண்ணியிருந்தான். அல்லது அவன் மந்திரம் ஓதி வேப்பிலை அடித்துக் கொடுத்தாலும் பயன் படலாம் என்றும் நினைத்தான். ஆனால் அவன் அப்படி ஏதுவுமே செய்யவில்லையே! அவனும் அல்லவா வெள்ளைச் சேவல் காவு கொடுக்க வேண்டுமென்று சொல்லி விட்டான்! ஆமாம், சேவல் எங்கிருந்து வருமாம்? கையில் காசு இல்லை, வீட்டில் நெல் இல்லை....

மேலும் மூன்று நாட்கள் சென்று விட்டன. ரேம்பாவின் மனைவிக்கு நாளுக்கு நாள் உடல் சீர்கேடுற்றுக்கொண்டே வந்தது. பேச்சுக் குரல்கூட வரவர க்ஷீணித்து விட்டது. கஞ்சியோ கூழோகூட உண்ணக் கிடைக்கவில்லை. உடலில் வலு எங்கிருந்து உண்டாகும்? கொஞ்சம் ஜுரம் இறங்கினால், சோற்றோடு சிறிது பச்சைக் காய்கறி, கீரை சேர்த்துக் கொடுத்துப் பார்க்கலாம். நாளாவட்டத்தில் நோயும் குணமாகிவிடக் கூடும். உடலினுள் சிறிது வலு ஏறக் கூடும். ஆனால் வந்த ஜுரம் இறங்கும்வழியாகவே காணோமே! என்ன செய்வது?

பொறுத்துப் பொறுத்துப் பார்த்தான் ரேம்பா, பொறுமைக்கும் ஓர் எல்லையுண்டல்லவா? எனவே, எங்கிருந்தாவது வெள்ளைச் சேவல் கொண்டு வந்தே தீருவது என்று உறுதி பூண்டு புறப்பட்டான்.

'எப்பாடுபட்டாவது ஒரு வெள்ளைச் சேவலைத் தேடிப் பிடித்துக் கொண்டு வந்து தானாக வேண்டும். கிராமத்தார்கள் கடன் கொடுக்காவிட்டால் என்ன? இன்னொரு கிராமத்தில் கிடைக்காமலா போய் விடும்? அங்கும் இல்லையென்றால் இன்னொரு கிராமத்தைப் பார்த்தால் போகிறது! எப்படியும் இன்று ஒரு வெள்ளைச் சேவலோடுதான் வீடு திரும்ப வேண்டும்.' - அவன் நடையோடு நடை சேர்த்து மனம் இப்படி நடை போட்டது.

நடுப் பகல் நேரமாகி விட்டது. வானத்தில் வெண் முகில்கள் படையெடுத்து வந்தன. ஓரிடத்தில் நிலைத்தும் நின்றுவிட்டன. ரேம்பா காட்டுப் பாதையைக் கடந்து, வயல் வெளிகளைத் தாண்டி, வாய்க்காலில் இறங்கி ஏறி அடுத்த கிராமத்துக்குப் போய்ச் சேர்ந்தான்.

எத்தனை சல்லடை போட்டுச் சலித்தும் வெள்ளைச் சேவல் கிடைக்க வில்லை. அவன் அதிர்ஷ்டத்தை என்னவென்பது? அவன் அதிர்ஷ்டம் நன்றாயிருந்தால், ராங்கி எதற்கு நோய்வாய்ப்படப் போகிறாள்? அவன் துரதிர்ஷ்டக்காரனாக இருக்கக் கொண்டு தானே அவள் நோய்வாய்ப்பட்டாள்? நோய்வாய்ப்பட்டதும் எப்போது? வீட்டில் ஒன்றும் இல்லாத பொழுதல்லவா? இதிலிருந்தே அவன் அதிர்ஷ்டம் தெரியவில்லையா? பட்ட காலிலே படும், கெட்ட குடியே கெடும் என்பது போல, அவளை நோய் படுத்துவது போதாமல் பேய் வேறு பிடிப்பானேன்? வெள்ளைச் சேவல் காவுகொடுக்காமல் ஒன்றும் நன்மை ஏற்படாது போலிருக்கிறதே!

எதிரே கிராமம். மண்ணாலான சிறிய சிறிய வீடுகள். எண்ணிக்கையில் ஏழெட்டு பத்து இருக்கும். அங்கிருந்து பன்றிக் கும்பல் ஒன்று உறுமிக் கொண்டு ஓடியது. ரேம்பா அந்தப் பக்கம் பார்த்தான். சாணி மேட்டில் ஒரு வெள்ளைச் சேவல் நின்று கொண்டிருந்தது. காலால் கிளறிப் புழு பூச்சிகளை மேய்ந்து கொண்டு. என்ன வெளுப்பு! என்ன வெளுப்பு. கொக்குப்போல!

ரேம்பாவின் மனத்திலே ஆசை கிளர்ந்து எழுந்தது. அவன் எத்தகைய பெரிய சேவல் வேண்டுமென்று ஆசைப்பட்டுக் கொண்டிருந்தானோ, அத்தனை பெரியதாகவே இருந்தது அது. அவனால் தன்னை அடக்கிக் கொள்ள முடியவில்லை. அப்பா! கடைசியில் சேவல் கிடைத்துவிட்டது!

'கொக்கரக்கோ!" — தன்னைப் பிடிக்க வந்தவனிடமிருந்து உயிர் தப்ப இறக்கைகளைப் படபடவென்று அடித்துக்கொண்டு கூவியது சேவல்.

ஆனால்....சிறிது நேரத்துக்கெல்லாம் அச் சேவல் அவன் மடியில் காட்சி அளித்தது. இதன் சொந்தக்காரனைத் தேடிப் பிடிக்க வேண்டும். இதைக் கேட்டு வாங்கிச் செல்ல வேண்டும் என்று ரேம்பா யோசித்துக்கொண்டிருந்த போதே பின்னாலிருந்து யாரோ, "அரே, ரேம்பா! நீ பக்காத் திருடனாக இருப்பாய் என்று இதுவரை எனக்குத் தெரியாமலே போய் விட்டதே!" என்றார்கள்.

ரேம்பாவின் உடலில் தீப்பற்றினாற் போல் இருந்தது. அவன் கொதித்துக் கூறினான்: "டேய்! நாவை அடக்கிப் பேசு! ஏழு தலைமுறையாக எங்கள் குடும்பத்தில் யாருமே திருடியதில்லை. திருடன் என்று மறுமுறையும் சொன்னால் தலையைச் சீவி விடுவேன்!"

"முழுப் பூசணிக்காயைச் சோற்றில் மறைக்க ஏன் பார்க்கிறாய்? இப்பொழுது நீ செய்தது பெரிய திருட்டு. பகற் கொள்ளை. நீ பக்காத் திருடன்!"

ரேம்பாவுக்கு ஆத்திரம் பற்றிக் கொண்டு வந்தது. தொண்டை கிழியக் கூச்சலிட்டான்: "நான் திருடன் என்று உன்னால் நிரூபிக்க முடியுமா? நான் எப்பொழுதாவது திருடியிருக்கிறேன் என்று யாராவது துணிந்து சொல்ல முன் வருவார்களா?"

"ஆனால் சேவல் என்னுடையதாயிற்றே! அதை எடுத்துக் கொண்டு நீ ஓடவல்லவா பார்த்தாய்?" என்றான் அந்த மனிதன்.

# மங்கலாயிருப்பதை பளபளப்பாக்க

# கார்டினல் பாலிஷ்

உங்கள் வீட்டுத்தரைகள் மங்கலாகவும் அசுத்தமாகவும் இருக்கின்றனவா? அவற்றிற்கு ரெட் கார்டினல் பாலிஷ் மூலம் உயிர் கொடுத்து ஒளி பெறச் செய்யுங்கள். ரெட் கார்டினல் பாலிஷ் உடனே தரைகளுக்கு செந்நிற ஒளி கொடுத்து பிரகாசிக்கச் செய்கிறது. சாதாரணமினுமினுப்பற்ற கல் தரையிலும் சிமிட்டித் தரையிலும் பரீட்சை செய்து பாருங்கள். ரெட் கார்டினல் பாலிஷ் சீக்கிரத்திலேயே மங்கலான தரைகளைப் புதியதோர் செந்நிற ஒளியுடன் பிரகாசிக்கும் படியாகச் செய்துவிடும்.

உங்கள் வீட்டுத்தரைகள் உயிருடன் கூடிய ஒளிபெற இன்றே ரெட் கார்டினல் பாலிஷை உபயோகியுங்கள்.

அட்லாண்டிஸ் (ஈஸ்ட்) லிமிடெட் (இங்கிலாந்தில் ஸ்தாபிக்கப்பட்டது)






ASP/ABF-25 TAM

''இல்லை. இதை நான் எடுத்துக் கொண்டு உன்னிடம் வரத்தான் எண்ணினேன். ஓட நினைக்க வில்லை. என் ராங்கி நோய்வாய்ப்பட்டுக் கிடக்கிறாள். பேய் கனவில் வந்து அவளைப் பயமுறுத்துகிறது. வெள்ளைச்சேவலை அதற்காகத்தான் நான் தேடிக்கொண்டிருந்தேன்'' என்றான் ரேம்பா.

''அப்படியா? சரி, இதன் விலை என்ன தருவாய்?'' என்று கேட்டான் அந்த மனிதன்.

''இவ்வருசம் விளைச்சல் சரியாயில்லை. அடுத்த வருசம் நன்றாக விளைந்தால் உனக்குத் தோன்றும் விலையை வாங்கிக் கொள்!'' என்றான் ரேம்பா.

''நீ திருடன் மட்டுமல்ல. வஞ்சகனும்கூட. சேவலைத் திருடி எடுத்துக் கொண்டு ஓட முயன்றாய். கையும் களவுமாகப் பிடிபட்டதும் பாசாங்கு செய்கிறாய். எனக்குத் தெரியாதா உன் கெட்ட புத்தி?'' என்றான் அம்மனிதன்.

''இல்லை, நான் ஆணை வேண்டுமானாலும் இடுகிறேன்!''

''திருடனின் ஆணையை யார் நம்புவார்கள்?'''

''நான் திருடனா? திருடனா நான்?'' ரேம்பாவின் விழிகள் தீயைக் கக்கின. பூமியே தட்டாமாலை சுற்றுவது போல் இருந்தது.

கோப மிகுதியால் அவன் உடல் வெட வெட வென்று ஆடியது. பலம் கொண்ட மட்டிலும் உரக்கக் கத்தினான்: ''நான் என்ன திருடனா?''

''ஆம், திருடன்தான். ஒரு தடவை என்ன, ஒன்பதினாயிரம் தடவை சொல்லுவேன். நீ திருடன்தான். திருடன், திருடன், திருடன்!''

இதைக் கேட்டதும் ரேம்பா தரையில் வைத்திருந்த தன் கோடரியைக் கையில் எடுத்துக் கொண்டான். கண் மூடிக் கண் திறக்கும் நேரத்துக்குள் அவன் கழுத்தைக் குறி பார்த்துத் தன் முழு பலத்தையும் உபயோகித்து வீசினான்....அடுத்த கணம் அவன் தலை துண்டித்து விழுந்து தரையை முத்தமிட்டது.

''கொக்கரக்கோ!''

சேவல் அவன் கையிலிருந்து விடுபட்டு எப்படி எப்பொழுது 'தப்பினோம், பிழைத்தோம்' என்று ஓடியதோ, அவனுக்குத் தெரியாது.

வெட்டுண்ட கழுத்திலிருந்து ரத்தம் ஆறாகப் பெருகி வந்தது. ரேம்பாவின் முகமெல்லாம் திலும் ரத்தத் திவலைகள் தெறித்தன. தலையற்ற உடல் ஒரு தடவை தடுமாறியது. பிறகு வெட்டுண்ட மரத்தைப் போலப் பூமியில் சாய்ந்து விட்டது. ரேம்பா தன் முகத்தில் தெளித்த ரத்தத்தைத் துடைத்துக் கொண்டான். பைத்தியக்காரனைப் போல, ''திருடன் என்று சொல்லுவாயாடா? என்னைத் திருடன் என்று சொல்லுவாயாடா?'' என்று கத்திக் கொண்டே நடந்தான்.

**வ**ழக்கு மிகத் தெளிவாயிருந்தது. கீழ்க் கோர்ட்டில், செஷன்ஸ் கோர்ட்டில் எல்லா இடத்திலும் ரேம்பா ஒப்புக் கொண்டான்: 'என்னைத் திருடன் என்று சொன்னால் கொல்லாமல் விடுவேனா?' என்று கேட்டுத் தான் குற்றவாளிஎன்பதைநிரூபித்துக்கொண்டான்.

பல மாதங்கள் வழக்கு நடந்தது. வாக்குமூலங்கள் வாங்கப்பட்டன. கடைசியில் நீதிபதி தூக்குத் தண்டனை என்று தீர்ப்பளித்து விட்டார். நீதிபதி அளித்த தண்டனையை ஏற்கும் பொழுது ரேம்பாவின் கண்கள் சிறிதும் மாறுபாடு அடையவில்லை; கலங்கவில்லை. அவன் இந்த விஷயங்களுக்கெல்லாம் அப்பாற்பட்டவனாகவே தோற்றமளித்தான்.

நாளை ரேம்பாவுக்குத் தூக்குத் தண்டனை அளிக்கப்பட வேண்டிய நாள். அவன் மௌனமே உருவாக மன உளைச்சல் ஏதும் கொள்ளாமல் உட்கார்ந்திருந்தான். அவன் முகத்திலே அமைதி குடிகொண்டிருந்தது. நாளை தன்னைத் தூக்கில் ஏற்றி விடுவார்கள் என்பது அவனுக்குத் தெரியும். ஆயினும் அவன் அமைதியே உருவாயிருந்தான்.

வார்டர் ஹரிலால் அவன் மீது அநுதாபம் கொண்டு, தனக்கு நேரம் கிடைக்கும் பொழுது அவனுடன் வார்த்தையாடுவது உண்டு. நாளையோ அவனுக்குத் தூக்குத் தண்டனையே கிடைக்க விருக்கிறது.

''ரேம்பா! உன்னை நினைத்தால் எனக்கு மிகவும் வருத்தமாக இருக்கிறது!'' என்றான் ஹரிலால்.

''கோர்ட்டாருக்கு விஷயம் விளங்கவில்லையே, நான் என்ன செய்வது? உண்மையை அவர்கள் நம்பவில்லை, சாட்சியும் வாட்சியும் கேட்கிறார்களே ஒழிய உண்மையை எங்கே கவனிக்கிறார்கள்? இந்த நிலையில் நாம் வருந்தி என்ன பயன்?'' என்றான் ரேம்பா.

அதற்கு மேல் ஒன்றும் பேசாமல் அவன் மௌனம் சாதித்து விட்டான். ஹரிலாலுக்கும் ஒன்றும் பேசத் தோன்றவில்லை. ரேம்பா என்ன யோசித்துக் கொண்டிருக்கிறான்?

''செய்தி அனுப்பியாகி விட்டது. உன் பெண்சாதியும் வரவில்லை. வேறு உன்னைச் சேர்ந்தவர்களும் வரவில்லை'' என்று பேச வேண்டுமே என்பதற்காகச் சொன்னான் ஹரிலால்.

ரேம்பா தலை தூக்கி அவனைப் பார்த்தான். பிறகு, ''இந்த மனிதர்களுடைய கோர்ட்டுக்கும் சிறைச்சாலைக்கும் அவள் ஏன் வரப் போகிறாள்? ஆண்டவனின் நீதி ஸ்தலத்திலே நியாய விசாரணை நடக்கும் போது அவள் எனக்காகச் சாட்சி சொல்ல வருவாள். வீடா பூசாரிகூட என் தரப்பில்தான் சாட்சி சொல்லுவார்!'' என்றான். பிறகு ஏதோ தீவிரமான யோசனையில் ஆழ்ந்து விட்டான்.

இந்த மனிதன் என்ன யோசிக்கிறான்? எப்படி யோசிக்கிறான்? ஒன்றும் புரியாத ஹரிலால் மௌனம் சாதித்தான்.

ரேம்பா அவனையே கூர்ந்து கவனித்துக் கொண்டு சொல்லலுற்றான்: ''தேவை ஏற்படும் போது ஒரு பொருளை எடுத்துக் கொள்வது திருட்டாக ஆகாது. உரான்வ் ஆதிவாசிகளான நாங்கள் நிலம்-நீச்சு, பொருள்களை வெவ்வேறாக வெவ்வேறு மனிதர்களுக்கு உரிய சொத்துக்களாக நோக்குவதில்லை. ஆனால் இப்பொழு தெல்லாம் காலம் கெட்டுக் கிடக்கிறது. உண்மைப் பேச்சை யாருமே காதில் வாங்கிக் கொள்வதில்லை. கேட்டு நடப்பதும் இல்லை.''

''உன் மனைவி வந்திருந்தால் கடைசிக் காலத்திலாவது நீ அவளைப் பார்த்திருக்கலாம் அல்லவா?'' என்றான் ஹரிலால்.

'நான் நாளைக்கே அவளிடம் போவேன். உனக்குத் தெரியாது. நான் சுழல் காற்றாக மாறிச் சுழன்று சுழன்று சென்று அவளை அடைவேன். இந்த உடல் இருக்கிறது. அதனால் நீங்கள் அவளிடம் போகவொட்டாமல் தடுக்கிறீர்கள். இந்த உடல் போய் விட்டால், அப்புறம் உங்களால் என்னைத் தடுத்து நிறுத்த முடியாதல்லவா?'' என்றான் ரேம்பா.

''நான் விசாரித்துத் தெரிந்து கொண்டு விட்டேன். உன் மனைவி ஆனந்தமாக வாழ்கிறாள். ஓய்வும் தருணமும் கிடைத்தால் ஒரு ஞாயிற்றுக் கிழமை நான் உன் கிராமத்துக்குப் போய் வருவேன். அங்கு சென்று உன் மனைவியிடம் எல்லாச்செய்தியையும் சொல்லுவேன். டாங்கர் பன்ஸாலியில் இறங்கித்தானே உன் கிராமத்துக்குப் போக வேண்டும்?'' என்று கேட்டான் ஹரிலால்.

''ஆமாம். டாங்கர் பன்ஸாலியில் இறங்கி மேற்காகப் போக வேண்டும். சற்றுத் தூரம் போனால் பிர்கோடா ஆறு வரும். அந்த ஆற்றைத் தாண்டினால், எங்கள் கிராமம். அங்கே ராங்கி என்று கேட்டால் சொல்வார்கள்.''

''உன் மனைவிக்கு நீ ஏதாவது சொல்ல விரும்பினால் சொல்லு. நான் சொல்லி விடுகிறேன்!'' என்றான் ஹரிலால்.

ரேம்பா அவனைப் பார்த்த பார்வை ஞானி ஒருவன் அஞ்ஞானியைப் பார்ப்பது போல் இருந்தது. ''நான் உன்னிடம் என்னசொல்லுவது? என் பேச்சு உனக்குப் புரியாது. நான் கனவிலே அவளைக் காண்பேன். அப்பொழுது ஏதாவது சொல்ல வேண்டியிருந்தால் சொல்லிக் கொள்கிறேன்'' என்றான்.

இன்று ஹரிலால் ரேம்பாவின் கிராமத்துக்குப் போகிறான். அவன் டாங்கர்பன்ஸாலி ரயில் நிலையத்தில் இறங்கி மேற்கு நோக்கிச் சென்ற ஒற்றையடிப் பாதையைப் பிடித்துக் கொண்டு முன்னேறினான். பிர்கோடா ஆற்றைக் கடந்து ரேம்பாவின் கிராமத்துக்குப் போய்ச் சேர்ந்தான்.

ராங்கியைக் கண்டு பிடிக்க அதிக நேரம் ஆகவில்லை. அவன் தலை குனிந்து அவளது குடிசைக்குள் நுழைந்தான். குடிசை வாசலில் ஓர் ஆடு கட்டியிருந்தது. அதற்குப் பக்கத்திலேயே ஒரு கலப்பை வைத்திருந்தது. அவன் ராங்கியைப் பார்த்தான்.

அவள் மடியில் மூன்று வயதுக் குழந்தை ஒன்று இருந்தது. பக்கத்திலேயே சப்பணம் கூட்டி உட்கார்ந்து கொண்டு இரண்டு குழந்தைகள் நீராகாரம் சாப்பிட்டுக் கொண்டிருந்தன. அவற்றுக்கு வயது முறையே பத்தும் எட்டும் இருக்கும். ரேம்பா தனக்குக் குழந்தை குட்டிகள் கிடையாது என்று சொல்லியிருந்தானே!

ஹரிலால் ராங்கியோடு பேச்சுக் கொடுத்தான். அவளுக்கு ரேம்பாவைப் பற்றிச் சொன்னான். ராங்கி கேட்டுக் கொண்டிருந்தாள். கேட்கக் கேட்க அவள் விழிகள் நீரைப் பெருக்கின. கடைசியில் ஹரிலால் அவளைப் பார்த்து, ''ஆமாம். ஆனால் இதுவரைக்கும் நீ ரேம்பாவைப் பார்க்கவே வரவில்லையே! ஏன்? வந்திருந்தால் ஒரு முறையாவது அவனைப் பார்த்திருக்கலாம் அல்லவா?'' என்றான்.

''இந்தக் குழந்தைகள்? இவர்களைத் தனியே விட்டு விட்டு நான் எப்படி வரமுடியும்? புறப்படுவது என்ற பேச்சை எடுத்தால் இவர்கள் என் கால்களைக் கட்டிக் கொண்டு அழத் தொடங்கி விடுகிறார்களே! இந்தக் குழந்தைகள் காரணமாகத்தான் என்னால் எங்குமே போக முடியவில்லை!'' என்றாள் ராங்கி.

அவள் கண்களிலிருந்து வழிந்த நீர் கன்னங்கள் வழியே பெருகி ஓடியது. அவள் அன்புடன் அந்த மூன்று குழந்தைகளையும் ஒரு முறை பார்த்தாள். இடுப்பிலிருந்த குழந்தையை வாரி எடுத்து ஒரு முறை முத்தமிட்டாள். பிறகு கண்ணில் பெருகி வந்த நீரைத் துடைத்துக் கொண்டாள்.

''இந்தக் குழந்தைகள்?''

ஹரிலாலின் குரலில் 'யார்' என்ற கேள்வி தொனித்தது.

''ஜவராவின் குழந்தைகள் இவை!''

''ஜவராவா ? யார் அது?

''ஜவரா யாரா?'' ராங்கி வியப்புத் தோயக் கேட்டாள் ''ஜவரா யாரென்று உனக்குத் தெரியாது? அந்த ஜவராவைத்தான் ரேம்பா கொன்று போட்டு விட்டான். அவனுடைய குழந்தைகள்தான் இவை. இவற்றின் தாய் எப்பொழுதோ செத்துப் போய் விட்டாள். இவர்களை நான் பார்த்துக் கொள்ளாவிட்டால் வேறு யார் பார்த்துக் கொள்வார்கள்? இனி எனக்கும் யார் இருக்கிறார்கள்? இந்த மூன்று குழந்தைகள்தானே?'' பெருமை மிகுந்த அவள் முகத்தில் தெய்விகமான தாய்மையொளி பளிச்சிட்டுப் பிரகாசித்தது.

# தரத்தில் உயர்ந்தது




ருசிக்கச் சிறந்த
வகையில் கலவை
செய்த ப்ருக் பாண்ட்
கபே பிராண்டு பிரெஞ்சு
காபி இப்பொழுது எங்கும்
கிடைக்கும். நறுமணத்
தையும் சுவையையும்
காக்க இவை ஸெலபோன்
பைகளில் விற்பனை
செய்யப்படுகின்றன.
பிரெஞ்சு காபியில் நல்ல
மணம், சுவை இவற்றைப்
பெற ப்ருக் பாண்ட் காபி
யையே விரும்பிக் கேளுங்கள்.
இதுவே நீங்கள் கொடுக்கும்
பணத்திற்குச் சிறந்தது.



## ப்ருக் பாண்ட்
# கபே பிராண்டு
## பிரெஞ்சு காபி

JWT80 403

# படித்துப் பாருங்கள்



## ரஸிகன் கதைகள்

ஏறக்குறைய கால் நூற்றாண்டுகளுக்கு முன் ரஸிகன் என்ற புனை பெயரில் ஸ்ரீ ரகுநாதய்யர் எழுதிய பத்துச் சிறு கதைகள் இத்தொகுதியில் இடம் பெற்றுள்ளன.

வாழ்க்கையையும் மனித சுபாவத்தையும் கூர்ந்து நோக்கி, ரசித்து அந்த ரஸாநுபாவத்தைத் தமக்கே இயல்பான நடையில் 'பலாச்சுளை'யென இனிக்க இனிக்க விண்டு வைக்கிறார் ரஸிகன்.

நமது பாரதப் பண்பாட்டுக்கும் கல்வி கேள்விகளுக்கும் இருப்பிடமாய் விளங்கும் ஸ்ரீ நா. ரகுநாதய்யர் அவர்கள் புகழ் பெற்ற 'ஹிந்து' பத்திரிகையின் ஆசிரியப் பொறுப்பேற்றுத் திறம்பட நிர்வகித்த பெருமை உடையவர். ஆங்கிலத்தில் மட்டும் அல்லாது தமிழிலும் எழுதுமாறு இவரைத் தூண்டியவர் 'பாரத மணி'யின் ஆசிரியரான காலஞ்சென்ற கா.சி. வேங்கடரமணி ஆவார்.

இலக்கியம் என்பது என்ன? சமூகத்தை அப்படியே தத்ரூபமாகப் பிரதிபலிக்கும் காலக் கண்ணாடி தானே? இந்த இலக்கணத்தைக் கொண்டு பார்க்கப் போனால், இத் தொகுதியில் இடம் பெற்றுள்ள பெரும்பாலான கதைகள் அரை நூற்றாண்டுகளுக்குட்பட்ட நம் தமிழர் வாழ்க்கையைப் பிரதிபலித்துக் காட்டுகின்றன; மக்களின் மனப் போக்குகளைப் படம் பிடித்துக் காட்டுகின்றன.

இந்தக் கதைகளை இவ்வளவு திறம்படப் புனைவதற்கு ஆசிரியரின் பரந்த அநுபவமும், கூர்ந்த நோக்கும், அவர் ஊறித் திளைத்த சமூகமும் கைகொடுத்து உதவுகின்றன. ஆசிரியரின் மனோ தர்மம் அழகாக வேலை செய்கிறது. கதையின் ஜீவநாடியைப் பிடித்துக் கொடுத்துப் படிப்பவர்களை ரசிக்கவைக்கிறது. 'ரஸிகன்' என்று அவர் சூடிக் கொண்ட புனை பெயர் ரசிகர்களின் பாராட்டைப் பெறுகிறது.

'விடுமுறை' என்னும் கதையிலே பச்சை உள்ளங்களின் மனப்பாங்கைப் பிரமிக்கத்தக்க வகையில் சித்திரிக்கிறார். கிராமச் சூழ்நிலை கண் முன்னே காட்சி அளிக்கிறது. சிறுவர்களின் வேடிக்கை — விளையாட்டுக்கள், புகை நடுவிலே தீயெனப் பகை நடுவிலே விடாது நிற்கும் அன்பு, தூய பாசம் ஆகியவற்றை அருமையாகக் கொணர்ந்து நிறுத்துகிறார். இக்கதையிலே வரும் வெங்கிட்டுவும் சீனுவும் என்றென்றும் மறக்க முடியாத பாத்திரங்கள்.

'கூத்தாடி' என்னும் கதை அந்தக் காலத்துக் கூத்துகளை நம் கண் முன் கொண்டு வந்து நிறுத்துவதோடு, நாடகத்துக்குள் நாடகமாக ஒரு நாடகத்தையே நடித்துக் காட்டி, ரசிகர்களின் மன அரங்கில் நிரந்தர நாடகமாக நிலைக்கிறது. நாடகமேடையை நிஜமாக்கி, அந்த நிஜ வாழ்க்கையில் ஒரு நாடகத்தை நிகழ்த்தி, கதையில் வரும் குஞ்சிதபாதத்தின் மனத்தில் மட்டும் அல்லாமல், படிப்பவர்களின் உள்ளத்திலும் என்றுமில்லா ஆனந்தத்தை நிலவச் செய்கிறது.

'ஊருக்குப் பெரிய மனுஷர்' பணக்காரராகும் விந்தையையும் இளைய தாரத்தின் கைப் பொம்மையாகித் தமது புதல்வனைத் தனிக் குடித்தனம் நடத்த வைக்கும் வேடிக்கையையும், அவர் உள்ளத்தில் இழையோடும் குடும்ப பாசத்தையும் வெகு சுவாரஸ்யமாகச் சித்திரித்துக் கொண்டு போகும் ஆசிரியர், இளைய தாரத்தின் அகட விகட சாமர்த்தியத்தையும் நிறம்படமெனக் காட்டுகிறார். உள்ளத்து ஆசாபாசங்களும், அழுகை முதலிய உணர்ச்சி எப்படியெல்லாம் ஆட்டம் காட்டுகின்றன என்பதையும் இக்கதையிலே காண்கிறோம்.

'வெகு நாளைக் குடியானவன்' என்னும் கதை அந்தக் காலத்துக் கிராம வாழ்க்கையையும், அந்த அமைதியிலே, சலனமற்ற தடாகத்தில் சிறு கல்லென விழுந்து குழப்பத்தை விளைவிக்கும் குணம் சிறிது சிறிதாக வளருவதையும் வெகு தத்ரூபமாகச் சுட்டிக் காட்டுகிறது. அந்தக் காலத்துப் பரம்பரைக் குடியானவன் மாறும் சமூகத்தை எப்படி நோக்குகிறான் என்பதை மாரிமுத்து என்னும் குடியானவனது பாத்திரத்தின் வாயிலாகச் சித்திரித்துக் காட்டுகிறார் ஆசிரியர்.

'மாப்பிள்ளை' என்னும் கதையிலே பல வகை மாப்பிள்ளைகளைக் காண்கிறோம்; மாப்பிள்ளைகளின் முறுக்குகளைக் காண்கிறோம்.. 'உலகம் பலவிதம்' என்பது போல மாமனார் வீட்டு மாப்பிள்ளைகள் பலவிதம் என்பதையும் அறிகிறோம்.

இவ்வளவு கதைகளிலும் ஒரு விசேஷம் என்னவென்றால், அந்தந்தப் பாத்திரங்கள் தங்கள் சமூகத்தில் வழங்கும் கொச்சைமொழியில் — உயிருள்ள மொழியில் பேசி ரசிகர்களோடு உறவாடுகிறார்கள். ரஸிகன் இந்தப்



மனைவி: காலில் என்ன கட்டு? எப்படி அடிபட்டது?

கணவர்: 'ஒரு காரியம் நீங்கதான் செய்து கொடுக்கணும்' என்று ஒரு தடிப் பயல் காலில் வந்து விழுந்தான்!



"விடாமல் தினசரிகளைப் படித்து விட்டு இந்த உலகம் போகிற போக்கைக் கண்டு துக்கப்பட்டுக் கொண்டிருக்கிறேன் நான். என் மனைவி என்னடா வென்றால் சந்தோஷப் படுகிறாள்!"

பணியைத் திறம்படச் செய்திருக்கிறார். உயிரும் உணர்வும் நிறைந்த ரஸிகனின் இக் கதைகள் ரசிகர்களது உள்ளங்களைக் கவரும் என்பதில் சந்தேகம் இல்லை.

ஆசிரியர்: நா. ரகுநாதன்; பிரசுரம்: விக்னேச்வர பதிப்பகம், மயிலாப்பூர் சென்னை-4. & பெங்களூர்-3. விலை ரூ. 3.00.

## The Journal of the Music Academy - 1961

**1961**-ம் ஆண்டுக்குச் சம்பந்தமான நான்கு பகுதிகளையும் ஒன்றாகவே சேர்த்துச் சென்னை சங்கீத வித்வத் சபை வெளியிட்டுள்ள இச்சஞ்சிகை, சபையினது முன் ஆண்டு சஞ்சிகைகளைப் போல் - தரத்திலும் பொருளிலும் உயர் தன்மை பெற்று விளங்குகிறது. வித்வத் சபையின் அதிகார பூர்வமான வெளியீடாகையால், சபையின் வருடாந்திர இசை விழா பற்றிய முழு விவரங்களும் இதில் இடம் பெற்றுள்ளன. 1960 டிசம்பர் 1961 ஜனவரியில் சங்கீத கலாநிதி டி. கே. ஜெயராம அய்யர் அவர்கள் தலைமையில் நடைபெற்ற சங்கீத விழா தலைமை உரை, தொடக்க உரை முதலியவை இதில் சேர்க்கப்பட்டுள்ளன. நேரில் கேட்ட ஓராண்டுக்குப் பின் இவற்றை அச்சில் படிக்கும்போது விழாக் காலங்களில் சொல்லப்படும் கருத்துக்கள் காலம் கடந்த உண்மைகள் என்ற நினைவு எழுகிறது. சங்கீத விழாவின் இன்றியமையாத ஒரு பகுதியான சங்கீத விமரிசனங்களும், சர்ச்சைகளும் அப்போது படிக்கப்படும் ஆராய்ச்சிக் கட்டுரைகளும் தரத்தில் உயர்ந்தவை. மாணுக்கர்களுக்கு மிகவும் பயன்படுபவை. ஏன், வித்துவான்களுக்கும்கூட. அத்தகைய ஆராய்ச்சிக் கட்டுரைகளில் ஆறு இவ்விதழில் இடம் பெற்றுள்ளன. சிலப்பதிகாரக் காலத் தமிழக இசை நுணுக்கங்களைப் பற்றி ஆராய்ச்சிகள் நடத்தியுள்ள சங்கீத பூஷணம் திரு எஸ். ராமநாதனின் "இந்திய சங்கீதக் குறிப்புரைகள்" பற்றிய கட்டுரையும், பிரேந்திர குமார் ராய் சௌத்ரியின் "தான்ஸேன் தோற்றுவித்த இசை வழி" என்னும் கட்டுரையும், திரு யோகநரசிம்மம் எழுதியுள்ள "தீக்ஷிதரின் நவக்ரஹ க்ருதிகளின் இசைக் கட்டுக்கோப்பு பற்றிய கட்டுரையும், பித்தல்கோரா என்னும் இடத்தில் உள்ள புத்தவிஹார சிற்பங்களில் குறிக்கப்பட்டுள்ள 'ஸப்த தந்திரி வீணை'கள் பற்றி ஸ்வாமி ப்ரக்ஞானனந்தாவின் கட்டுரையும் ஆராய்ச்சியாளருக்கு ஒரு விருந்தென அமைந்துள்ளன. தாய்லாந்தில் பழக்கத்திலிருக்கும் சாஸ்திரீய முறை நடனங்கள் பற்றி ஓர் அருமையான கட்டுரை சஞ்சிகைக்குச் சிறப்பளிக்கிறது. நடன பாவங்களில் பலவற்றைப் படங்கள் மூலம் விளக்கியிருப்பது இக்கட்டுரைக்குக் கவர்ச்சியூட்டுகிறது.

கட்டுரைகளைத் தவிர ஸ்ரீ முத்துஸ்வாமி தீக்ஷிதர் இயற்றிய 'கோவிந்த ராஜம் உபாஸ்மஹே" என்ற முகாரி ராகக் கீர்த்தனையும், "ஸ்ரீ லக்ஷ்மீ வராஹம் பஜேஹம்" என்ற ஆபோகி ராகக் கீர்த்தனையும் வைணிக வித்துவான் ஏ. சுந்தரம் அய்யரால் பரிசோதிக்கப்பட்டு இச்சஞ்சிகையில் அளிக்கப்பட்டிருக்கின்றன. இவை இது வரை பிரசாரத்தில் வராதவை என்று தெரிகிறது. மைசூர் சதாசிவராயரின் "பாஹி, பாஹி ஸ்ரீ கஜானன' என்ற காமவர்த்தினி ராகக் கிருதியும் மற்ற வாக்கேயக்காரர்களின் நான்கு அபூர்வ வர்ணங்களும் காணப்படுகின்றன. வித்யார்த்திகளுக்கும், வித்துவான்களுக்கும் இவை பெரிதும் பயன்படும். இச் சஞ்சிகை சங்கீத உலகினுக்கு ஓர் அரிய பொக்கிஷமாகும்.

ஆசிரியர்: டாக்டர் வே. ராகவன், பிரசுரம்: மியூசிக் அகாடமி, மௌபரேஸ் ரோடு. சென்னை-14: விலை ரூ. 4.

## பாண்டியன் மகுடம்

**பா**ண்டிய நாட்டை வெற்றி கொண்ட பராந்தக சோழனுக்கு, பாண்டியனது மணி மகுடம் கிடைக்கவில்லை; ஈழத்துக்குச் சென்று விட்டது என்பது வரலாறு. அந்த வரலாற்றினைச் சிறிது மாற்றிக் காது மூக்கு வைத்துப் பாண்டிய மன்னர்களின் வீரத்துக்குக் கறை ஏற்படாத வகையில் ஒரு நவீனமாகப் புனைந்திருக்கிறார் திரு விக்கிரமன். தாம் எடுத்துக் கொண்ட கதையை வெற்றிகரமாக முடிக்கவும் முயன்றிருக்கிறார்

கற்பனை சேர்த்துப் புனையப்பட்ட இக்கதையிலே, ஒருருவம் படைத்த அண்ணன்—தம்பிகளைச் சிருஷ்டித்திருப்பது, உண்மை மகுடம், போலி மகுடம் என்று இரண்டு மகுடங்கள் செய்வித்து உண்மை மகுடம் ஈழ நாடு செல்லவில்லை, உண்மை மன்னன் ஓடவில்லை என்றெல்லாம் சொல்லி வீரத்துக்குப் பெருமை கூட்டுவது ஆகியவற்றைக் காண்கிறோம். ஆனால் அதே நேரத்தில் ஆசிரியர் கற்பனைக்குப் புதுமை கூட்டவில்லை என்பதையும் சொல்லாமல் இருக்க முடியவில்லை.

பழகிப் போன கற்பனைச் சுவடாக இருந்தாலும், விறுவிறுப்பாக ஓடும் இந்த நவீனத்திலே, மெய் பொற்றுக்கள் என்னும் சரளைக் கற்கள் தேவையில்லாத பல இடங்களில் காணக் கிடைக்கின்றன. அவைகளைக் களைந்திருந்தால் நன்றாயிருந்திருக்கும்.

ஆசிரியர்: விக்கிரமன்; பிரசுரம்: தமிழ்நாடு புத்தக நிலையம், ஸ்டேட் பாங்கு தெரு. சென்னை—2: விலை: ரூ. 2.00.

Printed & Published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited, at the Kalki Press, Kilpauk, Madras-10.
Managing Editor, T. Sadasivam.



நாள்முழுதும் உல்லாசமாயிருக்க...
ஹிமாலயா புக்கே
டால்கம் பவுடர்
பூமாரி பொழிந்த பூரிப்பு...நீராடி முடிந்த நேரத்திலே...ஹிமாலயா புக்கே டால்கம் பவுடரின் அணைப்பு...ஆஹாஹா, குன்றாத நறுமணம், குளித்தெழுந்த குதூகலம் நாள் முழுதும், நாள் முழுதும்!
இன்று டீக்கான புதிய டப்பாவிலே
குடும்பத்திலுள்ள யாவருக்கும் சாலச் சிறந்த டால்கம்.
RASMIC
Himalaya Bouquet
TALCUM POWDER
லண்டனிலுள்ள இராஸ்மிக சார்பாக இந்துஸ்தான் லீவர் லிமிடெடினால் இந்தியாவில் தயாரிக்கப்பட்டது.
HBP.5-X52 TM

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon